








23வது ஆண்டை நோக்கி
Towards 23rd Year in Publishing
www.canadauthayan.ca
UTHAYAN
உதயன்
Tel : 416-752-1524
Fax: 416-752-6703



உதயம் 1147 CHIEF EDITOR: R.N. LOGENDRALINGAM 30.03.2018 FRIDAY

# "பதவிகளுக்காக தமிழ் மக்களை ஏமாற்றிய கூட்டமைப்பு"

## யாழ்ப்பாண தினசரி "வலம்புரி"யின் ஆசிரிய தலையங்கம் விளக்கமளிக்கின்றது.

கடந்த 28-03-2018 புதன்கிழமை வெளியான தனது தினப்பதிப்பில் தமிழ்த் தேசிய கூட்டமைப்பின் போக்கைக் கண்டித்து யாழ்ப்பாணத்திலிருந்து வெளிவரும் "வலம்புரி"தினசரிப் பத்திரிகை பின்வருமாறு ஆசிரியதலையங்கத்தை தீட்டியுள்ளது.:-

(தொடர்ச்சி 5ம் பக்கம் பார்க்க!)



## இகுருவியின் இவ்வருட விருதுவிழாவில் யாழ்ப்பாணத்திலிருந்து இதயசத்திர சிகிச்சை நிபுணர் மருத்துவர் சி. முகுந்தன். மற்றும் மனிதநேய செயற்பாட்டாளர் கலாநிதி க. சிதம்பரநாதன் ஆகியோர்.





எதிர் வரும் ஏப்ரல் 6ம் திகதி வெள்ளிக் கிழமை மாலை 6.00 மணியளவில் Scarborough Convention Center மண்டபத்தில் இகுருவி நிறுவனம் நடத்தும் இந்த விருதுவிழா நடைபெறவுள்ளது. அதில் விருது வழங்கி கெளரவிக்கப்படுவதற்காக மேற்படி இதயசத்திர சிகிச்சை நிபுணர் டாடக்டர் சி. முகுந்தன் மற்றும் கலாநிதி க. சிதம்பரநாதன் ஆகிய இருவரும் யாழ்ப்பாணத்திலிருந்து கனடா வருகின்றனர்.

(உள்ளே 5ம் பக்கத்தில் விபரமான செய்தி)







## உலகத் தமிழ் பண்பாட்டு இயக்கத்தின் சின்னத்தை சட்டவிரோதமாக பயன்படுத்தும் எவருக்கு எதிராகவும் அதன் தலைமையகம் சட்டநடவடிக்கை எடுக்கும்.

(உள்ளே 5ம் பக்கத்தில் விபரமானசெய்தி)



## மிசிசாகா நகரில் பற்சிகிச்சை வழங்குவதில் முன்னணியில் திகழும் தமிழ் பேசுவோர் நிர்வாகத்தில் இயங்கும் பல் வைத்தியசாலை

### Dr. Beena George DMD, BDS. 905 542 9999

பல் வைத்திய நிபுணர் திருமதி பீனா ஜோர்ஜ் அவர்களை வைத்தியராகக் கொண்டு, மிசிசாகா மாநகரில் பற்சிகிச்சை வழங்குவதில் முன்னணியில் திகழும் தமிழ் பேசுவோர் நிர்வாகத்தில் இயங்கும் பல் வைத்தியசாலை, தற்போது புதிய நோயாளர்களையும் வரவேற்கின்றது. சென்னையிலும் கனடாவிலும் சுமார் 20 வருடசிகிச்சை வழங்கும் அனுபவம் கொண்ட இந்த வைத்தியசாலை 2275 Britannia Road, Unit # 10 Mississauga என்னும் விலாசத்தில் அமைந்துள்ளது. தொடர்புகொள்ள வேண்டி தொலைபேசி இலக்கம்:- 905 542 9999. (உள்ளே விபரங்கள் அடங்கிய விளம்பரம் காணப்படுகின்றது)



# சிறு விளம்பரங்கள் CLASSIFIED ADs

TEL : 416-752-1524
FAX : 416-752-6703

உதயனில் விளம்பரங்கள் இதயத்தில் பதிந்த ஓவியங்கள் அனேக வாசகர்களின் அபிமானத்தைப் பெற்ற பத்திரிகை உதயன்

## LOYAL PEST CONTROL

Licensed / Experienced Service Technician
உங்கள் வீடுகளில் மூட்டைப் பூச்சி, கரப்பான், பூச்சி, மற்றும் எலிகள் தொல்லையினை முழுமையாக ஒழித்திட எம்மை நாடுங்கள்

Residential, Commercial, Industrial Elimination of Roaches & Mice

RANJAN: (416) 464-2415

## COMPUTER REPAIR

Laptop computer repair, virus removal, data recovery, upgrading & any other troubleshooting, Network installation, Printer problems அனைத்து விதமான Computer திருத்த வேலைகளும் நியாயமான விலையில் உங்கள் வீட்டில் வந்து திருத்திக்கொடுக்கப்படும்.

PLEASE CALL : VARUNAN
(416) 894-6244

## GHURUS TOWING

Forklift / Machinery move
Local / Long Distance Towing
Recovery Specialist
Flatbed Service
Lockout Specialist
Booster service
Flat Tire

We pay scrap up to $1000

NIRMALAN (ROGER):
(416) 990-7777, (416) 984-7777

## ARSM TRUCK & FORKLIFT DRIVING SCHOOL

60 Nugget Ave. #9
Forklift Licence
வாரத்தில் 7 நாட்களும் அனுபவம் வாய்ந்த ஆசிரியர்களால் பயிற்சிகள் வழங்கப்படும்.
Special Price for A-Z Truck Traning
KUMAR: (416) 829-0603
(416) 297-5435

## TESOC MULTICULTURAL SETTLEMENT SERVICES

பின்வரும் சேவைகள் கட்டணமின்றி வழங்கப்படுகின்றன. இவை குடிவரவுத்துறையின் பொறுப்பில் நடைபெறும் பணிகளாகும்

* புதிய குடிவரவாளருக்கான ஆங்கிலம் கற்பித்தல் (LINC)
* பொறுப்பேற்றல், குடியுரிமை விண்ணப்பங்கள் நிரப்பல்
* பெண்களுக்கு உதவும் பெண்கள் திட்டம்
* சான்றிதழ்கள் மொழி பெயர்ப்பு
* ஆவணங்கள் உறுதிப்படுத்தல்
* வாழ்வியல்சார் கருத்தரங்குகள்

**வேலை தேடுகின்றீர்களா?**
நீங்கள் நிரந்தர வதிவுரிமையாளர் (Landed Immigrant) அல்லது அகதி நிலை பெற்றவர் (Convention Refugee) ஆயின் இத்திட்டம் வழியாக வேலை பெறலாம். எந்த வேலை பெற வேண்டுமானாலும் எம்மோடு தொடர்பு கொள்க

**பணி நேரம்:** திங்கள் முதல் வெள்ளி வரை காலை 9:00 - மாலை 5:00 வரை.

**கூடுதல் விபரங்களுக்கு:**
(416) 757-6043
1160 Birchmount Rd. Unit 1A
Scarborough, ON, M1P 2B8

## GTA VIDEO ENTERTAINMENT

www.gtavideo.com



LIVE STREAM, PHOTO & VIDEO
For All Your Occasion
Call Kenga (416) 400-1760
- புகைப்படம், வீடியோ, லைவ் ஸ்ட்ரீம், விளம்பரம், மற்றும் உங்களுடைய அனைத்து நிகழ்வுத் தேவைக்கும் அழையுங்கள்
கெங்கா (416) 400-1760 (647) 802-2908
GTA VIDEO ENTERTAINMENT

## வேலைக்கு ஆட்கள் தேவை

பகல், இரவு வேலைக்கு ஆட்கள் தேவை. Full-time/Part-time available. Starting $14.00 /hr.

Call: (416) 453-0000

Mississauga வில் உணவக மொன்றிற்கு cleaners தேவை.

Call: (416) 453-0000

## TELEMARKETERS WANTED

தமிழிலும் ஆங்கிலத்திலும் உரையாடக் கூடிய telemarketers உடன் தேவை. தகுந்த சன்மானம் வழங்கப்படும்.

Call: (416) 754-9492

## வேலைக்கு ஆள் தேவை

ஸ்காபுரோவில் உள்ள பத்திரிகை அலுவலகமொன்றில் அலுவலக உதவி நிர்வாகியாக பணியாற்ற ஆண்/பெண் விண்ணப்பதாரர்களிடமிருந்து விண்ணப்பங்கள் எதிர்பார்க்கப்படுகின்றன. தமிழ், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் நன்கு தேர்ச்சி பற்றவராகவும் கணக்கியல் மற்றும் கணணியில் தட்டச்சு செய்தல் ஆகியவை அவசியமாக எதிர்பார்க்கப்படுகின்றன. அனுபவம் அவசியம்.

Call: (416) 732-1608

## CLEANING வேலைக்கு ஆட்கள் தேவை

Cleaning வேலைக்கு நல்ல அனுபவமுள்ள full-time cleaners தேவை. Driving licence உள்ள ஆண்கள் விரும்பத்தக்கது. Location நேரில் சொல்லப்படும்.

Call PPS Group Inc:
(10am-3pm)
(416) 471-4465

## BASEMENT FOR RENT

Eglinton / Bellamy
சந்திப்பிற்கு அருகில்
2 bedroom basement with separate entrance, hall, kitchen, & parking வாடகைக்கு உண்டு. Close to all amentities.
**Available from May 1st, 2018**
Rent: $900 /month
Call: (416) 671-0085
(647) 960-6427

## VENI CANADIAN IMMIGRATION SERVICES

**Licensed and Regulated Immigration Consultant**

உங்களுடைய சகல குடிவரவு தேவைகளுக்கும் கனேடிய அங்கீகாரம் பெற்ற குடிவரவு ஆலோசகர்.

Immigration Services Provided:
1) Family Class Sponsorship
2) Spousal Class Sponsorship
3) Parent and Grandparent Super VISA
4) Business Category - Investor, Entrepreneur / Self Employment
5) Provincial Nominee Program
6) Temporary Work Permits/Visas
7) Humanitarian and Compassionate Applications within Canada
8) Sponsorship Appeals
9) Permanent Resident Card Application
10) Canadian Citizenship Application
11) Skilled Immigrants (Express Entry)

*Experienced & Competent Immigration Consultant for Reliable Services*

Uthayaveni Thuraіraja

416-587-6971
Email: immigrationconsultant.veni@yahoo.ca
2425 Eglinton Avenue East, Unit 211, Toronto, Ontario, M1K 5G8

## வேலைக்கு ஆட்கள் தேவை

Downtown இல் உள்ள Break fast Restaurant ஒன்றுக்கு Line Cook and Dish washer உடன் தேவை

Call: (647) 920-8953

## JOBS! JOBS! JOBS!

Brampton இல் உள்ள Sri Lankan, Indian Restaurant ஒன்றுக்கு அனுபவமுள்ள Cashier / Cook மற்றும் சமையல் உதவியாளர் உடனடியாக தேவைப்படுகின்றனர்.

ஸ்ரீகுகன்: (416) 671-4893

## INCOM TAX - T1




✓ Free for Seniors, Students Low Income (<$25K)
✓ E-file Certified
✓ Basic Return starting from $25
✓ Refund in Two Weeks
✓ Experienced Tax Professional







Appointment ONLY!
Whitby Location
Call: (647) 766-3731
Smarttaxcanada@gmail.com

## GENERAL HELPER NEED

(உதவியாளர்)
General Helper Need for woodworking Company in Scarborough Area

Call: (416) 994-7776

# PARALEGAL

TRAFFIC TICKET
DOMESTIC ASSAULT
THEFT UNDER 5000
TENANT EVICTION

தமிழில் கதைக்கலாம், வாருங்கள்!






VINOTHKUMAR
LICENSED PARALEGAL
647. 667. 6034
WWW.TRAFFICKUMAR.CA

I RUN TRIAL TOO, NOT JUST GUILTY PLEAS

பிரதம ஆசிரியர்: ஆர்.என்.லோகேந்திரலிங்கம்

உதயன் வெளியீட்டாளர்கள் உதயன் Uthayan Publishers

EDITOR IN CHIEF: R. N.Logendralingam

OFFICE ASSISTANT: Pirabu
GRAPHIC: Pathma, Suganthy, Logan & Shanthy (Aum Sign) and Ganesh.
TECHNICAL: Janani and Bala
PRINTERS: Web News Printing Inc.
DISTRIBUTION: Yogarajah,

4062 Ellesmere Rd, Scarborough, ON, M1C 1J2,
Phone: 416 752 1524, Fax: 416 752 6703
Email: uthayannews@yahoo.com Website: www.canadauthayan.ca

UTHAYAN உதயன் கதிரோட்டம்

# மண்ணின் மனித நேயப் பண்பிற்கு யாழ்ப்பாண போதனா வைத்தியசாலை உயர்ந்த கோபுரமாகத் திகழ வேண்டும்

யாழ்ப்பாணம் பெரிய ஆஸ்ப்பத்திரி என்று சாதாரண மக்களால் குறிப் பெயரில் அழைக்கப்பட்டு தற்போது யாழ்.போதனா வைத்திய சாலை என்றும் உயரிய பெயரில் பிரகாசிக்கும் மேற்படி வைத்தியசாலையில் பிறந்த இரட்டைக் குழந்தைகளில் ஒரு குழந்தை கடத்தப்பட்ட குற்றச்சாட்டு வழக்கில் குற்றப் புலனாய்வு திணைக் களத்தின் பணிப்பாளரைநீதிமன்றில் முற்படுமாறு யாழ்ப்பாணம் நீத வான் நீதிமன்று உத்தரவிட்டுள்ளது.

வல்வெட்டித்துறை கரணவாய் பகுதியை சேர்ந்த பெண்ணொருவர் கடந்த 2004 ஆம் ஆண்டு ஏப்ரல் மாத காலப்பகுதியில் பிரசவத்துக்காக யாழ்ப்பாணம் போதனா வைத்திய சாலையில் சேர்க்கப்பட்டார். அவருக்கு இரட்டைக் குழந்தைகள் பிறந்ததாகவும் மகப்பேற்று நிபுணர்களின் உதவியுடன் தன்னு டைய ஒரு குழந்தை கடத்தப்பட்டுள்ளதாகவும் தெரிவித்து அவரால் யாழ்ப்பாண பொலிஸ் நிலையத்தில் முறைப்பாடு செய்யப்பட்டது. இவ்வாறு அங்கு கடமையாற்றும் மகப்பேற்று வைத்திய நிபுணர்களின் மனித நேயப் பண்புஇவ்வாறு இருக்க, அங்கு பல வைத்தியப் பெருந்தகைகள் மிகுந்த மனிதநேயத்துடன் பணியாற்றி வருகின்றனர் என்பதையும் நான் அறிகின்றோம்.

உதாரணமாக, யாழ் போதனா வைத்தியசாலையில் முதல் தடவையாக திறந்த இதய சத்திரசிகிச்சையினை வெற்றி கரமாக மேற்கெர்ணட இதய சத்திரசிகிச்சை நிபுணர் மருத்துவ கலாநிதி சி. முகுந்தன் அவர்களுக்கு பண வசதி படைத்தவர்களால் மட்டுமே உயிரை பாதுகாக்க முடியும் என்ற சித்தாந்தத்தை மாற்றியமைக்கும் வகையில் இலவசமாக இதய சத்திரசிகிச்சையினை மேற்கொண்டு உயிர்களை காக்கும் பாரிய பணியினை மேற்கொண் வருகின்றார். அவருடைய அர்ப்பணிப்பு மிக்க சேவையால் தயாக மண்ணில் பொருளாதார வசதியின்றி தவிக்கும் பல நூறு உயிர்கள் காப்பாற்றப்பட்டு வருகின்றன. இந்த சேவையினை கௌரவிக்கும் வகையில் கனடாவில் இ.குருவி நிறுவனம் வழங்க தீர்மானித்துள்ளது. எனவே யாழ்ப்பாண போதனா வைத்தியசாலை மனித நேயத்தின் மகத்துவத்தை விளக்கும் ஒரு கோபுரமாகத் திகழ வேண்டும் என்று கனடா உதயன் ஞாபகமூட்ட விரும்புகின்றது.

# இகுருவியின் இவ்வருட விருது விழாவில் யாழிலிருந்து இதய சத்திரசிகிச்சை நிபுணர் மருத்துவர் சி. முகுந்தன். மற்றும் மனித நேய செயற்பாட்டாளர் கலாநிதி க.சிதம்பரநாதன் ஆகியோர்.



எதிர் வரும் 6ம் திகதி வெள்ளிக்கிழமை மாலை 6.00 மணியளவில் Scarborough Convention Center மண்டபத்தில் இந்த விருது விழா நடைபெறவுள்ளது. வழமை போலவே புலம் பெயர் தேசத்தில் தமிழர்களின் பெருமையை வெளிப்படுத்தும் வகையில் செயலாற்றி வருகின்றவர்களும் தாயக மக்களுக்கான மனிதாபி-மான செயல்திட்டங்களில் காத்திரமான பங்களிப்பை வழங்குபவர்களும் இந்த நிகழ்வில் விருது வழங்கி கௌரவிக்கப்படவுள்ளனர்.
இந்த வருடம் நிகழ்த்திய புதிய வெளிச்ச அமர்வுகள் மூலம் கண்டுபிடிக்கப்பட்டு தாயகத்தில் இருந்து இந்த ஆண்டு இரண்டு முக்கியமான மனிதநேயப் பணியாளர்கள் விருதுகளை பெற்றுக் கொள்வதற்கு கனடாவிற்கு வருகைதரவுள்ளமை சிறப்பம்சமாகும்.
யாழ் போதனா வைத்தியசாலையில் முதல் தடவையாக திறந்த இதய சத்திரசிகிச்சையினை வெற்றி கரமாக மேற்கெர்ணட இதய சத்திரசிகிச்சை
நிபுணர் மருத்துவ கலாநிதி சி. முகுந்தன் அவர்களுக்கு இ.குருவி விருது வழங்கி கௌரவிக்கவுள்ளது. பண வசதி படைத்தவர்களால் மட்டுமே உயிரை பாதுகாக்க முடியும் என்ற சித்தாந்தத்தை மாற்றியமைக்கும் வகையில் இலவசமாக இதய சத்திரசிகிச்சையினை மேற்கொண்டு உயிர்களை காக்கும் பாரிய பணியினை மருத்துவ கலாநிதி சி. முகுந்தன் சிறப்பாக மேற்கொண் வருகின்றார்.
அவருடைய அர்ப்பணிப்பு மிக்க சேவையால் தயாக மண்ணில் பொருளாதார வசதியின்றி தவிக்கும் பல நூறு உயிர்கள் காப்பாற்றப்பட்டு வருகின்றன. இந்த சேவையினை போற்றி கௌரவிக்கும் வகையில் அவருக்கான விருதினை இ.குருவி வழங்க தீர்மானித்துள்ளது.
இகுருவி விருது விழாவில் விருது பெறும் இன்னும் ஒருவர் கலாநிதி. சிதம்பரநாதன் அவர்கள். 80 களில் யாழ் பல்கலைக் கழகம் சமூகத்தின் சார்பில் உருவாகிய "மண்சுமந்த மேனியர்" என்னும் வீதி நாடகத்தின் பிரதான பங்கு வகித்தவர். அன்று முதல் இன்று வரை மனித மனங்களை ஆற்றுப்புடுத்தும் பாரிய பணியினை பல்வேறு நெருக்கடிகளின் மத்தியிலும் தொடர்ந்து முன்னெடுத்து வருகின்ற ஒரு மனித நேய செயற்பாட்டாளர் கலாநிதி க.சிதம்பரநாதன்.
அரங்க செயற்பாட்டுக் குழு மற்றும்பண்பாட்டு மலர்ச்சிக் கூடம் ஆகியவற்றிக் ஊடாக அரங்க நிகழ்வுகளை வடக்கு கிழக்கில் நடத்தி அதன் மூலமாக மன அழுத்தங்களில் சிக்கித் தவிக்கும் மக்களை அதில் இருந்து மீட்டெடுக்கும் பாரிய பணியினை கலாநிதி சிதம்பரநாதன் அவர்கள் ஆற்றி வருகின்றார். அவருடைய அரங்க செயல்பாட்டு அனுபவம் மற்றும் ஆற்றுப்படுத்துகை மூலமாக பல்லாயிரக்கணக்கான மக்கள் தமது மனப்பாரங்களை குறைத்துள்ளனர். யுத்த காலத்திலும் யுத்தத்தின் பின்னரான காலப்பகுதியிலும் மன அழுத்தங்களுக்குள் சிக்கித் தவிப்பவர்களை அதில் இருந்து விடுவிக்கும் வகையிலான வினைத்திறன் மிக்க வேலைத் திட்டங்களை தன்னலமற்ற வகையில் இவர் முன்னெடுத்து வருகின்றமை குறிப்பிடத்தக்கது.
அந்த வகையில் கணவனை இழந்த பெண்கள், மாற்றுத் திறனாளிகள் உறவுகளை இழந்து தவிக்கும் மனிதர்களை தொடர்ச்சியாக சந்தித்து அவர்களுக்கான மன ஆறுதலை வழங்கி வரும் கலாநிதி க.சிதம்பரநாதன் அவர்களுக்கு இகுருவி இம்முறை விருது வழங்கி கௌரவிக்கின்றது.இவர்களை தவிர கனேடிய மண்ணில் சாதனை படைத்து வரும் சிலரும் விருதுகைளை பெற்றுக் கொள்ளவுள்ளமை குறிப்பிடத்தக்கது.

# "பதவிகளுக்காக தமிழ் மக்களை ஏமாற்றிய கூட்டமைப்பு"

## யாழ்ப்பாண தினசரி "வலம்புரி" யின் ஆசிரிய தலையங்கம் விளக்கமளிக்கின்றது



கடந்த 28-03-2018 புதன்கிழமை வெளியான தனது தினப்பதிப்பில் பின்வருமாறு தமிழ்த் தேச-ிய கூட்டமைப்பின் போக்கைக் கண்டித்து யாழ்ப்பாணத்திலிருந்து வெளிவரும் "வலம்புரி" தினசரிப் பத்திரியை பின்வருமாறு ஆசிரிய தலையங்கத்தை தீட்டியுள்ளது.:-
வட மாகாணத்திலுள்ள உள்ளூராட்சி சபை களைக் கைப்பற்றுவதற்காக தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு எப்படியயல்லாம் நடந்து கொள் கிறது என்பதை நினைக்கும்போது ஏதோ வொரு அழிவு ஏற்படப் போகிறது என்பதை மட்டுமே உணர முடிகிறது.
ஈழ மக்கள் ஜனநாயகக் கட்சியை எப்படி யயல்லாம் தூற்றிய இலங்கைத் தமிழரக் கட்சி இப்போது ஈழ மக்கள் ஜனநாயகக் கட்சியின் ஆதரவைப் பெற்று உள்ளூராட்சி சபைக-ளின் ஆட்சியை கைப்பற்றியுள்ளது.

ஈழ மக்கள் ஜனநாயகக் கட்சியின் செய லாளர் நாயகம் டக்ளஸ் தேவானந்தாவுக்கு அமைச்சுப் பதவி வழங்கக்கூடாது என்று தடுத்தவர்கள் தமிழரசுக் கட்சியினர். கூடவே தேசிய அரசியல் கட்சிகள் வடக்கில் வேரூன்றவிடக்கூடாது என்று தமிழ் மக்களு க்கு அறிவுரை கூறியவர்களும் அவர்களே. ஆனால் இப்போது பதவி என்றதும் எப்படி நடந்து கொண்டார்கள் என்பதைத் தமிழ் மக் கள் பார்த்து அறிந்திருப்பர்.
ஒருமுறை தீவகத்து நாரந்தனைப் பகுதியில் தங்களை ஈபிடிபியினர் தாக்கினர் என்று குற்றஞ்சாட்டிய தமிழரசுக் கட்சியினர் அதனை வைத்தே பாராளுமன்றத் தேர்தலில் அமோக வெற்றி பெற்றனர். இவ்வாறான தாக்குதல் நடத்தியவர்களை இந்த மண்ணில் இருந்து துரத்த வேண்டும் என தமிழரசுக் கட்சிக்கு ஆதரவான ஊடக மொன்று அடிக்கடி எழுதி வந்தது.

ஆனால் அந்த ஊடகத்தையும் உதறித் தள்ளி விட்டு, நாரந்தனையில் படுகாயமடைந் தவர்களையும் உதறி எறிந்து விட்டு, எம் பதவிக்காக ஈபிடிபியை எதிர்க்க வேண் டும் என்றால் எதிர்ப்போம். மாறாக ஈபிடிபியை அணைத்தால்தான் பதவி கிடைக்குமென்றால் அதனையும் திறம்படச் செய்வோம் என்பதை தமிழரசுக் கட்சி செய்து காட்டியுள்ளது.
இச்செயலை அக்கட்சியின் தலைமை தமது இராஜதந்திர வியூகம் என நினைத்துக் கொள்ளலாம். ஆனால் நிலைமை அதுவல்ல என்பதைக் காலம் நிச்சயம் போதித்து நிற்கும்.

இது ஒருபுறம் இருக்க, ஈபிடிபியிடம் பொது மக்கள் சென்றால், ஈபிடிபியிடம் வேலைவாய்ப்புப் பெற்றால், ஈபிடிபியினர் வழங்குகின்ற உத வித் திட்டங்களை மக்கள் நாடினால் அவர்கள் எல்லாம் தமிழினத்துக்கு எதிரானவர்கள் என்று கூறிய தமிழரசுக் கட்சியினர், இன்று என்ன செய்துள்ளனர்.
தமிழ்த் தேசிய முன்னணியினர் வெற்றி பெற்ற இடங்களையும் கபளீகரம் செய்வதற்காக கொள்கையை விற்று, தமிழ் மக்களுக்கு வழங்கிய வாக்குறுதிகளை உதாசீனம் செய்து தமிழ் மக்களை ஏமாற்றி பதவி தேவையென் றால் தென்பகுதியில் உள்ள தேசிய அரசியல் கட்சிகளுடனும் கூட்டுச் சேருவோம் என்பதை வெளிப்படையாகக் காட்டியுள்ளனர். கூட்டமைப்புத் தலைமையின் இச்செயல் கட்சிக்குள் முரண்பாட்டை ஏற்படுத்தியிருந்தாலும் வாய்திறப்பதற்கு யாருளர். மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு என்று அமைந்தால் ஒழிய, கூட்டமைப்பின் போக்கை யாரும் எதுவும் செய்ய முடியாது என்பதே உண்மை.

# சிறுபான்மையினர் மீதான வன்முறைகளை நிறுத்துங்கள் என ஜெனிவாவில் அமெரிக்கா, பிரிட்டன், சுவிஸ், ஜெர்மனி வலியுறுத்தல்

இலங்கையில் சிறுபான்மையின மக்கள் மீது முன்னெடுக்கப்படும் வன்முறைகள் உடனடியாக நிறுத்தப்பட வேண்டும். வன்முறையாளர்களுக்கு எதிராக சட்ட நடவடிக்கை எடுக்கப்பட வேண்டியது அவசியம் என்று ஜெனிவா மனித உரிமை பேரவையில் அமெரிக்கா, பிரித்தானியா, ஜெர்மனி, சுவிட்ஸர்லாந்து மற்றும் ஐரோப்பிய ஒன்றியத்தின் பல்வேறு நாடுகள் கூட்டாக இணைந்து அறிவித்தன.

ஜெனிவா மனித உரிமை பேரவையில் நடைபெற்ற இலங்கை ஜெனிவா பிரேரணையை எவ்வாறு அமுல்படுத்தியது என்பது குறித்தான விவாதத்தில் கலந்துகொண்டு உரையாற்றுகையிலேயே உறுப்பு நாடுகள் இவ் விடயத்தை சுட்டிக்காட்டின.

2015ஆம் ஆண்டு இலங்கை தொடர்பாக நிறைவேற்றப்பட்டு பின்னர் 2017ஆம் ஆண்டு இரு வருட கால நீடிப்புக்குள்ளான பிரேரணையை இலங்கை அரசாங்கம் எவ்வாறு அமுல்படுத்துகின்றது என்பது குறித்து ஐ.நா. மனித உரிமை ஆணையாளர் செய்ட் அல் ஹுசைனின் அறிக்கை மீதான விவாதமே இவ்வாறு நடைபெற்றது. முதலில் பிரித்தானிய பிரதிநிதி உரையாற்றுகையில்:

நாங்கள் அமெரிக்காவுடன் இணைந்து எமது நிலைப்பாட்டை இலங்கைக்கு அறிவிக்கின்றோம். ஐ.நா. பிரேரணையின் பரிந்துரைகளை இலங்கை நடைமுறைப் படுத்த வேண்டும். மனித உரிமைகள் மதிக்கப்பட வேண்டும். காணாமல் போனோர் அலுவலகம் சாதகமாக இருக்கிறது. ஆனால், தாமதமான நிலைமையே எமக்கு அதிருப்தியை ஏற்படுத்துகிறது. சிறுபான்மை இன மக்கள் மீதான வன்முறையை நிறுத்த வேண்டும். வைராக்கிய பேச்சை நிறுத்த வேண்டும். அதிகார பரவலாக்கலை முன்னெடுத்து காணாமல் போனோர் மீதான உண்மையை அறிய வேண்டும் என்றார். பல்கேரியா பிரதிநிதி உரையாற்றுகையில்:

ஐரோப்பிய ஒன்றியம் சார்பான இந்த அறிக்கையை விடுக்கின்றோம். இலங்கை மனித உரிமைகள் மீதான அக்கறையை செலுத்த வேண்டும். சில காரணிகள் சாதகமாக இருக்கின்றன. ஆனால், பயங்கரவாத தடைச்சட்டம் நீக்கப்பட்டு நல்லிணக்கம் உறுதிப்படுத் தப்பட வேண்டும் என்றார். ஜெர்மனி நாட்டின் பிரதிநிதி உரையாற்றுகையில்:

இலங்கையில் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. காணாமல் போனோர் அலுவலகம் உருவாக்கப்பட்டுள்ளது. ஆனால், பயங்கரவாத தடைச்சட்டம் நீக்கப்பட வேண்டும். வன்முறைகள் நிறுத்தப்பட வேண்டும். சிறுபான்மையினரின் உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டும் என்றார். சுவிட்ஸர்லாந்து நாட்டின் பிரதிநிதி உரையாற்றுகையில்:

சிறுபான்மையினருக்கு எதிரான வன்முறைகள் நிறுத்தப்பட வேண்டும். வன்முறைகளை ஏற்படுத்தும் சூத்திரதாரிகள் சட்டத்தின் முன் கொண்டுவரப்பட வேண்டும். ஜெனிவா பிரேரணைகளை, பரிந்துரைகளை அமுல்படுத்த வேண்டும். சரணடைந்து தடுத்து வைக்கப்பட்டுள்ளவர்களின் பட்டியல்களை வெளியிட வேண்டும் என்றார்.

# யாழ்ப்பாணத்தில் இந்து ஆலயங்களுக்கு உதவும் வேலைத்திட்டம் முன்னெடுப்பு

யாழ்.மாவட்டத்திலுள்ள போதிய வசதிகள் இல்லாத இந்து ஆலயங்களுக்கு உதவும் வேலைத்திட்டம் யாழ்.மாவட்ட இராணுவத் தலைமையகத்தினால் முன்னெடுக்கப்பட்டுள்ளதாக யாழ்.மாவட்ட இராணுவக் கட்டளை தளபதி மேஜர் ஜெனரல் தர்ஷன ஹெட்டியாரச்சி தெரிவித்தார். அம்பாறை மாவட்ட தமிழ் ஊடகவியலாளர் சங்கப் பிரதிநிதிகளை வியாழக்கிழமை காலை பலாலியில் சந்தித்துப் பேசியபோதே அவர் இவ்வாறு கூறினார். அவர் மேலும் தெரிவிக்கையில்:

யாழ்.மாவட்டத்திலுள்ள மக்களின் மனங்களை வெல்லக்கூடிய பல வேலைத்திட்டங்களை யாழ்.மாவட்ட இராணுவத் தலைமையகம் மேற்கொண்டு வருகின்றது. யாழ்.மக்களின் இயல்வு வாழ்க்கையையும், இயற்கையோடு இணைந்த வாழ்க்கை முறையையும் மேம்படுத்துகின்ற வகையில் இவ் வேலைத்திட்டங்கள் அமைய பெற்றுள்ளன.

கடலரிப்பை தடுத்து நிறுத்துதல், மரநடுகை, மீன காடு வளர்ப்பு, வேலை வாய்ப்பு, பெண் தலைமைத்துவ குடும்பங்களுக்கான வாழ்வாதார உதவி, புலிகள் இயக்க முன்னாள் போராளிகளுக்கான உதவி, வறிய பிள்ளை களுக்கான புலமைப்பரிசில் திட்டம், வீட்டு கட்டுமானப் பணி, ஆலயங்களுக்கான உதவி என்று எமது சேவைகள் நீண்டு கொண்டு செல்கின்றன. யாழ்.மாவட்ட மக்களுக்கு வீடு கட்டுவதற்கு அரசாங்கத்தால் வழங்கப்படுகின்ற 8 இலட்சம் ரூபா உண்மையில் போதுமான தல்ல. இந்நிலையில்தான் நாம் இராணுவ ஆளணி மூலமாக கட்டுமான பணிகளை. அவர்களுக்குச் செய்து கொடுக்கின்றோம். இதனால் கிடைக்கின்ற பணத்தில் ஒரு தொகையை வேறு தேவைகளுக்கு பயன்படுத்தவோ அல்லது சேமிக்கவோ மக்களால் முடிகின்றது.

இதேபோல யாழ்.மக்கள் இறைபக்தியில் நிறைந்தவர்கள். ஆலய வழிபாடு இவர்களின் அன்றாட வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்ததாக உள்ளது. இந்நிலையில் போதிய வருமானம் மற்றும் வசதியற்ற இந்து ஆலயங்களுக்கு உதவி செய்யும் வேலைத் திட்டம் ஒன்றை ஆரம்பித்துள்ளோம். குறைந்தது 100 ஆலயங்களுக்கு உதவிசெய்ய உத்தேசித்து உள்ளோம். இத்திட்டத்திற்கு அமைய இதுவரையில் 15 ஆலயங்களுக்கு நாங்களாகவே உதவிப் பொருட்கள் வழங்கி உள்ளோம்.

யாழ்.மாவட்டத்திலுள்ள பல இடங்களிலும் நிலைகொண்டுள்ள எமது இராணுவத்தினர் உதவி தேவைப்படுகின்ற ஆலயங்களை அடையாளம் கண்டு எமக்கு தெரியப்படுத்துவார்கள். நாம் நேரில் சென்று உதவிகளை வழங்கி வைப்போம். இதேநேரம் உதவி தேவைப்படுகின்ற ஆலயங்கள் அவற்றின் தேவைகளை எமக்கு தெரியப்படுத்தவும் முடியும் என்றார்.



# கனடா இந்து



CANADA HINDU





*Published by Thurkeswaram, Sridurka Hindu Temple, 30 Carnforth Road, Toronto, ON M4A 2K7 TEL : 416-759 9648*


# துர்க்கேஸ்வரத்தில் தமிழ்ப் புத்தாண்டு வழிபாடு 14-4-2018 சனிக் கிழமை

## விளம்பி வருஷம் பிறப்பு நேரம் 13-4-2018 வெள்ளி இரவு

# 9:30 PM

மெய்யடியார்களே!

எதிர்வரும் ஏப்பிரல் மாதம் 13ம் திகதி வெள்ளிக்கிழமை ரொறன்ரோ நேரப்படி இரவு 9.30 மணிக்கு விளம்பி என்னும் பெயருடைய தமிழ்ப்புத்தாண்டு பிறக்கின்றது. மீன ராசியில் இருந்து மேட ராசிக்கு சூரியபகவான் பிரவேசிக்கும் சங்கிராந்தி நேரம் (13-4-2018 வெள்ளி இரவு 9.30 மணிக்கு) விஷேட தீபாராதனை அனைத்துச் சன்னிதானங்களிலும் நிகமும். இரவு நேரத்தில் வருஷம் பிறப்பதால், மறுநாள் 14-4-2018 சனிக்கிழமை வருடப்பிறப்பு தினமாக வழிபாடுகள் நடைபெறும்.

புத்தாண்டு தினத்தில் அனைவரும் மருத்துநீரிட்டு நீராடி, வெள்ளை நிறம் அல்லது வெள்ளைக்கரை, அல்லது கறுப்புக்கரை உள்ள ஆடை அணிந்து, துர்க்கேஸ்வரம் திருக்கோவிலுக்கு சென்று இறைவழிபாடுகளைச் செய்து, பொங்கலிட்டு, தெய்வத்தின் திருவருளினைப் பெற்று சர்வசித்திகளையும் ஐஸ்வர்யங்களையும் அடைந்து நல்வாழ்வு வாழ்வீர்களாகுக.

மருத்துநீரிட்டு வழிபட்டுக் கொள்ள உரிய காலம்
விசுபுண்ணிய காலம்
13-4-2018 வெள்ளிக்கிழமை
மாலை 5.30 மணி முதல் பின்னிரவு
1.30 மணி வரை

புதுவருட புத்தாடை நிறம்
வெள்ளை நிறம், வெள்ளைக்கரை அல்லது கறுப்புக்கரை

புதுவருட கைவிஷேட நேரம்
மத்திமம் **14-4-2018** சனி **8.05 am - 9.30 am**
மத்திமம் **14-4-2018** சனி **4.36 pm - 5.00 pm**

ஏப்பிரல் 11 புதன், ஏப்பிரல் 12 வியாழன், ஏப்பிரல் 13 வெள்ளி ஆகிய தினங்களில் துர்க்கேஸ்வரம் ஆலய கருமபீடத்தில்
மருத்து நீரைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

# 14-4-2018 சனிக்கிழமை

| | |
|---|---|
| **08.00 AM -** | ஆலயம் திறப்பு<br>உஷத்கால பூஜை |
| **08.15 AM -** | வருடப்பிறப்பு அபிஷேகம்<br>(சகல சன்னிதிகளிலும்)<br>அலங்காரம் |
| **09.30 AM** | காலை சந்திப் பூஜை<br>ஆசி வழங்கல் |
| **10.00 AM** | ராகுகால உற்சவம் |
| **11.00 AM -** | வசந்த மண்டப பூஜை,<br>மஹாகணபதி தங்கரதம் |
| **12.00 PM -** | உச்சிக்கால பூஜை<br>தொடர்ந்து<br>வருஷப்பிறப்பு அர்சனைகள் |
| **3.30 PM - 4.00 PM** | நடை சாத்தல் (திரையிடல்) |
| **4.00 PM to 6.00 PM** | வருஷப்பிறப்பு அர்சனைகள் |
| **6.00 PM -** | சாயரட்சை பூஜை, அர்ச்சனை |
| **7.31 PM -** | விஷேட பூஜை, அர்ச்சனை |
| **9.00 PM -** | அர்த்தசாம பூஜை |

# ஆனந்தசுதாகரனின் விடுதலையை வலியுறுத்தி

## ஜனாதிபதிக்கு கருணைமனு அனுப்புவதற்கு பொது அமைப்புகளும் அழைப்பு

கடந்த 2008ஆம் ஆண்டு கைது செய்யப்பட்டு மகஸின் சிறைச்சாலையில் அரசியல் கைதியாக தடுத்து வைக்கப்பட்டு கடந்த வருடம் ஆயுள் தண்டனை விதிக்கப்பட்ட சச்சிதானந்தம் ஆனந்தசுதாகரனின் விடுதலையை வலியுறுத்தி ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேனவுக்கு கருணை மனுக்களை அனுப்புவதற்கு வடக்கு, கிழக்கு மாகாணங்களிலுள்ள பொது அமைப்புகளுக்கு தமிழ் இளைஞர் சமூகத்தினரால் அழைப்பு விடுக்கப்பட்டுள்ளது.

ஆனந்தசுதாகரனின் விடுதலைக்கு கருணை மனுக்களை அனுப்புவதன் மூலம் விரைவுபடுத்த முடியும் என்ற சட்டவல்லுநர்களின் ஆலோசனையின் பேரில் தமிழ் இளைஞர் சமூகத்தினால் வடக்கு, கிழக்கு மாகாணங் களிலுள்ள பொது அமைப்புக்களிடம் கருணை மனுக்கள் சேகரிக்கப்பட்டு ஜனாதிபதிக்கு அனுப்பும் செயற்றிட்டம் நேற்றுக் காலை விஸ்வமடுப் பகுதியில் ஆரம்பித்து வைக்கப்பட்டது.

கிளிநொச்சி, வவுனியா, மன்னார், யாழ்ப்பாணம், முல்லைத்தீவு, மட்டக்களப்பு, திருகோணமலை, அம்பாறை ஆகிய மாவட்டங்களில் உள்ள பொது அமைப்புக்கள் மற்றும் இளைஞர் அமைப்புக்கள் என்பன இச் செயற்றிட்டத்தில் பங்கேற்குமாறும் அழைப்பு விடுக்கப்பட்டுள்ளது.

நேற்று ஆரம்பித்து வைக்கப்பட்ட இச் செயற் றிட்டமானது ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு பொது அமைப்புகள் என வடக்கு, கிழக்கு மாகாணங்களிலள்ள அனைத்து அமைப்புகளுக்கும் நேரடியாகவும் மின்னஞ்சல் மூலமாகவும் அனுப்பி கையெழுதிடப்பட்டு பின்னர் அவை சேகரிக்கப்பட்டு ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேனவுக்கு அனுப்பி வைக்கப்படவுள்ளன.

**'ஜனாதிபதி மாமா இரங்குங்கள்'**

இதேவேளை ஆனந்தசுதாகரனின் பிள்ளைகள் இருவரும் தமது தந்தையை விடுவிக்குமாறு கோரி 'ஜனாதிபதி மாமாவுக்கு' என்று உருக்கமாகக் குறிப்பிட்டு ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேனவுக்கு கடிதம் எழுதி அனுப்பியுள்ளனர்.

'நாங்கள் அம்மாவையும் இழந்து விட்டோம். அப்பாவையும் பிரிந்து நிற்கின்றோம். ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டு சிறையில் உள்ள அரசியல் கைதியான எங்கள் அப்பாவை கருணை அடிப்படையில் விடுதலை செய்யுங்கள்' என்று குழந்தைகள் இருவரும் தமது கடிதத்தில் கோரியுள்ளனர்.

இந்தக் கடிதம் ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சியின் யாழ்.மாவட்ட பாராளுமன்ற உறுப்பினர் அங்கஜன் இராமநாதன் ஊடாக ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேனவுக்கு அனுப்பி வைக்கப்பட்டுள்ளது.

கிளிநொச்சி மாவட்டத்தில் ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சி சார்பில் தெரிவான உள்ளூராட்சி மன்ற உறுப்பினர்கள் இந்தக் கடிதத்தை கிளிநொச்சியில் உள்ள குழந்தைகளின் வீட்டுக்கு நேரில் சென்று பெற்றுக் கொண்டனர்.



கடந்த 15ஆம் திகதி இக்குழந்தைகளின் தாய் நோயால் இறந்த நிலையில் இப்போது இக்குழந்தைகள் தந்தையையும் பிரிந்து நிற்கின்றனர். மனைவியின் இறுதிச் சடங்கிற்காக மூன்று மணிநேர சிறை விடுப்பில் கடந்த 18ஆம் திகதி வீட்டுக்கு வந்த தந்தையைப் பிரிய முடியாது இக்குழந்தைக்ள ஏங்கிய காட்சி ஊடகங்கள் மூலமும், சமூக வலைத்தளங்கள் ஊடாகவும் வெளிவந்ததுடன் அனைவரது நெஞ்சங்களையும் நெகிழச் செய்திருந்தமை குறிப்பிடத்தக்கது.

# ஆயுள் தண்டனை கைதியின் குழந்தைகளுக்கு

## நெல்லியடி வர்த்தக சங்கம் பணம், பொருள் உதவி



ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டுள்ள அரசியல் கைதியான சச்சிதானந்தம் ஆனந்த சுதாகரனின் இரு பிள்ளைகளுக்கும் நெல்லியடி வர்த்தக சங்கம் நிதி மற்றும் பொருள் உதவி வழங்கியுள்ளது.

ஆயுள் தண்டனை விதிக்கப்பட்ட ஆனந்தசுதாகரின் மனைவி கடந்த சில தினங்களுக்கு முன்னர் காலமான நிலையில் அவரின் இரு குழந்தைகளும் அநாதரவாகின. மனைவியின் இறுதிச் சடங்கில் பங்கேற்பதற்காக ஆனந்தசுதாகரனுக்கு மூன்று மணிநேர அனுமதி வழங்கப்பட்ட நிலையில், அவர் கிளிநொச்சிக்கு பலத்த பாதுகாப்புடன் அழைத்துவரப்பட்டு மனைவியின் இறுதிச் சடங்கில் பங்கேற்றார். பின்னர் அவர் சிறைக்குச் செல்வதற்காக சிறைச்சாலை பஸ்ஸில் ஏறியபோது அவரின் மகள் சங்கீதா (10 வயது) தானும் சிறைக்குச் செல்ல தந்தையுடன் சிறை பஸ்ஸில் ஏறிய சம்பவம் ஊடகங்களில் வெளிவந்திருந்தன. இந்நிலையில் ஆனந்தசுதாகரனை பொது மன்னிப்பின் அடிப்படையில் ஜனாதிபதி விடுவிக்க வேண்டும் என்ற கோரிக்கைகள் விடுவிக்கப்பட்டுவரும் நிலையிலேயே வியாழக்கிழமை ஆனந்தசுதாகரனின் இரு குழந்தைகளையும் தேடிச்சென்ற நெல்லியடி வர்த்தக சங்க செயலாளர் ரஞ்சன், உபதலைவரும் வட மாகாணசபை உறுப்பினருமான அகிலதாஸ் மற்றும் சங்க அங்கத்தவர்கள் அந்தக் குழந்தைகளுக்கு நிதி உதவி வழங்கியதுடன், அவர்கள் பாடசாலை சென்று வருவதற்காக துவிச்சக்கர வண்டி ஒன்றையும் அன்பளிப்புச் செய்தனர்.

அதுமட்டுமன்றி இரு குழந்தைகளும் தமது தந்தையை மகஸின் சிறைச்சாலைக்குச் சென்று வருவதற்கான போக்குவரத்து வசதியையும் ஏற்பாடு செய்து கொடுத்துள்ளனர். அத்துடன், வடக்கு மாகாண சபை உறுப்பினர் அகிலதாஸ் வடமாகாண ஆளுநரை இரு குழந்தைகளும் சந்திப்பதற்கான ஏற்பாடுகளையும் செய்துள்ளார்.

# 'அரசாங்கத்திற்கு அழுத்தம் கொடுக்க கூட்டமைப்பினருக்கு உரிமை உள்ளதாம்"

அரசாங்கம் நெருக்கடியினை சந்திக்கும் சகல சந்தர்ப்பங்களிலும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பே அரசாங்கத்தை காப்பாற்றுகின்றது. ஆகவே தமிழ் மக்களின் உரிமைகளை பெற்றுக்கொள்ளும் வகையில் அரசாங்கத்திற்கு அழுத்தம் கொடுக்க எப்போதுமே கூட்டமைப்பினருக்கு உரிமை உள்ளது என அமைச்சர் மனோ கணேசன் தெரிவித்தார்.

தேசிய மருந்துகள் ஒழுங்குபடுத்தும் அதிகார சபை சட்டத்தின் கீழான ஒழுங்குவிதிகள் மீதான விவாதத்தின் போது தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் எம்.பி. கே.கோடீஸ்வரன் உரையாற்றுகையில்:

கிழக்கின் தமிழ் மக்கள் வாழும் பகுதிகளில் வைத்தியசாலைகளுக்கு நிதி ஒதுக்கப்படவில்லை என்பதை சுட்டிக்காட்டி உரையாற்றிக்கொண்டிருந்த நிலையில் சபையில் இருந்த அமைச்சர் மனோ கணேசன் ஒழுங்குப் பிரச்சினை எழுப்பி கூறுகையில்:

கிழக்கு மாகாணத்தில் தமிழ் மக்கள் புறக்கணிக்கப்படுவதாக கூறுகின்றீர்கள், இதில் உண்மை இருக்கலாம். ஆனால் சமீப காலமாகவே உங்களின் கூட்டாட்சியே இடம்பெற்று வருகின்றது. ஸ்ரீலங்கா முஸ்லிம் காங்கிரஸுடன் இணைந்து நீங்கள் ஆட்சி புரிந்து வருகின்றீர்கள். ஆகவே இதனை நீங்கள் மனதில் கொண்டு கருத்துக்களை முன்வைக்க வேண்டும் எனக் குறிப்பிட்டார். இதன்போது மீண்டும் கே.கோடீஸ்வரன் எம்.பி. கூறுகையில்:

கிழக்கு மாகாணத்தில் எமது கூட்டு ஆட்சி இருந்தாலும் இவை மத்திய அரசாங்கத்தின் செயற்பாட்டின் கீழ் உள்ளடக்கப்பட்ட ஒரு வைத்திய சாலையாகும். நான் கூறும் விடயம் மத்திய அரசின் சுகாதார அமைச்சின் கீழ் உள்ளது. மத்திய சுகாதார அமைச்சின் மூலமாகவே முஸ்லிம் வைத்தியசாலைகளுக்கு நிதி ஒதுக்கப் பட்டுள்ளது. ஆனால் திருக்கோவில், வாழைச்சேனை ஆதார வைத்தியசாலைக்கு நிதி ஒதுக்கப்படவில்லை. ஏறாவூர், பொத்துவில், நிந்தவூர், அம்பாறை ஆகிய வைத்தியசாலைக்கு தொடர்ந்தும் நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டு வருகின்றது. மத்திய அரசாங்கத்தில் உள்ள அமைச்சர் என்ற வகையில் நீங்களும் இந்த உண்மைகளை எடுத்துரைக்க வேண்டும். எமக்கு நியாயத்தை பெற்றுத்தர வேண்டும். இவ்வாறு பிரிவினையை பார்த்தமையாலேயே இனவாத, மதவாதம் தலைதூக்கி யுள்ளது. இதனை தடுத்து நிறுத்த வேண்டும் என்றால் சமத்துவம் பேணப்பட வேண்டும் எனக் குறிப்பிட்டார். மீண்டும் ஒழுங்கப் பிரச்சினை எழுப்பி கருத்துக்களை முன்வைத்த அமைச்சர் மனோ கணேசன் கூறுகையில்:

உங்களின் கருத்தினை நான் கவனத்தில் கொண்டுள்ளேன். நிச்சயமாக நான் அமைச்சரவையில் இந்த விடயம் குறித்து கவனத்திற்கு கொண்டுவருவேன். உங்களின் கட்சி எமக்கு எப்போதும் ஒத்துழைப்பினை வழங்கிக் கொண்டுள்ளது. அரசாங்கத்தின் நெருக்கடி நேரங்களில் எல்லாம் உங்களின் கட்சி எமக்கு பாரிய ஒத்துழைப்புக்களை வழங்கி வருகின்றது. கஷ்டமான நேரங்களில் எல்லாம் அரசாங்கத்தை காப்பாற்றிக் கொண்டுள்ளது. ஆகவே உங்களின் கட்சிக்கும் அரசாங்கத்தின் மீது அழுத்தங்களை செலுத்த எப்போதுமே பாரிய வாய்ப்புகள் இருந்துகொண்டே உள்ளது. எனவே தொடர்ந்தும் உங்களின் அழுத்தங்களை செலுத்துங்கள் நாங்களும் உள்ளே இருந்துகொண்டு அழுத்தங்களை செலுத்துவோம் எனக் குறிப்பிட்டார். மீண்டும் கருத்துக்களை முன்வைத்த கோடீஸ்வரன் எம்.பி. கூறுகையில்:

நீங்கள் அரசியல் கைதிகளின் விடயத்தில் அதிக அக்கறை கொண்டுள்ளீர்கள். அமைச்சரவையில் விசேட நகர்வுகளை முன்னெடுக்கவுள்ளதாக நாம் அறிய முடிந்தது. ஆகவே அரசியல் கைதிகளின் விடுதலையில் விரைவான நடவடிக்கைகளை எடுக்க வேண்டும் எனக் கேட்டுக் கொள்கின்றோம் எனவும் அவர் குறிப்பிட்டார்.

# செல்வாக்கு இழந்த ரவூப் ஹக்கீம் சொல்லும் வார்த்தைகள் இவை

எங்களுக்கு நடந்த நம்பிக்கை மோசடிகளை பார்க்கின்றபோது, இனியும் ஐக்கிய தேசியக் கட்சியுடன் இணைந்து பயணிப்பது என்பது மிகவும் கஷ்டமான விடயம். நாங்கள் வெற்றியீட்டிய சபைகளில், எங்களை புறந்தள்ளிவிட்டு மாற்று அணிகளுடன் ஐ.தே.க. ஆட்சியமைத்தால் அரசியல் ரீதியாக அவர்களுக்கு தகுந்த பதிலடி கொடுப்போம் என்று ஸ்ரீலங்கா முஸ்லிம் காங்கிரஸ் தலைவரும் அமைச்சருமான ரவூப் ஹக்கீம் தெரிவித்தார்.

உள்ளூராட்சி மன்றத் தேர்தலில் ஸ்ரீலங்கா முஸ்லிம் காங்கிரஸ் சார்பாக தெரிவான உறுப்பினர்களின் சத்தியப் பிரமாண நிகழ்வு கட்சித் தலைமையகமான தாருஸ்லாமில் நடைபெற்றது. இந்நிகழ்வில் கலந்துகொண்டு உரையாற்றும்போதே அமைச்சர் ரவூப் ஹக்கீம் இவ்வாறு தெரிவித்தார். அங்கு உரையாற்றிய அமைச்சர் மேலும் கூறியதாவது:

நாங்கள் கடந்த 3 வாரங்களாக சிறிகொத்தாவில் ஐ.தே.க. முக்கியஸ்தர்களை சந்தித்து பேசிவந்த விவகாரங்களையும் பின்னர் நடந்த விபரீதங்களையும் வைத்து பார்க்கின்றபோது, இனியும் ஐக்கிய தேசியக் கட்சியுடன் இணைந்து பயணிப்பது என்பது ஸ்ரீலங்கா முஸ்லிம் காங்கிரஸுக்கு மிகவும் கஷ்டமான விடயம் என்பதை மிகவும் வேதனையுடன் சொல்லிக் கொள்கிறேன்.



உள்ளூராட்சி தேர்தலில் நாங்கள் ஐக்கிய தேசியக் கட்சியுடன் இணைந்து தேர்தலில் போட்டியிட்ட நிலையில், எங்களுக்கு நடந்த நம்பிக்கை மோசடிகளினால் அவர்களுடன் தொடர்ந்து பயணிப்பதில் பாரிய சிக்கல்கள் ஏற்பட்டுள்ளன.

முஸ்லிம் காங்கிரஸ் அமோக வெற்றியீட்டிய சபைகளில் எங்களுக்கு தவிசாளர் பதவி தரவேண்டிய நிலையில், எங்களை புறந்தள்ளிவிட்டு மாற்று அணிகளுடன் கூட்டுச் சேர்வதாக இருந்தால் அதற்கு அரசியல் ரீதியாக நாங்கள் தகுந்த பதிலடியை கொடுப்பதற்கும் தயங்கமாட்டோம். இயலுமானவரை இந்த ஆட்சியில் ஒற்றுமையுடன் பயணிப்பது என்ற நோக்கத்தில் இருந்தாலும், எங்களை பலவீனப்படுத்திக் கொண்டு பயணிக்க முடியாது என்றார்.



# LUCKY ARUL HOMES

*For Information On Residential & Commercial Properties in Toronto, Markham, Durham and Mississauga locations, Call Arul!*

**SALE $615,500**



Pickering, Durham
Rm 8. Bed 4 + 1. Wsh 2.

**LEASE $1,975**



Markham, Condo
Rm 6. Bed 2+1. Wsh 2.

**SALE $132,500**



Toronto,
Restaurant

**SALE $176,500**



Toronto,
Restaurant

**SALE $299,000**



Toronto,
Restaurant

**SALE $80,500**



Toronto,
Restaurant




2250 Markham Road,
Unit 3 Toronto ON M1B 2W4

**416.518.9782**



Sales Rep.

Independently owned and operated. Not indented to solicit anyone under contract with a brokerage.

# “முதலில் அரசியல் தீர்வு அதற்குப் பிறகே பொருளாதார அபிவிருத்தி”

## அடித்துச் சொல்கிறார் முதலமைச்சர் ‘விக்கி’

இராணுவத்தை வடக்கில் வைத்துக்கொண்டும் அதிகாரங்களைத் தம்வசம் வைத்துக்கொண்டும் பொருளாதார விருத்தி பற்றியும் நல்லிணக்கம் பற்றியும் அரசாங்கம் பிரஸ்தாபிக்கும் போது நுண்ணறிவுள்ள தமிழர்கள் யாவரும் அதன் அர்த்தத்தைச் சரியாகப் புரிந்து கொள்ள வேண்டும். இல்லை என்றால் சத்திரசிகிச்சை வெற்றி, ஆனால் நோயாளி இறந்துவிட்டார்' என்று ஆகிவிடும் என வடக்கு முதல்வர் சி.வி.விக்கினேஸ்வரன் தெரிவித்துள்ளார்.



அரசியல் தீர்வு முதலில் வரவேண்டும் என்று ஆசைப்படுகின்றோம். அதற்காக நாம் மத்தியைப் புறக்கணிக்கவில்லை. செய்வதைச் செய்யுங்கள். ஆனால் எங்களையும் பங்குதாரர்கள் ஆக்கிச் செய்யுங்கள் என்றே கூறிவருகின்றோம். அப்போது அவர்களின் செயல்களை நாம் உன்னிப்பாகக் கவனித்து உரிய நடவடிக்கைகள் வேண்டும்போது எடுக்கலாம் என்றும் முதலமைச்சர் சுட்டிக் காட்டியுள்ளார்.

வாரத்துக்கொரு கேள்வி என்ற வழக்கத்தின் கீழ் முதலமைச்சரிடம் இவ்வாரம் எழுப்பப்பட்ட கேள்விக்கு பதிலளிக்கையிலேயே மேற்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார். குறித்த கேள்வியும் பதிலும் வருமாறு:

**கேள்வி:** சிலர் வடமாகாணத்தில் பொருளாதார விருத்தி முதலிடம் பெறவேண்டும் என்றும் அது நல்லிணக்கத்திற்கு வித்திடும் எனவும் கூறுகிறார்கள். வேறு சிலர் அரசியல் தீர்வுக்குப் பின்னரே பொருளாதார விருத்தி ஏற்பட வேண்டும் என்கிறார்கள். உங்கள் கருத்து என்ன?

**பதில்:** பொருளாதார விருத்தியும் நல்லிணக்கமும் என்ற கருத்தை மாறிவரும் மத்திய அரசாங்கங்களே முன்வைத்து வருகின்றன. தமிழ் மக்களின் அரசியல் தேவைகளை முன்னெடுக்காமல் அவற்றுக்குத் தீர்வு காணாமல் அதற்குப் பதிலாகப் பெரும்பான்மை அரசாங்கங்கள் முன்வைக்கும் கருத்துத்தான் பொருளாதார விருத்தியும் நல்லிணக்கமும் என்பதாகும். மத்திய அரசாங்கங்களாலும் பெரும்பான்மையின மக்களாலும் முன்வைக்கும் சில கருத்துக்கள் பார்வைக்குச் சரியாகப் புலப்பட்டாலும் அவற்றுள் அடங்கியிருக்கும் கருத்தாழம் பலருக்குப் புரிவதில்லை.

உதாரணத்திற்கு ‘நாம் எல்லோரும் இலங்கையர்களே: எம்முள் வேற்றுமைகள் வேண்டாம். நாம் ஒரு தாய் மக்களே: இலங்கை மாதாவின் புத்திரர்களே' என்று சிலர் கூறும்போது அது சரியாத்தான் படுகிறது. ஆனால் அதன் அர்த்தம் என்ன? ‘எம்முள் வேற்றுமைகள் வேண்டாம்’ எனும்போதே சிறுபான்மையினர் பெரும்பான்மையினருள் அடக்கப்பட்டு விடுகின்றனர்: அகப்பட்டுக் கொள்கின்றனர். ‘ஒரு தாய் மக்கள்’ எனும்போது எமது தாய் சிங்கள பௌத்தத்தாய் என்றாகி விடுகின்றாள். இதனை ‘எம்முடன் நீங்கள் சேராவிட்டால் உங்களை நாங்கள் எம்முடன் சேர்த்துக் கொள்ளமாட்டோம். அடித்துத் துன்புறுத்துவோம்’ என்றும் பொருள் கோடலாம்.

ஆங்கிலேயர் எம்மை ஆண்ட காலத்திலும் இவ்வாறு நாம் கூறினோம். அதன் அர்த்தம் வேறு. ஆங்கிலம் அரச மொழியாக இருந்தபோது யாவரும் சரி சமமாகவே வாழ்ந்தார்கள். இனங்களின் வேற்றுமைகள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. அதாவது பெரும்பான்மையினர், சிறுபான்மையினர் என்ற பேதம் இருந்த போதும் ஆங்கிலம் தாயாகவும் ஆங்கிலேயர்கள் தந்தையாகவும் எம்மை வளர்த்து வந்தனர். பெரும்பான்மையிரும் சிறுபான்மையினரும் தகைமை அடிப்படையிலேயே அரச சேவைக்குள் ஏற்றுக்கொள்ளப்பட்டார்கள். பெரும்பான்மை என்றதால் கூடிய சலுகைகள் ஏதும் கிடைக்கவில்லை. சிங்களவர், தமிழர்கள் யாவரும் சமமாகவே நடாத்தப்பட்டார்கள். அந்த நிலையில் ‘நாம் எல்லோரும் இலங்கையர்களே’ என்ற கூற்றில் அர்த்தம் இருந்தது. ‘ஒரு தாய் மக்கள்’ என்றபோது சகோதரத்துவம் உணரப்பட்டது. அன்று நாங்கள் இலங்கையர் தான். அப்போது ஒரு தாய் மக்கள் என்று நாங்கள் உண்மையாக உணர்ந்திருந்தோம்.

எப்போது சிங்களம் முழு நாட்டின் மொழியாகி தமிழ் மக்கள் ஒரு படி அல்லது பல படிகள் குறைக்கப் பட்டார்களோ எமது தாயானவள் செவிலித்தாயாக மாறிவிட்டாள். அவளுக்குச் சிங்கள பௌத்த மக்களே உண்மையான மக்கள்: மற்றவர்கள் வேண்டாத மக்களாகி விட்டார்கள். இதேபோல தான் பொருளாதார விருத்தியும் நல்லிணக்கமும் என்ற கருத்தும் உள்ளது. நாம் வடமாகாணத்திற்கு வேண்டிய பணத்தைத் தருகின்றோம். பொருளாதார விருத்தியை வழங்குகின்றோம். அதனால் நல்லிணக்கம் பிறக்கட்டும். ஆனால் உங்களுக்கென தனி யுரித்துக்கள் எவற்றையுங் கேட்காதீர்கள் என்பதே அதன் அர்த்தம். நாம் பணம் கொடுத்து உங்களை வாங்குவோம். நாங்கள் எதிர்பார்ப்பது போல நீங்கள் எங்களுடன் சுமுகமாக வாழவேண்டும். அதுதான் நல்லிணக்கம். உங்களைப் பொருளாதார மட்டத்தில் நாம் ஏற்றிவிடுவோம். நீங்கள் நாம் சொல்வதைக் கேட்டுக்கொண்டு பேசாமல் இருக்கவேண்டும் என்பதே இவ்வாறு கூறுவதின் அர்த்தம். வறுமையில் வாடும் எம் மக்களுக்கு இவ்வாறான பொருளாதார ஏற்றமே முக்கியமானது. ஆகவே தமது தேவையின் நிமித்தம் இவ்வாறான பசப்பு வார்த்தைகளுக்கு அவர்கள் விழக்கூடும். ஆனால் இங்கு முன்னோக்கிய சிந்தனை அவசியம்.

இவ்வாறான கருத்து ஏற்பு ஜே.ஆர்.ஜயவர்த்தன காலத்திலும் நடைபெற்றது. கொழும்பில் தமிழ் மக்கள் அதனை உண்மை என ஏற்று நடந்து கொண்டார்கள். அதாவது திறந்த பொருளாதாரம் வந்ததும் நாம் எல்லோரும் சமமே. எமக்குப் பொருளாதார ரீதியாக சம உரித்துக்கள் தரப்பட்டுள்ளன. சம வாய்ப்புத் தரப்பட்டுள்ளன. நாம் ஒரு தாய் மக்களே என்று பொருளாதார விருத்தியில் ஈடுபட்டார்கள் எம்மவர். ஆனால் நடந்தது என்ன திறந்த பொருளாதாரம் தமிழ் வணிகர்களை, தமிழ்க் கடை முதலாளிகளை வருமான உச்சத்துக்கு ஏற்றியது.

உடனே நாம் ஒரு தாய் மக்கள் என்ற எண்ணத்தை மறந்து தமிழ் மக்கள் மீது ‘1983’ கட்டவிழ்க்கப்பட்டது. கடைகள், வீடுகள் எரிக்கப்பட்டன. ஏற்கனவே யாழ் நூலகம் 1981இல் எரிக்கப்பட்டிருந்தது.

‘நாம் யாவரும் இலங்கையர்’ ‘ஒரு தாய் மக்கள்’ என்ற கூற்றுக்களுக்கு என்ன நடந்தது? எமது கட்டுப்பாட்டுக்குள் நீங்கள் இருக்கும் வரையில்தான் உங்களுக்கு ஒரு தாய் மக்கள் அந்தஸ்து. எங்கே எங்களை மிஞ்சி பொருளாதார விருத்தியில் ஈடுபடுகின்றீர்களோ உடனே உங்களைக் கீழிறக்கி விடுவோம். அதாவது ஒரு தாய் மக்கள்தான். ஆனால் நீங்கள் எங்கள் தாயின் அன்பைப் பெற முயற்சிக்கக் கூடாது. உங்களுக்கு சம அந்தஸ்து கொடுக்க முடியாது. அடித்து நொறுக்கி விடுவோம் என்பதே அடிப்படைச் சித்தாந்தம். கண்டியில் முஸ்லிம் சகோதரர்களுக்கு நடந்ததும் இதுவேயாகும். அவர்கள் எல்லா விதத்திலும் முன்னேறுவதைக் கண்ட பெரும்பான்மையினருக்கு அது சகிக்கவில்லை. அடித்து, எரித்து, நொறுக்கி விட்டார்கள்.

இப்பொழுது உங்கள் கேள்விக்கு வருவோம். பொருளாதார விருத்தியும் நல்லிணக்கமும் என்று அரசாங்கம் கூறும்போது அதன் அர்த்தம் என்ன? தமிழ் பேசும் மக்களான உங்களைக் காதலிக்க விரும்புகின்றது அரசாங்கம் என்று அர்த்தம். அதற்கு விட்டுக் கொடுத்தால் பல பரிசுகளைத் தருவார்கள்: கேட்பதை எல்லாம் வாங்கித் தருவார்கள். ஆனால் உங்களிடம் இருப்பதையும் பறித்துக் கொள்வார்கள். கடைசியில் திருமணம் முடிக்க முடியாது என்று கைவிரித்து விடுவார்கள். எதைக் கூறுகின்றேன் என்றால் பொருளாதார விருத்தி கண்டு நாம் ஏமாந்தால் வடக்கைத் தமக்கு அடிபணியச் செய்து எமது வளங்களைச் சூறையாடி சிங்களக் குடியேற்றங்களை நடைமுறைப்படுத்தி கடைசியில் அரசியல் உரிமைகள் எவற்றையும் தராமல் விட்டுவிடுவார்கள். தரமுடியாது என்று கூறிவிடுவார்கள்.

அரசாங்கம் அதைச் செய்யக் கூப்பிடுகிறார்கள். இதைச் செய்யக் கூப்பிடுகிறார்கள். ஏன் அதை ஏற்காது காலம் கடத்துகின்றீர்கள்? உங்களுக்கு எமது வட கிழக்கு பொருளாதாரத்தில் முன்னேறுவது பிடிக்கவில்லையா? தொடர்ந்து வந்த பெரும்பான்மை அரசாங்கங்கள் நேசக்கரம் நீட்டுக்கின்றன. ஏன் அதைப்பற்றிப் பிடிக்க பின் நிற்கின்றீர்கள்? என்றெல்லாம் எம்மவர் எங்களிடம் கேட்கின்றார்கள்.

நாம் அரசாங்கங்களுடன் சேர்ந்து பயணிக்க எதிர்ப்புத் தெரிவிப்பவர்கள் அல்ல. ஆனால் எம்மைக் கண்ணை மூடிக் காட்டுக்குள் அவர்கள் கொண்டு போக நாம் இடம் கொடுக்க மாட்டோம். அதனால்தான் மத்தியின் எந்தச் செயற்பாடாக இருந்தாலும் மாகாணமும் அதில் பங்குதாரர் ஆக்கப்பட வேண்டும் என்று கூறி வருகின்றோம் ஆகியும் வருகின்றோம்.

பொருளாதார விருத்தியைத் தந்து எமது உரிமைகளை, உரித்துக்களைத் தராது விடுவது எம்மைப் பணத்திற்கு வாங்குவது போலாகும். வாங்கிய பின் எம்மால் வாய் திறக்க முடியாது. நாம் விலைக்கு வாங்கப்பட்டவர்கள் ஆகிவிடுவோம். இன்று எமது மக்கள் பிரதிநிதிகள் பலர் அந்த நிலையில்தான் இருக்கின்றார்கள்.

தென்னாபிரிக்காவில் நல்லிணக்க நடவடிக்கைகள் அரசியல் சிக்கல்கள் தீர்த்ததன் பின்னரே அந்த நாட்டு அரசாங்கத்தால் முடுக்கி விடப்பட்டிருந்தன. அதேபோல் எமது உரித்துக்கள் தரப்பட்ட பின், எமது உரிமைகள் ஏற்கப்பட்ட பின், நாமும் மத்தியும் சம நிலையில் இருந்து எதையும் செய்யலாம். பொருளாதார விருத்தியால் இன்றைய காலகட்டத்தில் நல்லிணக்கமும் கொண்டுவருவது என்பது கிணற்றுக்குள் விழுந்திருக்கும் ஒருவனுக்கு வெளியில் இருப்பவன் சம உரிமை பற்றிப் பேசுவது போலாகும். அதில் அர்த்தம் இல்லை. முதலில் கிணற்றுக்குள் விழுந்திருப்பவன் மேல் எடுக்கப்பட்டு சம தரையில் நிற்கும் போதுதான் அவனுடன் சம உரிமை பற்றியும் நல்லிணக்கம் பற்றியும் பேச வேண்டும்.

150000 இராணுவத்தினரை வடமாகாணத்தில் தரித்து வைத்துக்கொண்டு, சகல நிர்வாக, பொருளாதார, அரசியல் உரித்துக்களைத் தாமே தம் கையில் வைத்துக் கொண்டு, பொருளாதார விருத்தியும் நல்லிணக்கமும் என்று பேசுவது எம்மைத் தொடர்ந்து தமது கட்டுப்பாட்டில் வைத்திருக்க எடுக்கும் நடவடிக்கையாகும். அந்தப் பொறியினுள் அகப்பட்டுக் கொண்டோமானால் இன்னும் பத்து வருடங்களில் வடகிழக்கு மாகாணங்களில் சிங்கள ஆதிக்கம் மேலோங்கிவிடும். எம்முள் பலர் வெளிநாடுகள் சென்று விடுவார்கள். எமது தனித்துவம் தொலைந்துவிடும். நேற்று முல்லைத்தீவில் இன்று நடைபெற்று வருபவை எமக்குச் சுட்டிக்காட்டப்பட்டது. சுமார் 6000 ஏக்கர் காணிகளைக் கையேற்கப் பார்க்கின்றது அரசாங்கம். இதற்கு எமது ஆளுநர் உடந்தையாகவுள்ளார்.

ஆகவேதான் அரசியல் தீர்வுக்கு நாங்கள் முதலிடம் கொடுத்துள்ளோம். சில தினங்களுக்கு முன்னர் மத்திய அரசாங்கத்தின் அலுவலர் ஒருவர் என்னைக் காண வந்திருந்தார். பெரும்பான்மை இனத்தைச் சேர்ந்த அவருக்கு வட மாகாணத்தின் சகல வளங்கள் பற்றியும் தெரிந்திருந்தது. இந்தச் செயற்பாடுகளில் ஈடுபட்டீர்களானால் உங்கள் பொருட்களை ஏற்றுமதி செய்ய உதவியாய் இருக்கும். நாட்டுக்கு நல்ல ஆதாயம் கிடைக்கும். அவ்வாறு செய்வதற்கு நாம் இனாமாக 50 சதவீதச் செலவைத் தருகின்றோம் என்று கூறிச் சென்றுள்ளார். முழு நாட்டையும் முன்வைத்து வடமாகாணத்தால் நாட்டுக்கு என்ன நன்மை கிடைக்கும் என்று அவர் எண்ணுவதை நான் பிழையென்று கூறவில்லை.

நாம் ஏற்றுமதி செய்தால் மத்திக்கு அன்னிய செலாவணி கிடைக்கும்: நம்மவர்கள் பொருளாதார வளம் பெறுவார்கள். அதையும் மறக்கவில்லை. ஆனால் காலக் கிரமத்தில் நடக்கப்போவதென்ன? மத்தியை நம்பியே எமது வாழ்க்கை முறை நடைமுறைப்படுத்தப்படும். மரத்தைச் சுற்றிய கொடியாகி விடுவோம் நாங்கள். எவ்வாறு 1977ஆம் ஆண்டில் ஜே.ஆர்.கொண்டு வந்த திறந்த பொருளாதாரம் தமிழ் மக்களுக்கு பயன் அளித்து அவர்கள் பொருளாதார உச்ச நிலையில் 1983ஆம் ஆண்டு முதற் பகுதியில் திகழ்ந்தார்களோ அதேபோன்று வட மாகாணமும் பொருளாதார விருத்தி பெற இவை யாவும் இடமளிக்கும். ஆனால் உரிமைகள் அற்ற நாம் வடமாகாணத்தில் 1983 ஜூலை மாதத்தை மீண்டும் ஒரு முறை அனுபவிக்க மாட்டோம் என்பதில் என்ன நிச்சயம்? படையினர் தொடர்ந்து இருப்பர். தெற்கத்தேய முதலீடுகள் எக்கச்சக்கமாய் அப்போது இங்கு வந்திருக்கும். எமக்கென அரசியல் அதிகாரங்கள் இருந்தால் எம்மால் 1983ஆம் ஆண்டின் கறுப்பு ஜூலை மீண்டும் எம்மீது கட்டவிழ்க்கப் படுவதைத் தடுக்கலாம். சிங்களவருடன் மிக அன்னியோன்னியமாய் ஒட்டி வாழ்ந்து வந்துள்ள கண்டிய முஸ்லிம்களுக்கு இந்தக் கதியென்றால் எமது நிலை என்னவாக இருக்கும்?

ஆகவே இராணுவத்தை இங்கு வைத்துக்கொண்டு அதிகாரங்களைத் தம்வசம் வைத்துக்கொண்டு பொருளாதார விருத்தி பற்றியும் நல்லிணக்கம் பற்றியும் அரசாங்கம் பிரஸ்தாபிக்கும் போது முன்னறிவு உள்ள தமிழர்கள் யாவரும் அதன் அர்த்தத்தைச் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். இல்லை என்றால் சத்திரசிகிச்சை வெற்றி. ஆனால் நோயாளி இறந்துவிட்டார்' என்று ஆகிவிடும்.

இன்னொன்றும் கூறவேண்டும். பொருளாதார விருத்தியும் நல்லிணக்கமும் என்று கூறித்திரியும் எமது அரசியல்வாதிகள் பலர் சுயநலத்துக்காகவே அதனை விரும்புகின்றார்கள். தமிழர்களுக்கு உரிமைகள் கிடைக்குதோ இல்லையோ அவர்களுக்குப் பை நிறையப் பணம் கிடைக்கும். அரசாங்கம் கை நிறையக் கொடுக்கக் காத்து நிற்கின்றது. பைகளை நிரப்பிக்கொண்டு எம்மவர்கள் போய்விடுவார்கள். அதற்கு தட்சணையாய் பௌத்த மதத் தலங்களை அமைக்கவிடுவார்கள். தென்னவர் இங்கு காலூண்ட இடமளிப்பார்கள். தெற்கத்தையவர்களை வட மாகாணத்தில் பதவிகளில் ஏற இடமளிப்பார்கள். மொத்தத்தில் தமிழ் மக்களின் தனித்துவத்தைத் தமது பையை நிரப்பி தென்னவர்களுக்கு விற்றுவிடுவார்கள்.

எனவேதான் அரசியல் தீர்வு முதலில் வரவேண்டும் என்று ஆசைப்படுகின்றோம். அதற்காக நாம் மத்தியை புறக்கணிக்கவில்லை. செய்வதைச் செய்யுங்கள். ஆனால் எங்களையும் பங்குதாரர்கள் ஆக்கிச் செய்யுங்கள் என்றே கூறி வருகின்றோம். அப்போது அவர்களின் செயல்களை நாம் உன்னிப்பாகக் கவனித்து உரிய நடவடிக்கைகள் வேண்டும்போது எடுக்கலாம்.

# நம்பிக்கையில்லாப் பிரேரணையிலிருந்து தன்னைக் காப்பற்றிக் கொள்ள, எவரும் வெளிநாடு போக முடியாது தடை போட்டுள்ள ரணில் விக்கிரமசிங்க



ஐக்கிய தேசிய முன்னணியின் அமைச்சர்கள் மற்றும் பாராளுமன்ற உறுப்பினர்கள் ஆகியோருக்கு எதிர்வரும் ஏப்ரல் 1 ஆம் திகதி முதல் 6 ஆம் திகதி வரையிலான காலப்பகுதிக்குள் வெளிநாடு செல்வது தடை செய்யப்பட்டுள்ளதாக பிரதமர் ரணில் விக்ரமசிங்க அறிவித்துள்ளார்.

எதிர்வரும் 4 ஆம் திகதி பாராளுமன்றத்தில் முன்வைக்கப்படவுள்ள தனக்கெதிரான நம்பிக்கையில்லாப் பிரேரணையை தோல்வியடையச் செய்வதற்கு வாக்களிக்கப்பட வேண்டியுள்ளதனால், இவர்களின் வெளிநாட்டுப் பயணம் இவ்வாறு ரத்து செய்யப்பட்டுள்ளதாக கூறப்படுகின்றது. தற்பொழுது, வெளிநாட்டுப் பயணத்தில் ஈடுபட்டுள்ளவர்களையும் நாடு திரும்பும் படி அறிவிக்கப்பட்டுள்ளதாகவும் தெரிவிக்கப்படுகின்றது என்றும் அறியப்படுகின்றது.

# தமிழ்க் காங்கிரஸ் கட்சிக்கு உரித்தான சாவகச்சேரி நகர சபையின் ஆட்சியை ஈ.பி.டி.பியின் ஆதரவுடன் கூட்டமைப்பு தன் வசமாக்கியது

யாழ். சாவகச்சேரி நகர சபையில் முன்னாள் அமைச்சர் டக்ளஸ் தேவானந்தா தலைமையிலான ஈழமக்கள் ஜனநாயக் கட்சியின் பகிரங்க ஆதரவுடன் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு ஆட்சியை கைப்பற்றியுள்ளது. சாவகச்சேரி நகரசபையின் முதல் பெண் தலைவராக தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் சார்பில் போட்டி யிட்ட இராமநாதன் சிவமங்கை, உப தலைவராக அருணாசலம் பாலமயூரன் ஆகியோர் தெரிவுசெய்யப்பட்டுள்ளனர். சாவகச்சேரி நகர சபைக்கான புதிய தலைவரை தெரிவு செய்யும் அமர்வு வட மாகாண உள்ளூராட்சி உதவி ஆணையாளர் பற்றிக் டிரஞ்சன் தலைமையில் நேற்று முன்தினம் புதன்கிழமை மாலை சாவகச்சேரி நகரசபா மன்றத்தில் நடைபெற்றது. 18 உறுப்பினர்களைக் கொண்ட சாவகச்சேரி நகரசபையில் அகில இலங்கை தமிழ் காங்கிரஸ் 6 உறுப்பினர்களையும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பினர் 5 உறுப்பினர்களையும் ஈழமக்கள் ஜனநாயக கட்சியினர் 3 உறுப்பினர்களையும் சிறிலங்கா சுதந்திரக் கட்சி 2 உறுப்பினர்களையும் ஐக்கிய தேசியக்கட்சி மற்றும் சுயேட்சைக்குழு ஆகியன தலா ஒரு உறுப்பினர்களையும் பெற்றுள்ளனர்.

புதிய தலைவரை தெரிவுசெய்வதற்கான அமர்வில் அகில இலங்கை தமிழ்க் காங்கிரஸினர் யோ.ஜெயக்குமாரை தலைவராக பிரேரித்ததுடன் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பினர் இராமநாதன் சிவமங்கை என்பவரை தமது கட்சி சார்பில் பிரேரித்தனர் பெரும்பான்மை உறுப்பினர்கள் பகிரங்க வாக்களிப்பை கோரியதன் அடிப்படையில் இடம்பெற்ற வாக்கெடுப்பில், 12 வாக்குகளை பெற்று சாவகச்சேரி நகரசபையின் முதல் பெண் தலைவராக தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் சார்பில் இராமநாதன் சிவமங்கை தெரிவு செய்யப்பட்டார் அத்துடன் சாவகச்சேரி நகரசபையின் உப தலைவராக தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் சார்பில் அருணாசலம் பாலமயூரன் பிரேரிக்கப்பட்டு தேர்ந்தெடுக்கப்பட்டார்.

# கிளிநொச்சியில் கடற்படையினரின் உழவு இயந்திரம் மோதியதில் முன்னாள் போராளி பலியானார்

கடற்படையினரின் உழவு இயந்திரத்தில் மோதி வீதியில் தூக்கி வீசப்பட்ட முன்னாள் போராளி ஒருவர் பின்னால் வந்த கார் மோதி சம்பவ இடத்தில் பரி தாபமாக பலியாகியுள்ளார்.

கிளிநொச்சி சாந்தபுரத்தை சேர்ந்த மூன்று பிள்ளைகளின் தந்தையான அடைக்கலம் கொன் சலஸ் (வயது 42) என்பவரே மேற்படி உயிரி ழந்தவராவார். யாழ்ப்பாணம் நாவாந்துறை பகுதியில் தங்கியிருந்து கடற்தொழில் செய்துவரும் குறித்த நபர், கிளிநொச்சியில் அமைந்துள்ள தனது வீட்டுக்கு நேற்று முன்தினம் புதன்கிழமை இரவு யாழ்ப்பாணத்தில் இருந்து மோட்டார் சைக்கிளில் சென்றுள்ளார். சங்குப்பிட்டி- கேரதீவு வீதியில் கடற்படையினருடைய உழவு இயந்திரத்தில் பொருத்தப் பட்ட தண்ணீர் தாங்கி ஒன்று எந்தவித சமிஞ்ஞை விளக்குகளும் இன்றி நிறுத்தப்பட் டிருந்துள்ளது.

குறித்த உழவு இயந்திரத்தில் நீண்ட கம்பி ஒன்று பொருத்தப்பட்டிருந்த நிலையில் இந்த நபர் மோட்டார் சைக்கிளில் அப்பகுதிக்கு வந்த போது குறித்த கம்பி முகத்தில் மோதி நிலை தடுமாறிய நிலையில் எதிரே நின்ற உழவு இயந்திரத்தில் மோதுண்டு வீதியில் தூக்கி வீசப்பட்டார். அந்த சமயம் யாழ்ப்பாணத்தில் இருந்து அருட்தந்தையர்களை ஏற்றி சென்ற கார் ஒன்று குறித்த நபர் மேல் மோதியது. காரின் சில்லுக்குள் நசியுண்டு சம்பவ இடத்திலேயே குறித்தநபர் உயிரிழந்துள்ளார். குறித்த சம்பவம் தொடர்பாக பொலிஸார் விசாரணை களை மேற்கொண்டுள்ளனர்.







# கனடாத் தமிழ்க் கல்லூரி




# அண்ணாமலை பல்கலைக்கழகம்

## (தமிழ்நாடு, இந்தியா)

## இணைந்து நடாத்தும்

## தமிழ்மொழி, நுண்கலைகள், யோகா
## பட்டப்படிப்பு, பட்டப் பின்படிப்பு

கனடாத் தமிழ்க் கல்லூரி, இந்தியா - தமிழ்நாடு அண்ணாமலை பல்கலைக்கழகத்துடன் இணைந்து பட்டப்படிப்புகளினையும், பட்டப் பின்படிப்புகளினையும் தமிழ்மொழிக்கல்வி, நுண்கலைகள், யோகா ஆகிய துறைகளில் இக் கல்வியாண்டு முதல் மேற்கொள்கின்றது.

### தமிழ் இளங்கலை (B.A) வகுப்புகளில் இணைந்துகொள்வதற்கான தமிழ்மொழி அடிப்படைக் கற்கைநெறி சிறப்புத் தேர்வுக்கான விண்ணப்பம் கோரல்.

தமிழ் இளங்கலை வகுப்புகளில் இணைந்து கொள்வதற்கான அடிப்படைத் தகமையினைப் பெற்றிருக்காதவர்கள் இத்தேர்வை எழுதி அடிப்படைத் தகமையினைப் பெற்றுக்கொள்ளமுடியும்.

இத்தேர்வை எழுதும் தேவை உள்ளோர்..

- இலங்கையில் தமது சான்றிதழ்களைத் தவறவிட்டோர்.
- இலங்கையில் க.பொ.த சாதாரண தேர்வில் தமிழ்மொழியில் சித்தி பெற்றோர்.
- இந்தியக் கல்வி முறையில் தரம் பத்து வரை தமிழ் பயின்றோர்.
- கனடாவில், கனடாத் தமிழ்க் கல்லூரியில் உயர்நிலை 3 அல்லது 4 தரத்தில் பயின்றோர்.
- கல்விச் சபைகள், ஏனைய தமிழ் வகுப்புகளில் தொடர்ச்சியாக ஆண்டு பத்து வரை தமிழ் கற்றோர்.
- கனடியப் பல்கலைக் கழகங்களில் படிக்கும் தமிழ்கற்கை நெறியில் ஆர்வமுள்ள மாணவர்கள்.
- தாய் மொழியில் விருப்பங்கொண்டு பட்டப் படிப்பைத் தொடர விரும்புவோர்.

**விண்ணப்ப முடிவு நாள்: ஏப்ரல் 10, 2018**
**தேர்வு நாள்: மே 27, 2018**

**இக் கற்கைநெறிகள் அனைத்தும் பல்கலைக்கழகத்தின் நேரடி வழிநடத்துலுடன் நடைபெறும்.**

தொடர்புகளுக்கு: 416.757.2006 contact@tamilacademy.org www.tamilacademy.org

# ஆன்லைன் ஊழல்களை எவ்வாறு தடுப்பது?

ஆன்லைனில் பலக்கனக்கான சந்தர்ப்பங்கள் கிடைத்தாலும் கூட, கிடைக்கும் சந்தர்பத்திலும் அதிகமான ஊழல்கள் இருக்கவே செய்கின்றது. நீங்கள் சிந்திப்பது சிறந்த ஒரு சந்தர்ப்பமாக இருந்தாலும் கூட அது ஒரு தாளில் சுற்றப்பட்ட ஊழலாக கூட இருக்கலாம். அது மட்டுமல்லாமல், நீங்கள் சந்தேகமாக நினைப்பது ஒரு வேலை நிஜமான ஒன்ர்ரகவும் இருக்க கூடும். ஆகவே, ஆன்லைன் ஊழல்களை எப்படி தடுப்பது? அப்படிப்பட்ட ஊழல்களில் மாட்டிக்கொள்ளாமல் இருக்க இதோ உங்களுக்கான ஒரு சில தறிப்புகள்.



1. நீங்கள் ஒரு இணையத்தில் இருக்கும் பொது, அதன் அனைத்து விபரங்களும் பார்க்க உண்மையானதாகவே பார்க்க இருந்தாலும் கூட, அவற்றின் TERMS OF SERVICE ஐ பாருங்கள். அநேகமான சந்தர்ப்பங்களில் நீங்கள் அவற்றை பார்க்காமல் இருந்தால் சைன் அப் செய்ய இருப்பீர்கள். சில சமயங்களில் கட்டணம் பற்றிய விபரங்கள் மறைக்கப்பட்டே இருக்கும். நீங்கள் ஊழலிலிருந்து பாதுகாத்துக்கொள்ள முதலிலே பார்க்க வேண்டியது இதுதான்.

2. ஊழல்களில் மாட்டிக்கொள்ளும் இன்னொரு முறை தான் ஈமெயில் மெசஜ்கள். இதை தவிர்க்க சிறந்த ஒரு வழியாக, உங்களுக்கு தெரிந்த நபர் மூலம் கிடைக்கும் மெசேஜ்களை தவிர ஏனையவற்றை தவிர்ப்பதாகும். நீங்கள் ஏற்கனவே சைன் அப் செய்யா விடில் அதை மறந்து விடுங்கள். பலவகையான ஊழல்கள் ஈமெயில் மூலமாக பரவிக்கொண்டே இருக்கிறது. அவற்றை இனங்கண்டு உறுதி செய்வது ஒரு முடியாத காரியமாகவே இருக்கின்றது. அது மட்டுமல்லாமல், நீங்கள் வெளிநாட்டில் ஒரு லாட்டரியில் வென்றதாக தகவல் பெற்று நீங்கள் பணக்காரர் ஆக போகின்றீர்கள் என்ற ஒரு தகவலை ஒரு வங்கி நிர்வாகி அனுப்புவது போன்றவை ஒரு பொதுவான ஊழலாக இருக்கின்றது.

3. நீங்கள் ஒரு சிறந்த சலுகையை கண்டு அவர்களின் TOS பார்த்த போதிலும் சந்தேகங்கள் இருப்பின், அந்த பெயரை தேடுங்கள். அந்த பெயருடன் 'Scam' என்றும் இணைத்து தேடும் போது, இதற்க்கு முன் ஏமாற்றப்பட்டவர்களின் விவரமும் வரக்கூடும். இப்படி சிக்கிகொண்ட பல பேர் அவர்கள் போன்று இன்னொருவர் சிக்கிக்கொள்ளகூடாது என்று அவர்களின் அனுபவத்தை பகிர்ந்திருப்பார்கள். இது ஒரு ஊழல் செய்யும் கம்பனி அல்லது ஒரு தனி நபரை இனங்கான உதவியாக இருக்கும்.

4. அனைத்து விற்பனை கடிதங்களையும் நம்பவேண்டாம். அதை மிகவும் கவனாமாக பார்க்கவும். அநேகமான சந்தர்ப்பங்களில் நீங்கள் இதை இலவசமாக பெறலாம் என (முக்கியாமாக, கடும் சிவப்பு நிறத்திலோ, BOLD செய்யபட்டோ எழுதபட்டிருக்கும்) ஆனால், அதற்கு கீழே "இதை வாங்கினால்..." சில நேரங்களில் ஆயிரம் கணக்கான டாலர்கள் செலவழித்து ஒரு அத்ஜிக பெறுமதி இல்லாத ஒரு பொருளை இலவசமாக பெறக்கொட்டும். இதை மிகவும் கவனமாக பார்க்கவும். அதிகமான கடிதங்கள் உண்மையானதாக பார்க்க இருந்தாலும் கூட, அதில் அதிகமானவை ஊழலாகவே இருக்கின்றது.

இந்த விபரங்களை கைப்பற்றும் போது பாரிய மன அழுத்தங்களிலிருந்தும் பண மோசடிகளிளிருந்தும் பாதுகாத்துக்கொள்ளலாம். ஒவ்வாரு தடவையும் சைன் அப் செய்ய முதல் Warning- எச்சரிக்கை அடையாளத்தை தேடி பார்க்கவும். மேலே உள்ள குறிப்புகளை பின்பற்றினால் ஊழலிலிருந்து பாதுகாத்துக்கொள்ளலாம்.

Please call MARK @ 416-489-2000 for more information.

# ஈழத்தமிழர்களின் திரைப்படமான "யாழ்"

## மலேசியாவில் திரையிடப்படுகின்றது



தமிழ் ஈழத்தைப் பின்னணியாக கொண்ட திரைப்படமானது "யாழ்". "சமீபத்தில் வெளிவந்த இந்த படம் தமிழ் மக்களின் இதயங்களைத் தொட்டிருக்கிறது. இதன்மூலம் தமிழ் திரை உலகிற்கு புதிய அந்தஸ்து கிடைத்திருக்கிறது என்ற பாராட்டுக்கள் உலகெங்கும் பரவிய வண்ணம் உள்ளன.

வன்முறை, கொடூரம், ஆபாசம் ஆகிய எதுவும் இல்லாமல், குடும்பத்துடன் பார்க்கும் தமிழ் உணர்வு மிக்க திரைப்படம் என்ற பாராட்டை பெற்றுள்ளது. தொடர்ந்து ஓடிக்கொண்டிருக்கிறது". என்று படக்குழுவினர் மகிழ்ச்சி தெரிவித்துள்ளனர்.

இது பற்றி கூறிய "யாழ்" பட இயக்குனர் எம்.எஸ். ஆனந்த் கூறுகையில் "இலங்கை தமிழர்கள் போருக்கு முன்பு இருந்த யதார்த்தம் கலந்த நிலையை கூறும் படம் ,இதுவாகும். மிக்க உலகத்தரம் கொண்ட ஈழத்தமிழர்களைப் பற்றி வெளிவந்த முதல் திரைப்படம் இது தான். தமிழ் சினிமா வரலாற்றில் தமிழ் ரசிகர்களை ஈழ மண்ணிற்கு இரண்டு மணி நேரம் கொண்டு சென்ற முதல் ஈழத்தமிழ் திரைப்படமான யாழ் இற்கு சார்பாக நல்ல விமர்சனங்களும், பாராட்டுகளும் கிடைத்துள்ளன. இதையடுத்து மலேசியாவில் இன்று வெள்ளிக்கிழமை 30-ந் தேதி இந்த யாழ் திரைப்படம் திரையிடப்படுகின்றது" என்றார்.

இந்த படத்தில் வினோத் கிசான், பாலாஜி, லீமாராணி, லீமா பாபு உள்ளிட்ட இலங்கை நடிகர்- நடிகைகள் நடித்துள்ளனர். எம்.எஸ். ஆனந்த் கதை, திரைக்கதை, வசனம் எழுதி, தயாரித்து, இயக்கியும் உள்ளார்.

# தமிழர்களின் தனித்துவம் மிக்க தலைவர் 'தந்தை செல்வா'

**தந்தை செல்வாவின் 120ஆவது பிறந்த நாள் 31.03.2018 வருகிறது. அதையொட்டி இக்கட்டுரை வரையப்படுகிறது.**

*மா.க.ஈழவேந்தன்*

(முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினர், இலங்கை)

ஈழத்தமிழரின் இனச்சிக்கலைத் தீர்க்க எமக்குள்ள ஒரே வழி தமிழீழம் என்பதை அன்றே முழங்கியவர் தந்தை செல்வா. ஊதிவிட்டால் விழத்தக்க குச்சிவடிவம் தாங்கி, நடுநடுங்கும் கை காலுடனும் நடுங்கும் மேனியுடனும் நம்மிடையே காட்சி அளித்தவர் தந்தை செல்வா. ஆனால் அவரிடம் நடுங்காத கொள்கை இருந்ததனால் இந்நாட்டை ஆண்ட அரசுகள் அவரைக் கண்டு நடுங்கின. இந்திய விடுதலை வரலாற்றிலும், பாகிஸ்தான் விடுதலை வரலாற்றிலும் இரு பெரும் தலைவர்கள் இத்தகைய வடிவம் கொண்டே விளங்கினர். ஒருவர் அண்ணா காந்தி, மற்றையவர் முகமது அலி ஜின்னா. முன்னையவர் பிரித்தானியப் பேரரசை தலைமை தாங்குவதற்கு உடல் உறுதியைவிட உள்ள உறுதியே முதன்மை வாய்ந்தது என்பதை இத்தலைவர்களின் வரலாறு எடுத்துக் காட்டுகிறது.

**நெருக்கடிக்கு ஈடுகொடுத்த தலைவன்:**

நெருக்கடிக்கு ஈடுகொடுத்த தலைவன் ஒரு தலைவனுக்கு இருக்க வேண்டிய தலையாய பண்புகள், உள்ளத் தூய்மையும் சிந்தனைத் தெளிவும் துணிவும் என்பனவே. நெருக்கடிக்கு ஈடுகொடுக்கின்ற தலைவனிடம் இப் பண்புகள் குடிகொண்டிருந்தாற்றான் அவனால் வெற்றிபெற முடியும். இவை அனைத்திற்கும் மேலாக விலைபோக மறுக்கின்ற உறுதிப்பாடும் ஒரு தலைவனிடம் நிலைபெற்றிருக்க வேண்டும். எம் தந்தை வேலுப்பிள்ளை செல்வநாயகத்திடம் இப்பண்பு நிறைந்திருந்தது.

பல பேசக் காமுறாது சில சொற்கைளையே அளந்து பேசியவர் தந்தை செல்வா. சொற்கள் மீது காதல் கொண்டு என் வழக்கை இழக்க நான் ஆயத்தம் இல்லை என்பது அடிக்கடி அவர் வாயிலிருந்து வரும் சொற்கள். மேற்குறித்த சொற்களோடு வாயிற் புன்னகைபூத்த நிலையில் அவர் கூறும் மற்றைய சொற்றொடர் வழக்கில் வெற்றிபெறுவது எளிது. ஆனால் கொள்கையில் வெற்றி பெறுவது கடினம் என்பதே ஆகும். வேறு சொற்களில் விளம்பின் தந்தை செல்வா பேசியது மிகக்குறைவு. எழுதியது அதைவிடக் குறைவு. அத்தோடு பிறிதோர் சொல்லை வெல்லும் சொல்லையே அவர் கையாண்டார்.

ஆனால் தமிழன் நிலைபற்றி அவர் ஆழ்ந்து சிந்தித்தார். ஆகவேதான் அவர் வாயில் இருந்து வரும் ஒவ்வொரு சொல்லையும் தமிழ் மக்கள் உன்னிப்பாகக் கவனித்தனர். உள்ளத்தில் ஒளி உண்டாயின் வாக்கினிலே ஒளி பிறக்கும் என்பது பாரதியின் கூற்று. தந்தையின் சொற்களைப் பொறுத்தவரையில் முற்றிலும் பொருந்தமுடையதே. தன்னுடைய இறுதிக் காலத்தில் அவர் ஓங்கிக் குரல் எழுப்ப முடியாத நிலையில் அவர் மெல்லிய குரலில் பேசியவற்றை நான் ஓங்கிய குரலில் ஒலித்தேன்.



சிலவேளையில் அவர் பேசியவற்றை நான் என் நடையில் பேசியபோது, புன்னகைபூத்த நிலையில் நான் பேசியவற்றை அப்படியே சொல்ல வேண்டுமென்று கூறுவார். தந்தையைப் பொறுத்தவரையில் மாறுபடும் கருத்துக்களைப் பொறுமையோடு செவிமடுப்பார். ஆனால் தான் ஆழந்த சிந்தனையின் அடிப்படையில் அவர் எடுத்த முடிவுகளை விட்டுக் கொடுத்ததில்லை. ஆளுங்கட்சிகளுடன் ஒத்துப்போகும் முறையில் சில முதியோர் அவருக்கு அறிவுரை வழங்கினர். தாம் முதியோர் என்பதையும் வலியுறுத்தினர். அப்பொழுது நான் முதியவன் இல்லையா என்று அவர்களை அவர் மடக்கியதை நான் பலவேளைகளில் கண்டதுண்டு. மாற்றாரின் புன்முறுவலோடு மயக்கும் மொழிகளோ தந்தையை என்றும் மயக்கியதில்லை. மாறாக தானும் புன்முறுவல் பூத்து தன் கருமத்தில் கண்ணாயிருந்தார். எதிர்த்து அழிக்க முடியாத தலைவர்களை அனைத்துப் புகழ்மாலை சூட்டிப் பட்டம் பதவி வழங்கி அழிப்பது அரசியலில் எதிரிகள் கையாளும் ஒரு சூழ்ச்சி. அரசியலில் நிறைய அனுபவம் பெற்ற தந்தை அவர்கள் இத்தகைய நிலையற்ற மாயைகளில் மயங்க மறுத்தார்.

**தமிழ்க்குடியைக் காப்பாற்றிய குடியியல் வழங்குரைஞர்**

தரணி போற்றும் சட்டத்தரணி. சட்டத்துறையில் அவர் மிக உன்னத நிலையில் இருந்தபோதும் அரசியல் வழங்குரைஞராக விளங்கியபோதும் நான் என்ற அகந்தையோ நான் என்ற செருக்கோ அவரை ஆட்கொண்டதில்லை.

அவர் குடியியல் வழக்குரைஞராக விளங்கியவர். அவர் குற்றவியல் வழங்குரைஞராக விளங்கவில்லை. எனவே தமிழ்குடியை உயர்த்த அவர் பாடுபட்டார். ஆனால் அரசியலை குற்றவியலாக்கவில்லை. வன்சொற்கள் பொழியப்பட்டபோதும் தமக்கே உரிய புன்முறுவல் பூத்தத் தன்னடக்கத்தின் திருவுருவமாய் காட்சிக்கு எளியவராய் கடுஞ்சொல் அற்றவராய் விளங்கியவர் தந்தை செல்வா.

சினம் கொள்ளாதவர் சினம் கொண்டதும் உண்டு. தந்தையை எவரும் எளிதில் கோபத்திற்கு ஆளாக்க முடியாது. ஆனால் அவரின் கோபத்தைத் தூண்டக் கூடிய நம்பிக்கை துரோகச் செயல் ஒன்றுதான். வெளிப்படையான எதிரியைவிட காட்டிக்கொடுக்கும் கயவர்களைக் கண்டு அவர் கடுங்கோபம் கொண்டார்.

**முஸ்லிம் மக்களுக்கு இடித்துரைத்தல்:**

அம்பாறை பறிபோகின்றபோது முதலில் பாதிப்புக்கு உள்ளாகுபவர்கள் முஸ்லிம் மக்கள். அடுத்து தமிழர்க்கே அழிவு ஏற்படும் என்று எச்சரித்தவர் தந்தை செல்வா. இவ்வுண்மையை தமிழர்கள் அன்றே உணர்ந்தனர். இன்று முஸ்லிம்கள் காலம் கடந்த நிலையில் உணரும் நிலையில் உள்ளனர். உல்லையில் தொல்லை, பொத்துவிலில் தொல்லை என்று புலம்பும் நீங்கள் அம்பாறை பறிபோவது உங்களுக்குப் புரியவில்லையா என்று ஹக்கீம் அவர்களை நாளுமன்றத்தில் நான் இடித்துக் கேட்டபோது, அவர் பூத்த புன்னகைக்குப் பொருள் புரியாது தத்தளிக்கின்றேன். தந்தை செல்வா வழியில் நிலம்தான் ஒரு இனத்திற்கு நிலையான வாழ்வு என்பதைக் கூறி வாழ்வகத்தைக் காத்த வன்னிய சிங்கம்.

**மலையகத் தமிழ் மக்களுக்காகக் குரல் எழுப்பியவர்:**

தமிழனை ஒன்றுபடுத்திய தலைவன் வடக்குக் கிழக்கை இணைத்து மலையகத் தமிழ் மக்களையும் எம்மவராகக் கருதி சிந்தித்துச் செயலாற்றியவர் எம் தந்தை. மதம் கடந்த நிலையிலும் தமிழினத்தை ஒன்றுபடுத்தியவர் அவர். எனவேதான் கிறிஸ்தவரான தந்தை செல்வாவை இந்துக்களான பெரும்பான்மைத் தமிழர்கள் அவரைத் தலைவராய் ஏற்றனர். மலையகத் தமிழ் மக்களின் குடியுரிமை, வாக்குரிமை 1949இல் பறிக்கப்பட்டபோது இன்று அவர்களுக்கு நாளை எமக்கு என்று ஆவது அறியும் நிலையில் எச்சரித்தவர் தந்தை செல்வா.

தந்தை செல்வா உட்பட எம் ஈழத்தமிழ்த் தலைவர்கள் அன்று இட்டவித்து வீண் போகவில்லை. மாறாக துளிர்க்கத் தொடங்கியுள்ளதை நாம் காணக் கூடியதாக இருக்கிறது. காலப்போக்கில் இந்தியத் துணைக் கண்டமும் உலகமும் ஈழத்தமிழர் சார்பில் செவிசாய்த்து செயற்படுமென்ற நம்பிக்கையும் எமக்குண்டு. நல்லதை எதிர்பார்ப்போம். ஆனால் எதற்கும் ஆயத்தமாய் இருப்போம்.

# தற்கால தமிழ்ப் பேச்சுக்கலை

*பேராசிரியர் சபா. ஜெயராசா*

ஒலி வடிவில் எண்ணங்களையும் உணர்வுகளையும் கருத்துக்களையும் கற்பனைகளையும் கண்டுபிடிப்புக் களையும் வெளியிடல் பேச்சு எனப்படும். அறிவு வளர்ச்சியில் அது கலையாக மாற்றம் பெற்றது.

பேச்சு என்பது தொடர்பாடல் வழிமுறையாகவும் மொழித் திறனாகவும் அமைகின்றது. எழுத்து மொழிக்கு அதுவே அடிப்படையாகின்றது.

பேச்சை ஆராய்ந்த மார்க்சிய உளவியலாளர் வைகோட்சி ஒரு முக்கியமான கருத்தை முன்வைத்தார். அறிகை அமைப்பை வடிவமைத்துக் கொள்வதற்கு அகத்திலே நிகழ்த்தப்படும் செயல் முறை அதுவென அவர் குறிப்பிட்டார். காட்சி கண் வழியாக மனத்திலே ..நக்கள் உருவாக்கப்படுதல் போன்று பேச்சு வழியாகவும் மூளையிலே மனப்படங்கள் உருவாக்கப்படுகின்றன. பேச்சின் வழியாக ஒலிவடிவ ஞாபகம் தோற்றுவிக்கப்படுகின்றது.

ஒலி வடிவ ஞாபகம் எழுத்து வழியாகவும் எழுத்து வழியான ஞாபகம் பேச்சு வழியாகவும் மாற்றம் செய்யப்படக் கூடியது. தமக்குள் தாமே பேசிக் கொள்ளல் ஒரு முக்கியமான உளவியற் செயற்பாடு. பிரச்சினை களுக்குத் தீர்வு காண்பதற்கும் கற்பனையை வளர்த்துக் கொள்வதற்கும் வெளிப்படுத்த முடியாத செய்தியை அழுத்தி வைத்து அலசுவதற்கும் உளச்சுகம் பெறுவதற்கும் அது துணை செய்யும்.

சமூகத்தில் இடம்பெற்ற வர்க்க நிலை சார்ந்த வளர்ச்சி, பேச்சிலும் செல்வாக்கை ஏற்படுத்தியது. வரன் முறையாகப் பேச்சைக் கற்றுக்கொள்ளல் மேட்டுக் குடியினருக்குரியதாயிற்று. அவ்வாறே வரன் முறைப்பாடலைக் கற்றுக்கொள்ளலும் அவர்களுக்கே உரியதாயிற்று. கிரேக்கத்தின் தொன்மையான கல்வி முறையினை ஆராய்கையில் இந்த நடப்பியல் வெளியாகின்றது. பேச்சுக்கலையும் வரன்முறை இசையும் மேட்டுக்குடியினரது பாடத்திட்டத்திலேயே சேர்க்கப்பட்டிருந்தன.

அடிமைகள் உள்ளிட்ட விளிம்பு நிலை மக்களுக்கும் பேச்சுக்கலையையும் இசைக் கலையையும் வரன் முறையாகக் கற்கும் வாய்ப்புக் கிடைக்கப் பெறவில்லை.

தொன்மையான தமிழ்ச் சூழலிலும் வர்க்க நிலை சார்ந்த அறிவுச் செயற்பாடு இடம்பெற்றிருந்தது. புலவர்கள் வரன்முறை சார்ந்த கல்வியால் உருவாக்கம் பெற்றவர்கள் நக்கீரன் என்ற தொன்மக் கதை புலவருக்கும் வரன் முறைக் கல்விக்கும் இடையேயுள்ள இறுக்கத்தைப் புலப்படுத்துகின்றது.

அதேவேளை, பாணர் என்போர், விளிம்பு நிலைச் சமூகத்தைச் சேர்ந்தோராயினர் வரன் முறை சாராக் கல்வியின் வாயிலாக அவர்கள் உருவாக்கம் பெற்றிருந்தனர். புலவர்கள் வரன் முறைக் கல்வியால் உருவாக்கம் பெற்றவர்கள் பவர் என்ற புலமையாளரின் வளர்ச்சி பாணர்களின் நிலையைப் பின் தள்ளியது. 'யாழ்முறி' என்ற தொன்மக் கதை பாணரின் அவல நிலையைப் புலப்படுத்தும்.

உலக வரலாற்றில் மேடைப் பேச்சு அல்லது பொது மொழிகை (Public speaking) என்பதன் தோற்றம் கிரேக்கத்திலிருந்து ஆரம்பிக்கின்றது. அவர்களது பேச்சுக் கலையில் மூன்று சிறப்புப் பரிமாணங்கள் வலியுறுத்தப்பட்டன. அவையாவன:

1) அதன் வடிவம்: பொருள் உள்ளடக்கத்துடன் சொற்களஞ்சியத்துடனும் அது இணைந்தது.

2) அதனை நம்ப செய்வதற்கான தூண்டல் நுட்பங்கள் அல்லது கருத்தேற்ற நுட்பங்கள் 'வசியப்படுத்தல்' என்றும் அதனைக் குறிப்பிடலாம்.

3) அதனோடு இணைந்த சுவையூட்டல் அல்லது மகிழ்நிலை ஈடுபாட்டை ஏற்படுத்தல்.

பேச்சுக்கலையை முன்னெடுத்த உலக நிகழ்ச்சிகள்

சமூக வளர்ச்சி, கல்விக் கையளிப்பு முறையில் நிகழ்ந்த முன்னேற்றம், அளவைக் கல்வியில் நிகழ்ந்த வளர்ச்சி, உளவியற் சிந்தனைகளில் நிகழ்ந்த உயர்ச்சி ஆகியவற்றோடு இணைந்த பேச்சுக்கலையும் வளரலாயிற்று. பின்வரும் உலக நிகழ்ச்சிகள் பேச்சுக்கலையின் வளர்ச்சியை முன்னெடுத்து வந்தன.

1) ஐரோப்பிய மறுமலர்ச்சிக் காலத்தில் (1400 - 1600 நூற்றாண்டுகள்) திருச்சபைக்கும் திருச்சபை சாரா ஆய்வாளருக்கும் இடையே நிகழந்த போட்டிகளும் கருத்தாடல்களும்.

2) அறிவொளிக்காலத்தால் (1600 - 1800 நூற்றாண்டுகள்) பழைய பேச்சுக்கலை நுட்பங்களைப் புதுக்கி மீட்டுருவாக்கம் செய்த நிகழ்ச்சிகள்.

3) காலனித்துவ நாடுகளில் கிறிஸ்தவ திருச்சபைகள் மதம் பேச்சு மதம் பரப்பத்துணை செய்தது.

4) மக்களாட்சி சிந்தனைகள் மற்றும் மார்க்சிய சிந்தனைகளின் வளர்ச்சியும் வாக்குரிமை வழியான நாடாளுமன்ற அரசியலும் மேடைப் பேச்சு அரசியலோடு இணைந்த செயற்பாடாயிற்று.

தமிழ்ச் சூழலிலே பேச்சுக்கலையின் வளர்ச்சியில் கிறிஸ்தவ திருச்சபையினரது வகிபாகம் முக்கியமானது. தேவாலயங்களிலே குருமார் நிகழ்த்திய அருள் உரைகள் (Sermons) தமிழிலே பேச்சுக்கலை வளர்வதற்குரிய வளமான பின்புலமாயின. விவிலியம், இறையியல் அறவொழுக்கம் மற்றும் பொது அறிவு சார்ந்த உரைகளை அவர்கள் தமிழில் நிகழ்த்தியதுடன் பூசை வழிபாடுகளையும் தமிழில் மேற்கொண்டனர்.

பேச்சு மொழியில் அவர்கள் உரை நிகழ்த்தியமை யால் கருத்துக்கள் இலகுவாகப் பொதுமக்களைச் சென்றடைந்தன. உரைகளிடையே கதைகளையும் உட்பொதிந்து பேச்சுக் கலைக்கு மேலும் வலுவூட்டினர். அவ்வாறு வீரமாமுனிவர் கூறிய கதைகளின் தொகுப்பே 'பரமார்த்த குரு கதைகள்'

**கிறிதஸ்வ பேச்சு மரபு**

கிறிஸ்தவர பேச்சு மரபு, ஆறுமுக நாவலருக்கு உசாத்துணையாக அமைந்தது. அவர் எழுதிய 'பெரிய புராண வசனம்' பேச்சிலிருந்து எழுத்துக்கு வந்தது. அக்காலகத்தில் நிகழ்ந்த சமயக் கலந்தாடல்களும் கருத்து மோதல்களும் பேச்சுக்கலையின் வளர்ச்சிக்கு மேலும் விசையூட்டின.

காலனித்துவ நாடுகளில் நிகழ்ந்த விடுதலை இயக்கக் கருத்தாடல்கள், சமூக சீர்திருத்த இயக்கங்கள், இதழியலின் வளர்ச்சி, தாய்மொழி வழிக்கல்வியின் வளர்ச்சி முதலியவை பேச்சுக்கலையின் ஏற்றத்தை முன்னெடுத்தன. இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் நிகழ்ந்த ஒரு முக்கிய நிகழ்ச்சி, ஒலிபெருக்கிக் கருவியின் அறிமுகம். அதாவது பேச்சொலியையோ, இசையையோ பெருக்கம் செய்யும் சாதனம். அது பேச்சாளர்களின் ஒலிச் செயற்பாட்டிலே முயற்சிச் சிக்கனத்தை ஏற்படுத்திக் கொடுத்தது.

இரண்டாம் உலகப் போரின் பின்னர் மூன்றாம் உலக நாடுகளில் அச்சாதனம் பரவலாக அறிமுகமாயிற்று. 'ஒலிபெருக்கி இன்றிப் பேச்சுக்கலை இல்லை' என்ற அளவுக்கு அதன் முக்கியத்துவம் வலுப்பெற்றுள்ளது. அதேநிலைவரம் இசைக் கலைஞர்களிடத்தும் ஏற்பட்டுள்ளது. அதாவது ஒலிவாங்கி முன்னே இல்லாவிடில் ஆற்றுகை செய்த முடியாத பேச்சாளர்களும் இசைக் கலைஞர்களும் இருக்கின்றனர். அதுவும் குறிப்பிட்ட இரக ஒலிபெருக்கி வசதி இருக்கும் பொழுது மட்டும் ஆற்றுகையை மேற்கொள்பாவ்களும் இருக்கின்றனர்.

(..24ம் பக்கம் பார்க்க)

# விடியலைத் தேடும் விண்மீன்கள்...

"மாத்தளை பாரீஸ் பாருக்"



துப்பாக்கிக்குப் பயந்து தொடை நடுங்காதே தோழா! ~ நாம்
தூண்டில் புழுக்கள் அல்ல, பூச்சிகளின் கூட்டமுமல்ல
தோன்றும் போதே புகழுடன் தோன்றிய ஒரு
தூய மார்க்கத்தின் தொலைந்து போகாத வாரிசுகள் நாம்!

கத்திக்கும் கம்புக்கும் கதி கலங்கி காணாமல் போக
நாமென்ன நாதியற்ற நடுத்தெரு நாய்க் கூட்டங்களா?
தன் தந்தையின் பெயர் அறியா பேயர் வீசும் பெட்ரோல் BOMBUகளுக்கு
பயந்து போய் வெம்பி நடுங்கும் வெற்றுக் கூட்டங்களா நாம்?

பாணும் பருப்பும் கருவாட்டுக் கறியும் காட்டோரக் கீரையும்
கிள்ளித் தின்பவன் எல்லாம் கூட்டமாய் வந்து நம்மை பாதகம் செய்கின்றான்
ஆடும் மாடும் நெய்யும் தேனும் நிதமும் தின்று
ஆறு வயதாவற்றுக்குள்ளேயே உன்
ஆதார நுனியை அரிவாளுக்குஅர்ப்பணித் என்
ஆண் சிங்கம் இன்று ஏன் நீ அலை பாய்கிறாய்?

சமரசம் எங்கள் சன்மார்க்கம் சொல்லும் வழி ~ ஆனால்
சாமதானம் என்பது எங்கள் சவக் குழிகளின் மேல் தான் என்று
சில சிங்களக் காடையர் நினைத்தால்
கட்டிய மனைவியை, கரம் பிடித்த காதலியை
தீட்டிய சித்திரம் போல் உன் முகம் பார்த்து
முறுவல் செய்யும் உன் மழலைச் செல்வத்தை
அல்லும் பகலும் அயராது உழைத்து
ஆசை ஆசையாய் நீ கட்டிய வீட்டை, உன் கடையை
தீக்கு இரையாக்க தீயவர் நினைத்தால் ~ நீ
தென்றலாய் அலைந்து தெம்மாங்கு பாடாதே தோழா! ~ ஒரு
புயலாய், பூமி இரண்டு படும் பூகம்பமாய் பொங்கி எழு!
பொசுக்க நினைக்கும் பொல்லா கூட்டத்தை ~ நீ
நச்சுப் பாம்பென நினைத்து நசுக்கி விடு!

எச்சில் வழியும் நாவுகள் தொங்க
எலும்புகள் தேடி ஓடி வரும் நாய்களை நரிகளை
எதிர்த்து நில்!
ஒரு கன்னத்தில் அடித்தால் மறு கன்னம் காட்ட
நாம் ஒன்றும் ஜீசஸ் அல்ல!
ஒரு கன்னத்தில் எவனேனும் அடித்தால், அவனின்
இரண்டு கன்னங்களிலும் திருப்பி அடி!
ஏவுகணையாய் மாறி எதிரியைப் பந்தாடு!
துஷ்டனைத் துவம்சம் செய்!

ஒற்றுமை தான் எங்கள் உன்னத நபி சொல்லிச் சென்ற சிறப்பு ~ அதனால்
ஒன்று படு உடன் பிறப்பே!
விகாரைகளை இடிக்க அல்ல ~ உன்னைத் தாக்க வரும்
விகாரைகளை வீழ்த்துவற்றுக்கு நீ ஒன்று படு!

இலங்கை என்பது சிங்கள பூமி
இது அந்நியன் தேசம் என்று
இதற்க்கு மேலும் எவனாவது சொன்னால்
சொன்னவனின் நாவை அறு!
நீ சென்று சேரு முன் உன் உம்மாவின் கர்ப்பப் பையும்
உனக்கு ஒரு அந்நிய தேசம் தானே!
Just ஒரு பத்து மாதம் தானே அங்கு நீ ஒரு guest போல் rest எடுத்தாய்...
பத்து மாதம் சுமந்தவள் உன் தாய் என்றால்
பத்து பதினைந்து தலைமுறை தாண்டியும்
விதை விட்டு, வேர் விட்டு, செடியாகி, கொடியாகி, மரமாகி,
மரத்தின் இலையாகி, மொட்டாகி, மணம் வீசும் மலராகி,
கனியாகி, கண்டவருக்கெல்லாம் நிழலாகி, இறுதியில்
அந்த மண்ணுக்கே உரமாகிப் போகின்றோமே.....
எவனடா சொன்னது இந்த மண் ஒரு அந்நிய தேசம் என்று?

என் தாயும் தகப்பனும்
என் பாட்டனும் முப்பாட்டனும்
அவனுக்கு முந்தி வந்த என் மூத்த தலைமுறையும்
மொட்டு விட்ட என் மோகன தேசம் இது! ~ எந்த
முட்டாளடா? சொல்வது இது அந்நிய தேசம் என்று?

செந்நீரோடு கண்ணீரும் சிந்தி ~ என்
சொந்தங்கள் செதுக்கிய தேசம் இது!
சோற்றுக்குச் சோரம் போகா சோனகனும்,
தன் மானங் காத்த மலேக்களும், ~ தான்
வாழும் இடமெல்லாம் இறை வழிபாட்டுக்கு
காலத்தால் அழியா கலைப் பொக்கிஷமாய்
பள்ளிகள் கட்டிய இந்திய முஸ்லீம்களும்
இரத்தமும் வியர்வையும் சேர்த்துக் கோர்த்த மணிமாலை இந்த நாடு!
இன்று, இதை விட்டு ஓடு என்றால் முடியுமா...? இல்லை, அது தான் நடக்குமா?

இறுதி மூச்சு உள்ள வரை
இதுதான் என் தேசம்! என் உயிரின் வாசம்! என் இதயத்தின் தேசம் என்று
ஓங்கி உரை!
போராடும் வீரனுக்குத்தான் மலக்குகளும் துணை வருவார்!
தோளோடு தோள் நிற்ப்பார்!
பத்ர் யுத்தம் சொல்லித் தந்த பாடம் இது!
பொறுத்தது போதும் இனி பொங்கி எழு என் தோழா!
வீணாய் சண்டைக்கு அலையாதே ~ ஆனால்
வாசல் தேடி வந்த சண்டைக்குப் பயந்து
பேடி போல் ஓடி விடாதே!

சப்ரு என்று சொல்லியே எம் வாயை அடைத்து விட்டார் ~ இன்று
சண்டாளர் சதி செய்து என் சாதியை அழிப்பதற்கு வகை செய்திட்டார்!
மறுமை முக்கியம் தான் ~ ஆனாலும்
இனிமேலும் நீ இமை திறந்து
இம்மையையும் கொஞ்சம் பார்க்காவிட்டால்
நீ கப்ரில் சப்தரோடு சமாதி காணலாம்!

தண்ணீர் இன்றி தத்தளிக்கும் மீன்கள் போல்
கரை காண முடியா கண்ணீர் வெள்ளத்தில் கரைந்து போகின்றார் எம்
இனப் பெண்கள்
சிரியாவுக்கே ஒன்றும் செய்யா Saudi Arabia வந்து உன்னை
அரவணைத்து ஆறுதல் கூறும் என்று மனப்பால் குடிக்காதே!
மைக் எடுத்து மயக்கும் மொழி பேசும்
மண்டை காய்ந்த அரசியல்வாதிகளும் உனக்கு அடைக்கலம் கொடுக்கப்
போவதில்லை
முதலில் அல்லாஹ்வை நம்பு,
அடுத்தது உனக்கான பாதுகாப்பை நீயே உருவாக்கு!
தரமான தலைமைகளைத் தேர்ந்தெடு!
அறிவுஜீவிகளுக்குப் பின்னால் அணி திரள்!
மற்ற மதங்களை மதி ~ ஆனால்
மதம் கொண்டு தாக்க வரும் மதி கெட்டவனை மண்ணுக்கு இரையாக்கு!

தேனாறும் பாலாறும்
தெவிட்டா பிர்தவ்ஸ்ம்
தேமதுர ஹூருல் ஐனும்
பிதற்றித் திரியும் பித்தலாட்டக்காரனுக்கும் பேடிக்கும் என்றும் கிடையாது!
ஆறிலும் சாவு நூறிலும் சாவு எனும்
அஞ்சாமைத் தீபத்தால் தீமையைக் கொளுத்தி
அழகிய தீனால் அவனியை அலங்கரிக்கும்
அன்பருக்கே அனைத்தும் என்பது அல்லாஹ்வின் ஆணை!

* *அல்லாஹ் = கடவுள்*
* *மக்குகள் = வானவர்கள்*
* *பத்ர் = முஸ்லீம்களின் முதல் யுத்த களம்*
* *சப்ரு = பொறுமை*
* *கப்ர் = கல்லறை*
* *பிரதவ்ஸ் = சொர்க்கம்*
* *ஹூருல் ஐன் = சொர்க்கக் கன்னிகைகள்*
* *தீன் = மதம்/மார்க்கம்*

# இயற்கை மருத்துவம்

**தலைவலி**

அதிமதுரம், சீரகம் இரண்டையும் சம அளவு எடுத்துக் கொள்ளவும். இரண்டும் நாட்டு மருந்துக் கடையில் தூள்களாகக் கிடைக்கும். இரண்டையும் கலந்து எடுத்துக் கொள்ளவும். இந்தத் தூளை தேனுடனோ, வெந்நீரிலோ கலந்து சாப்பிட்டால் எப்பேர்ப்பட்ட தலைவலியும் குறைந்துவிடும்.

**வயிற்றுப் பிரட்டலுக்கு (நாஸியா)**

1. பிடி கறிவேப்பிலை, அதன் தண்டு, அரை கரண்டி மிளகு, 1. தே.கரண்டி ஓமம். இவற்றைத் தனித்தனியாக வறுத்து, உப்பு சேர்த்துப் பொடி செய்துவைக்கவும். வயிறு சம்பந்தப்பட்ட எல்லாவற்றுக்கும் இது நல்லது. வயிற்றுப் பிரட்டல் இருந்தால், மோரில் சாப்பிடவும், வயிற்று வலிக்குச் சூடான சாதத்துடன் கலந்து சாப்பிடவும்.

**மூட்டுவலி**

கால் முட்டி, கணுக்கால், கைகளில் வீக்கம் இருந்தால் அரிசி களைந்த நீரை ஒரு பாத்திரத்தில் எடுத்துக் கொள்ளவும். அதைச் சூடு படுத்தி 1 கல்உப்பு போட்டு, வீக்கம் இருக்கும் இடத்தில் விடவும். இதைத் தொடர்ந்து செய்து வந்தால் வீக்கம் சரியாகிவிடும்.

**நரம்புத் தளர்ச்சி**

நரம்புத் தளர்ச்சி இருந்தால் முருங்கைக் கீரையை 1 பிடி எடுத்து, நன்றாகச் சுத்தம் செய்து வைத்துக் கொள்ளவும். அதனுடன் வேப்பிலைக் கொழுந்தைக் கொஞ்சம் எடுத்து 2 டம்ளர் நீரில் போட்டு நன்றாகக் கொதிக்க வைக்கவும். நன்றாகக் கொதித்ததும், எடுத்து ஆற வைத்து அடுத்த நாள் காலையில் குடிக்கவும். அந்திப் பழமும் சேர்த்துக் கொண்டால் அதுவும் நல்லது.

**நகச்சுத்தி**

பச்சரிசி சாதத்தைச் சூடாக எடுத்து, அதில் ஒரு கரண்டி மஞ்சள்தூள், கால் கரண்டி சுண்ணாம்பு ஆகியவற்றைச் சேர்த்து மிருதுவான சூட்டில நகத்தில் வைத்து நன்றாகக் கட்டிவிடவும். இப்படிச் செய்தால் நகச்சுத்தி பழுத்து உடைந்துவிடும்.

**பி.பி., சர்க்கரை நோய்க்கு**

சர்க்கரை நோய் வருவதைத் தவிர்க்க, நெல்லிக்காயின் கொட்டை, தாள்களை எடுத்து, 1 டம்பளர் நீரில் 1 கரண்டி தூளைப் போட்டு குடிக்கவும். இரண்டு தாள்களும் நாட்டு மருந்துக் கடையில் கிடைக்கும்.

(..22..ம் பக்கத் தொடர்ச்சி)

# தற்கால தமிழ்ப் பேச்சுக்கலை

மூன்றாம் உலக நாடுகளிலே காணப்பட்ட எழுத்தறிவு குன்றிய நிலையும் வாசிப்பு வளர்ச்சி குன்றிய சூழலும் மேடைப் பேச்சுக்கள் வழியாக அறிவைத் திரட்டிக் கொள்ளும் செயல்முறைக்கு வலுவூட்டின. புலமையாளர் பேச்சாளர்களாக இருந்த நிலையில் அந்தச் செயற்பாடு வழுவின்றி நிகழ்ந்தது.

அதேவேளை, போதிய தயாரிப்பின்றிப் பேசியோரும் ஒரே உரையை மீள மீள நிகழ்த்தியோரும் உள்ளடக்கத்தைக் கைவிட்டு மொழியலகாரத்தைப் பரவ விட்டோரும் பேச்சுக்கலையைப் பின்னடையச் செய்த நிகழ்ச்சியும் இடம்பெற்றது. தேய் வியம்பல் (cliche) பேச்சுக்கலையைச் சூழ்ந்து கொண்டது.

**திராவிட இயக்கம்**

தமிழ்ப் பேச்சுக்கலை வரலாற்றில் நிகழ்ந்த ஒரு சிறப்புப் பதிவாக அமைவது திராவிட இயக்கம் சுய மரியாதையை வலியுறுத்தல், தாழ்வுற்றோர் நிலையை உயர்த்துதல், சமூக சமத்துவத்தை முன்னெடுத்தல் முதலியவற்றை உள்ளடக்கிய திராவிட இயக்கம் ஓர் அரசியல் இயக்கமாக மேலெழுந்தது. தமது கருத்துப் பரவலுக்கு பேச்சுக்கலையை அவர்கள் விளையாற்றலுடன் பயன்படுத்தினர்.

தனித் தமிழ் உரை, அடுக்கு மொழி, பொதுமக்களின் நடைமுறைப் பிரச்சினைகளுடன் இணைந்த உரை, விளிம்பு நிலையினரின் உணர்வுகளை மேலெழச் செய்யும் அளிக்கை, சந்தர்ப்பத்துக்கு ஏற்றவாறு மேடையில் இணக்கலை (Improvisation) மேற்கொள்ளல், நாடக உபாயங்களைப் பயன்படுத்துதல், முதலாம் நுட்பங்களை அவர்கள் மேடைப் பேச்சுக்களில் பயன்படுத்தினர். புதிய வேகத்துடன் மேடைப் பேச்சு முன்னெடுக்கப்பட்டது.

**சி.என்.அண்ணாதுரை**

பேச்சுக்கலை வளமாக முன்னெடுத்தவர்களுள் சி.என்.அண்ணாதுரை (1909 - 1969) முக்கியமானவர். பல்வேறு பேச்சாளர்கள் அவரை ஒரு மாதிரி கைப்பாத்திரமாக (Roie Model) கொள்ளுமளவுக்கு அவரின் பேச்சுத் திறன் வலிமை பெற்றிருந்தது.

இலங்கையில் வளர்ச்சி பெற்ற தேசிய இனப் போராட்டங்களும் இனத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட அரசியல் வளர்ச்சியும் பேச்சுக்கலையிற் பல நிலைகளிலே செல்வாக்குகளை ஏற்படுத்தின. அரசியலில் மொழியை முதன்மைப்படுத்திய பேச்சுக்கள் மேடைகளில் முதன்மை பெற்றன. நாவலர் காலத்திலிருந்து வளர்ச்சி கொள்ளத் தொடங்கிய சமயத்தை அடிப்படையாகக் கொண்டதாக நிலை மாற்றம் பெற்றது.

அந்த மாற்றத்தில் பேசும் அரங்கிலும் மாற்றம் நிகழ்ந்தது. அதாவது ஆலயம் சார்ந்த அரங்கில் வளர்ந்த பேச்சுக்கலை பொது அரங்குகளில் அளிக்கை செய்யப் படும் கலையாக நீட்சி பெற்றது. சமயம் சாரா அரசியல் சுவையேற்றம் பேச்சுக்களில் கவர்ச்சிகரமாக இடம்பெறத் தொடங்கியது. இலங்கையின் தேசிய மொழிகள் போதனா மொழிகளாகப் பள்ளிக்கூடங்களிலும் பல்கலைக்கழகங் களிலும் வளர்ச்சி பெறத் தொடங்க, அவற்றின் செல்வாக்குப் பேச்சுக் கலையிலும் சுவறியது. அளிக்கையின் தரமும் உள்ளடக்கமும் கவனம் பெறலாயின.

நேர்க் கருத்து, எதிர்க்கருத்து, தொகுப்பாக்கம் என்ற தர்க்கம் பேச்சுக் கலையில் எதிர்பார்க்கப்படும் நிலையை கல்வி வளர்ச்சி தோற்றுவிக்கலாயிற்று.

உலகப் பல்கலைக்கழக வளர்ச்சியோடு தோற்றம் பெற்ற பேச்சுக்கலை வடிவம் ஒன்று ஆய்வுப் பேருரை (Oration) உயர் கல்வியில் தமிழ்மொழி நிலை கொள்ளத் தொடங்க தமிழ் மொழியிலும் ஆய்வுப் பேருரைகள் அளிக்கை செய்தல் இடம்பெறலாயிற்று.

ஆய்வு செய்து கருத்துக்களை ஒழுங்கு முறையிலே வடிவமைத்துக் கொடுத்தல், ஆய்வுப் பேருரைகளில் இடம்பெறும். ஐரோப்பிய மரபில் அவ்வகை உரை சடங்குகளிலும் நிகழ்த்தப்பட்டு வந்துள்ளது.

**ஆய்வுப் பேருரை**

பல்கலைக்கழகங்கள் மட்டுமன்றி புலமை நிறுவனங்களிலும் ஆய்வுப் பேருரைகள் நிகழ்த்தப் படுகின்றன. தமிழில் ஆய்வுப் பேருரை உருவாக்கத்திலும் வளர்ச்சியிலம் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தின் வகிபாகம் முக்கியமானது. அது வளாகமாக இருந்த தொடக்க காலத்தின் தலைவராக இருந்த பேராசிரியர் க.கைலாசபதி அதற்கான வளமான பின்புலத்தை அமைத்தார். அந்த மரபு பேராசிரியர் சு.வித்தியானந்தனால் தொடர்ந்து முன்னெடுக்கப்பட்டது.

பேச்சுக் கலையின் வளமாக்கலின் பிறிதோர் நிகழ்ச்சி, சட்டக்கல்வியின் வளர்ச்சி தர்க்க நிலையில் கருத்துக்களை முன்வைத்தல், எடுத்துக் கொண்ட முன் மொழியை நிலை நிறுத்துவதற்குரிய ஆதாரங்களை முன்வைத்தல், கருத்துக் கையளிப்பை பொருத்தமானதும் செறிவானதுமான மொழியில் சமர்ப்பித்தல், முதலாம் செயற்பாடுகள் பேச்சுக்கலைக்குரிய வளமாக்கிகளாக அமைந்தன.

## மாணவர்களுக்காக 35 மொழிகளை கற்ற லண்டன் ஆசிரியைக்கு ஒரு மில்லியன் அமெரிக்க டொலர் பரிசு

தனது வகுப்பிலுள்ள பல்வேறு மொழிகளையும் தாய்மொழியாக் கொண்ட குடியேற்றவாசிகளான மாணவர்களுக்கு கற்பித்தலை மேற்கொள்ளும் முகமாக 35 மொழிகைள பேசக் கற்றுக்கொண்ட லண்டனைச் சேர்ந்த ஆசிரியை ஒருவர் உலகின் மிகச் சிறந்த ஆசிரியராக தெரிவு செய்யப்பட்டு ஒரு மில்லியன் அமெரிக்க டொலர் பெறுமதியான பரிசு வழங்கிக் கௌரவிக்கப்பட்டுள்ளார்.

அன்ட்றியா ஸபிசாகோயு (39வயது) என்ற மேற்படி ஆசிரியைக்கு டுபாயில் ஞாயிற்றுக்கிழமை இடம்பெற்ற ஒஸ்கார் பரிசளிப்பு விழாவையொத்த வைபத்தில் மேற்படி விருது கையளிக்கப்பட்டது. இந்த விருது வழங்கும் வைபம் வார்கி உலக ஆசிரியர் மன்றத்தின் ஏற்பாட்டில் இடம்பெற்றது.

மேற்படி விருது வழங்கும் நிகழ்வானது உலகளாவிய ரீதியில் ஆசிரிய சேவைக்கு அரிய பங்களிப்பை வழங்கி வருபவர்களை அடையாளம் கண்டு கௌரவப்படுத்தும் வகையில் வருடாந்தோறும் நடத்தப்பட்டு வருகின்றமை குறிப்பிடத்தக்கது.

இந்நிலையில் அன்ட்றியா மேற்படி விருதுக்கு உலகெங்குமிருந்து விண்ணிப்பித்த சுமார் 30, 000 பேரை தோற்கடித்து வெற்றியை தனதாக்கிக் கொண்டுள்ளார்.

அன்ட்றியா பிரித்தானியாவில் வறுமையான பிரதேசமொன்றாக கருதப்படும் பிரெண்ட் பிராந்தியத்திலுள்ள பாடசாலையில் கற்பித்தலை மேற்கொண்டு வருகிறார். அந்தப் பாடசாலையில் ஆபிரிக்க மற்றும் ஆசிய பிராந்திய நாடுகள் உள்ளடங்கலான வளர்முக நாடுகளைச் சேர்ந்த குடியேற்றவாசிகளின் பிள்ளைகள் கல்வி கற்று வருகின்றனர்.

140 மொழிகளை தாய்மொழியாக கொண்டவர்கள் பிரெண்ட்டில் வாழ்வதாக தரவுகள் தெரிவிக்கின்றன. இந்நிலையில் தனது பாடசாலையில் கல்வி கற்கும் பல்வேறு சமூகங்களைச் சேர்ந்த வேறுபட்ட மொழிகளை தாய்மொழியாகக் கொண்ட சிறார்களுடன் உரையாடி அவர்களது கல்வியை மேம்படுத்தும் முகமாக தமிழ், ஹிந்தி, குஜராத், போர்த்துக்கீஸ், சோமாலி, அராபிக், ரோமானியன், பொலிஷ், உருது, இத்தாலி மொழி உள்ளடங்கலாக 35 மொழிகளை பேச அன்ட்றியா கற்றுக் கொண்டுள்ளார்.

கடந்த வருடம் கனடாவில் பின்தங்கிய தன்மைப்படுத்தப்பட்ட ஆர்ட்டிக் பிராந்திய கிராமமொன்றில் வசிக்கும் பூர்வீகக் குடிகள் மத்தியில் கல்வியறிவை வளர்க்கப் பாடுபட்ட மகி டொன்னல் என்ற ஆசிரியைக்கு மேற்படி விருது வழங்கப்பட்டிருந்தமை குறிப்பிடத்தக்கது.

## ஐந்து மாதக்குழந்தையின் இருதய சிகிச்சைக்கு உதவக் கோரிக்கை

மாத்தளை, களுதாவளை, டிக்கேயா வீதி, இல. 6.டி என்ற முகவரியில் வசிக்கும் விக்னேஸ்வரன் செல்வராஜா - யோகராணி தம்பதிகளின் ஐந்து மாதப் பெண் குழந்தையான கேஷானி இருதய நோயினால் துன்புற்று வருகின்றார்.

இவரைக் குணப்படுத்துவதற்காக மிக விரைவில் இருதய சத்திர சிகிச்சை செய்யவேண்டுமென மருத்துவர்கள் ஆலோசனை வழங்கியுள்ளனர்.

குறித்த குழந்தைக்கு தமிழ்நாடு, சென்னை மெட்ராஸ் மெடிக்கல் மிஷன் மருத்துவனையில் சிரேஸ்ட இருதய சத்திர சிகிச்சை டாக்டர் கே.சிவகுமாரினால் சத்திர சிகிச்சை செய்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இச் சிகிச்சைக்காக பதினைந்து இலட்ச ரூபா செலவாகும் என மருத்துவமனையினால் அறிவிக்கப்பட்டுள்ளது. பெற்றோரிடம் போதுமான பொருளாதார வசதி இல்லாத காரணத்தினால் பரோபகாரர்களிடமிருந்து பண உதவியை எதிர்பார்க்கின்றனர்.

உதவி செய்ய விரும்புவோர் எஸ்.விக்கினேஸ்வரனின் தேசிய சேமிப்பு வங்கி கண்டிக்கிளை, 100151531271 என்ற இலக்க கணக்கிற்கு தம்மால் இயன்ற உதவியினை அனுப்பி வைக்கும் படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

## அமெரிக்கா செல்ல மொஸ்கோவில் விமானத்தில் ஏறும்போது தடுத்து நிறுத்தப்பட்ட நாமல் ராஜபக்ஷ

ரஷயாவில் இருந்து அமெரிக்கா செல்ல, பாராளுமன்ற உறுப்பினர் நாமல் ராஜபக்ஷவுக்கு அமெரிக்கா அனுமதி மறுத்துள்ளது. ரஷ்யாவுக்கு சுயாதீன தேர்தல் கண்காணிப்பாளராக சென்ற நாமல் ராஜபக்ஷ அங்கிருந்து உறவினர் ஒருவரின் இறுதிச் சடங்கில் கலந்துகொள்ள அமெரிக்காவின் ஹுஸ்டன் நகருக்கு செல்ல ரஷ்யாவின் மொஸ்கோ விமான நிலையத்துக்கு சென்றபோதே, அவரை விமான நிலையத்தில் ஏற்ற மறுத்துள்ளனர். இது தொடர்பில் நாமல் ராஜபக்ஷ தனது டுவிட்டர் சமூக வலைதளத்திலும் பதிவிட்டுள்ளார். அதில் அவர் கூறியுள்ளதாவது:

தான் ஹுஸ்டன் நகருக்கு செல்ல முற்பட்ட வேளை, எமிரேட்ஸ் விமான சேவையானது தன்னை அமெரிக்கா விமானத்தில் ஏற்ற வேண்டாம் என அறிவுறுத்தியுள்ளதாக கூறி விமானப்பயணத்துக்கு அனுமதி மறுத்துள்ளதாக கூறியுள்ளார். அத்துடன் தான் அமெரிக்கா செல்வதில் இருந்து தடுக்கப்பட்டுள்ளமைக்கான ஏற்றுக்கொள்ளத்தக்க எவ்வித காரணங்களும் தனக்கு கூறப்படவில்லை எனவும். அவர் அப்பதிவில் குறிப்பிட்டுள்ளார்.

கடந்த 15ஆம் திகதி நாமல் ராஜபக்ஷ ரஷ்யாவுக்கு சுயாதீன தேர்தல் கண்காணிப்பாளராக சென்றிருந்த நிலையில், அமெரிக்கா செல்ல அனுமதி கிடைக்காததால் அவர் தற்போது இலங்கை திரும்பியுள்ளதாக அறியமுடிகிறது.

## உருகிறது ராட்சத பனிப்பாறை கடலில் மூழ்கும் ஆபத்தில் தீவுகள்

அண்டார்டிகாவில் பல பனிப்பாறைகள் மிதக்கின்றன. அவற்றில் பிரான்ஸ் நாட்டின் அளவுக்கு மிகப்பெரிய ராட்சத பனிப்பாறை உள்ளது.

அதற்கு 'ராட்டன்' பனிப்பாறை என பெயரிட்டுள்ளனர். பொதுவாக பருவநிலை மாற்றம் காரணமாக அண்டார்டிக்காவில் உள்ள பனிப்பாறைகள் மெல்ல மெல்ல உருகி வருகின்றன.

இதுகுறித்து 2002 முதல் 2016ஆம் ஆண்டு வரை 'நாசா' மையம் ஆய்வு நடத்தியது. பனிக்கட்டிகள் உருகுவதால் அண்டார்டிகா ஆண்டுக்கு 125 ஜிகா டன் ஐஸ் கட்டிகளை இழக்கிறது. இதன்மூலம் உலக அளவில் ஆண்டுக்கு 0.35 மில்லிமீற்றர் அளவுக்கு கடல்நீர் மட்டம் உயருகிறது என கண்டுபிடித்தது.

இந்த நிலையில் அண்டார்டிகாவில் உள்ள 'ராட்டன்' ராட்சத பனிப்பாறையும் உருகத் தொடங்கிவிட்டது. பருவநிலை மாற்றத்தால் இப் பனிப்பாற உருகுவதால் அது மெல்ல நகர்ந்து பல நூறு மைல் தூரத்தை கடந்துவிட்டது.

இது முழுவதுமாக கரைந்துவிட்டால் கடலின் நீர்மட்டம் 9.8 அடி உயரும் என எதிர்பார்க்கப்படுகிறது. இதனால் பல்வேறு நாடுகள், தீவுக்கூட்டங்கள் கடலில் மூழ்கும் அபாயம் ஏற்பட்டுள்ளது.

## கண்டதும்! கேட்டதும்!!

### ஹவாய் பயணம் - 7



குரு அரவிந்தன்

பேர்ள் ஹாபர் காட்சியகத்திற்குச் சென்ற போது யப்பானின் அதிரடித் தாக்குதலில் அந்தத் துறைமுகத்திற்கு ஏற்பட்ட பாதிப்புகளை இப்பொழுதும் பல இடங்களில் காணமுடிந்தது. அந்தந்த இடங்களில் நினைவு மண்டபங்கள், தூபிகள் போன்றவற்றை எழுப்பி அதைப் பற்றிய விபரங்களை எழுதியிருக்கின்றார்கள். அப்போது அமெரிக்காவின் அதிபராக இருந்த பிராங்லின் றூஸ்வெல்ட் டிசெம்பர் 7 ஆம் திகதி 1941 ஆம் ஆண்டு நடைபெற்ற இந்தத் தாக்குதலை, 'a date which will live in infamy' என்று குறிப்பிட்டார். இரண்டாம் உலக யுத்தத்திற்குக் காரணமான யப்பான் நடத்திய பேர்ள்ஹாபர் தாக்குதலின் போது அட்மிரல் யமாமோட்டோ என்பவரே அந்தத் தாக்குதலைத் திட்டமிட்டிருந்தார். தென்கிழக்கு ஆசியாவைத் தங்கள் கட்டுப் பாட்டுக்குள் வைத்திருப்பதற்கு அமெரிக்க கடற்படையும் ஒரு தடையாக இருந்தது ஒரு காரணம் மட்டுமல்ல, அமெரிக்கா எரிபெருள், உலோகம் போன்றவற்றின் இறக்குமதியையும் தடை செய்திருந்தது. திட்டமிடுவது வேறு அதைத் திறம்பட நடத்தி முடிப்பது வேறு. யமாமோட்டோவின் அந்தத் திட்டத்தை நடைமுறைப்படுத்த அட்மிரல் நகுமோ சூச்சி (Nagumo Chuchi) என்பவர்தான் துணிந்து முன் வந்தார். யுத்த களத்தில் நிற்பவர்களுக்கு எந்த நேரமும் எதுவும் நடக்கலாம் என்பதை அறிந்திருந்தும் அந்தப் பொறுப்பை ஏற்று. ஹவாயில் இருந்து 275 மைல் வடக்கே உள்ள பேர்ள் ஹாபரின் இலக்கை நோக்கித் தனது தாக்குதல் படைகளை நகர்த்தியது இவர்தான். நவம்பர் மாதம் 26 ஆம் திகதி ஆறு விமானம் தாங்கிக் கப்பல்கள் உட்பட 22 கப்பல்களின் அணியை இவர் மிகவும் கவனமாகச் சேரவேண்டிய இடத்திற்கு நகர்த்தியிருந்தார். இந்த விமானந் தாங்கிக் கப்பல்களில் 360 விமானங்கள் இடம் பெற்றிருந்தன.அமெரிக்காவின் வேவு விமானங்களோ, கரை யோரப் பாதுகாப்பு கப்பல்களோ இந்த நகர்வைக் கண்டு கொள்ளவில்லை. சுமார் 7.55 க்கு யப்பானின் முதலாவது விமானம் பேர்ள் ஹாபர் தாக்குதலை ஆரம்பித்திருந்தது. ஓய்வு நாளான ஞாயிற்றுக் கிழமையை, அதுவும் அனேகமானவர்கள் பிரார்த்தனைக்குச் செல்லும் நேரத்தைத் தாக்குதலுக்குத் தகுந்த நாளாக யப்பான் தெரிந்தெடுத்து இருந்தது.



அமெரிக்காவின் தாக்குதல் விமானங்கள் வரிசையாக நிறுத்தப்பட்டிருந்ததால், விமானி அற்ற அவற்றைத் தாக்கி அழிப்பது யப்பானியர்களுக்கு இலகுவாக இருந்தது. இத்தாக்குதலில் சுமார் 180 அமெரிக்க விமானங்கள் தாக்கி அழிக்கப்பட்டன. மிக முக்கியமான அழிப்பு நடவடிக்கைகள் முதல் 30 நிமிடத்திலேயே செய்து முடிக்கப்பட்டன அரிசோனா, ஒக்லஹோமா, கலிபோர்ணியா, நிவாடா, வெஸ்ட்வேர்ஜினியா போன்ற யுத்தக்கப்பல்கள் துறைமுகத்தில் வைத்தே மூழ்கடிக்கப்பட்டன. இந்தத் தாக்குதல் மூலம் அமெரிக்க விமானப் படையின் வான்பலத்தையும், கடற்படையின் கடற்பலத்தையும் அமெரிக்கா எதிர்பாராமல் இழந்திருந்தது. அமெரிக்காவின் மூன்று விமானந்தாங்கிக் கப்பல்கள் இந்தத் தாக்குதலில் தப்பியிருந்தன. அதேபோல முக்கியமான எரிபொருள் குதங்களும் இத்தாகுதலுக்குள் அகப்படவில்லை. டிசெம்பர் மாதம் 8 ஆம் திகதி அமெரிக்க காங்கிரஸ் யப்பானுக்கு எதிரான யுத்தப் பிரகடனத்தைச் செய்தது. காங்கிரஸ் அங்கத்தவரான ஜினட் ராங்கின் என்ற ஒரே ஒருவர் மட்டும் இந்த யுத்த பிரகடனத்தை எதிர்த்து வாக்களித்திருந்தார். அமெரிக்கர்களுக்கு யப்பான் எந்த நேரமும் தங்களைத் தாக்கலாம் என்ற தகவல்கள் கிடைத்திருந்தாலும், அது எப்பே எங்கே என்பது மட்டும் தெரிந்திருக்க வில்லை.

பேர்ள் ஹாபர் அதிரடித் தாக்குதலின் வெற்றியைத் தொடர்ந்து யப்பானியர்கள் ஹமிஹாஷி (Kamikaze) என்ற பெயரில் ஒரு தற்கொலைப் படையையே உருவாக்கி வைத்திருந்தார்கள். இப்போது நடக்கும் தற்கொலைத் தாக்குதல்கள் எல்லாவற்றுக்கும் யப்பானியர்களே முன்னோடிகளாக இருந்திருக்கிறார்கள். பல யப்பானிய விமானிகள் இதற்காக செய்யப்பட்ட தங்கள் விமானத்துடன் அமெரிக்கக் கப்பல்களில் மோதித் தற்கொலை செய்து கொண்டனர். அட்மிரல் மாஷாபுமி அரிமா (Masafumi Arima) என்ற யப்பானிய தற்கொலைப்படையைச் சேர்ந்தவரே இப்படியான முதலாவது தற்கொலைத் தாக்குதலை நடத்தியிருந்தார். மிகப்பெரிய வல்லரசான அமெரிக்காவோடு குட்டித் தீவான யப்பான் மோதிக்கொண்ட போது பல நாடுகளுக்கும் ஆச்சரியமாக இருந்தன. ஆனாலும் யப்பானியர்கள் தாங்கள் எதற்கும் குறைந்தவர்கள் அல்ல என்பதை பல தடவைகளில் நிரூபித்திருந்தார்கள். தங்கள் நாட்டின் மீது இருந்த அதீத பற்றுக் காரணமாக 3862 யப்பானிய தற்கொலைப் படையினர் இரண்டாம் உலக யுத்தத்தின் போது தற்கொலைத் தாக்குதல் செய்து மரணமாகியிருந்தனர். சுமார் 7000க்கும் அதிகமான அமெரிக்க கடற்படையினர் இப்படியான தற்கொலைத் தாக்குதலின் போது கொல்லப்பட்டிருந்தனர். யப்பானியர்களின் எண்ணிக்கைப்படி தற்கொலைப் படையினரால் சுமார் 81 கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டும், 195 கப்பல்கள் சேதமாக்கப்பட்டும் இருந்தன. இரண்டாம் உலக யுத்தத்தின் போது ஆழ்கடலில் சென்ற யுத்தக் கப்பல்கள் எல்லாம் இந்த தற்கொலைப் படைக்கு அஞ்சியே பயணத்தை மேற்கொண்டன.

இதற்கு ஒரு முற்றுப் புள்ளி வைக்கும் நோக்கத்தோடுதான் அமெரிக்கா குரோஷிமா என்ற யப்பானிய தீவுமீது ஆகஸ்ட் மாதம் 6 ஆம் திகதி 1945 ஆம் ஆண்டு அணுக்குண்டுத் தாக்குதல் நடத்தி இருந்தது. இத்தாக்குதலில் சுமார் 80,000 மக்கள் அந்த இடத்திலேயே இறந்து போயிருந்தனர். அந்த அதிர்ச்சியில் இருந்து யப்பான் எழுந்திருக்குமுன் மீண்டும் மூன்றாவது நாள் நாகசாகி மீது அடுத்த அணுக்குண்டுத் தாக்குதல் நடத்தப்பட்டது. இத்தாக்குதலில் 40,000 பேர் கொல்லப்பட்டனர். இதன் காரணமாக வேறு வழியில்லாமல் யப்பான் சரணடைந்தது.

## மொன்றியால் மாநகரில் "விழிப்புலன் அற்ற ஒரு வழிகாட்டி" கௌரீஸ் வழங்கிய இன்னிசைக் கானங்கள் "விடியலைத் தேடி"



மொன்றியால் மாநகரில் இயங்கிவரும் விடியலைத் தேடி அமைப்பின் ஆதரவில் இளம் பாடகர் கௌரீஸ் மற்றும் அவரது அன்னை சாரதா ஆகியோர் மொன்றியால் வாழ் வர்த்தக நண்பர்கள் வழங்கிய ஒத்துழைப்போடு நடத்திய "விடியலைத் தேடி" இசை நிகழ்சசி கடந்த சனிக்கிழமை 24ம் திகதி மாலை மொன்றியால் நகரின் மேரி ஆன் உயர் கல்லூரி மண்டபத்தில் நடைபெற்றது.

மொன்றியால் நகரில் உள்ள ஆற்றல் மிகு பாடக பாடகிகள் மற்றும் நடன மணிகள் அத்துடன் நாடக நடிகர் ஆகியோர் மேடையில் தங்கள் படைப்புக்களைத் தந்தனர்.

அத்துடன் ரொரன்ரொவிலிருந்து கலைவேந்தன் கணபதி ரவீந்திரன் "வைகைப் புயல்" பாலாவோடு இணைந்து நகைச்சுவை நிகழ்ச்சியையும் வழங்கினார்.

விழாவிற்கு சிறப்பு விருந்தினராக உதயன் பத்திரிகையின் பிரதம ஆசிரியர் திரு ஆர். என். லோகேந்திரலிங்கம் தனது பாரியார் மற்றும் பேத்தி தியானா ஆகியோரோடு மொன்றியாலுக்கு பயணித்து கலந்து சிறப்பித்தார்.அத்துடன் சாரதா மற்றும் கௌரீஸ் ஆகியோரின் தன்னலமற்ற சேவையையும் பாராட்டி உரையாற்றினார். நிகழ்ச்சி தொடங்கி இறுதிவரையும் மேடையில நடனம் நாடகம் பாடல் நிகழ்ச்சி மூத்தோர் மற்றும் ஊடக நிறுவனங்களின் கௌரவம் ஆகியனவும் இடம்பெற்றன. இந்த நிகழ்ச்சி மூலம் சேகரிக்கப்பட்ட நிதியானது தாயகத்தில் விழிப்புலன் மற்றும் செவிப்புலன் அற்ற இளம் ஆண்கள் மற்றும் பெண்களுக்கு அவர்களின் தேவைகளுக்காக வழங்கப்படும் என்ற அறிவிப்பும் விடுக்கபபட்டது.

(படங்கள்"- சத்தியன்)







## பாரதி ஆர்ட்ஸ் கலைக் கூடம் அறிமுகப்படுத்தியுள்ள "பாடவா பாடவா"இசைப் போட்டி நிகழ்ச்சியின் இறுதிச் சுற்று



கனடாவில் மிக நீண்ட காலமாக இசைத்துறையில், மேடைநிகழ்ச்சி அத்துடன் சமூக சேவை நிறுவனங்களுக்கு நிதி சேகரிக்கும் பணி ஆகியவற்றில் வெற்றிகரமாக ஈடுபட்டு வரும் பாரதி ஆரட்ஸ் கலைக் கூடத்தினர் தறபோது அறிமுகப்படுத்தியுள்ள "பாடவா பாடவா" (யூனியர் சிங்கர்- கனடா) இசைப் போட்டி நிகழ்ச்சியின் இறுதிச் சுற்றில் முதல் மூன்று வெற்றியாளர்களையும் மேலும் மூன்று வெற்றியாளர்களையும் தேர்ந்தெடுக்கும் போட்டி, மண்டபம் நிறைந்த சபையோர் மத்தியில் கடந்த ஞாயிற்றுக்கிழமை மாலை ஸ்காபுறோவில் உள்ள தமிழிசைக் கலா மன்றத்தின் மண்டபத்தில் நடைபெற்றது.

பாரதி கலைக் கூடத்தின் அதிபர் திரு மதிவாசன் தனது பிள்ளைகள் மூவர் மற்றும் பெற்றோர் மாணவர்கள் அத்துடன் வர்த்தகப் பிரமுகர்களின் ஆதரவோடு இந்த போட்டி விழாவையும் பரிசளிப்பு விழாவை நடத்தினார். ஏற்கனவே நடந்த தொடர் போட்டிகளில் பங்குபற்றி இடையில் போட்டியிலிருந்து நீக்கப்பட்ட பல பாடக பாடகிகள் நேற்றைய தினம் தங்கள் விருப்பத்திற்கேற்ப பாடல்களைப் பாடி சபையோரை மகிழ்வித்தார்கள்.

தொடர்ந்து இறுதிப் போட்டிக்கு தெரிவான ஆறு பாடக பாடகிகள் குலுக்கல் சீட்டு மூலம் அவர்களது முறை வழங்கபபட்டு பாடத் தொடங்கினார்கள். பிரதான நடுவர்களாக திருவாளர்கள் கார்த்திக், மோகன் திருச்செல்வம் மற்றும் திருமதி சாயி பிருந்தா ஆகியோர் மிகவும் பொறுப்புடன் பணியாற்றி தங்கள் கருத்துக்களையும் வெளிப்படையாகக் கூறினார்கள்.
இறுதியில் முடிவுகள் அறிவிக்கப்பட்டபோது முதலாவது இடத்தை செல்வி சௌமியா சிங்காரவேலன் பெற அவருக்கான பரிசாக தங்க நெக்லெஸ் ஒன்றை ஸ்காபுறோ ஒமிரா நகைமாளிகை நிறுவன உரிமையாளர்கள் திரு. திருமதி சிவா மேகநாதன் தம்பதியினர் அளித்தனர். இரண்டாவது இடத்தை செல்வி சின்மை சிவகுமார் பெற, அவருக்கான 750 டாலர்கள் பரிசை வர்த்தகப் பிரமுகரும் கனடா உதயன் வர்த்தக மேம்பாட்டு விருதினையும் பெற்ற திரு சங்கர் நல்லதம்பி வழங்கினார். மூன்றாவது இடத்தை 7 வயதுடைய பாடகச் செல்வன் அஜீஸ் திருக்குமாரன் பெற அவருக்குரிய 500 டாலர்கள் பரிசை "நினைவுகள்" நிறுவனர் திரு கனா ஆறுமுகம் வழங்கினார். ஏனைய ஆறு வெற்றியாளர்களுக்கான தலா 200 டாலர்கள் பணப் பரிசை முறையே கேம்சோனிக்ஸ்" அதிபர் திரு ரஜீவ் செபராசா, உதயன் பத்திரிகை பிரதம ஆசிரியர் திரு ஆர். என். லோ கேந்திரலிங்கம், ஜழம் கிச்சின் அதிபர் ஆகியோர் வழங்கினார்கள்.
(படங்கள்:- சத்தியன்)



# Easter பெருநாளை முன்னிட்டு நம்ப முடியாத விலைகளில் பல




## MULTICULTURAL STORE
## (416) 292-0122

உங்கள் "நியூ ஓஷ




Saint Jimmy's Coffee


¢99 ea
was: $1.49
GRACE COCONUT MILK(400ML)


$2.49 ea
was: $2.99
ARALIYA JACK MACKEREL(425G)



$3.99 ea
DEMERARA GOLD BROWN SUGAR(3.5LB)


WHITE LARGE EG



$1.88 ea
MR.GOUDAS CONDENSED MILK(300ML)



$4.99 ea
DUNN'S RIVER ACKEE(540ML)


¢69 ea
GRACE ISLAND SODA ASSORTED



SUNRISE TOFU

Dais



$6.49 ea
NEW OCEAN CARDAMOM GREEN(200G)



$1.99 ea
CUETARA MARIA COOKIES(800G)


$3.99 ea
JYOTHY MIXTURE HOT/MILD (600G)


$3.99 EA
GURU PAKODA(400G)


$2.79 ea
WHITE ONION(10LB)



$2.79 ea
YUKON POTATO(10LB)


$1.29 lb
GARLIC(LB)


¢99 ea
URUTHIRA SOYA(200G)


$2.49 ea
GC FENNEL GREEN/CHILLI POWDER/ CRUSHED CHILLI


$1.99 lb
YELLOW YAM(LB)


$2.99 lb
SWEET POTATO(LB)



$3.99 ea
QUALITY PRIYA BASMATI RICE(8LB)


$1.79 ea
GUYANESE PRIDE YELLOW SPLIT(4LB)

# உணவுப் பொருட்கள், மரக்கறி மற்றும் மீன் இறைச்சி வகைகள்

## சுப்பர் மார்க்கட்டில்"

இரண்டு வாரங்களிற்கான மலிவு விலைப்பட்டியல்
மார்ச் 28 இல் இருந்து ஏப்ரல் 12 வரை

tion Now Available!


$2.49 ea


$4.49 ea, was: $4.99
BEATRICE MILK 1%,2% AND SKIM MILK(4L)


$1.99 ea, was: $3.29
ASTRO ASSORTED YOGURT(750G)


49¢ ea
ASTRO KIK ASSORTED (20ML)


$2.49 ea


$4.79 ea
ROCK CORNISH HEN


$1.99 ea, was: $2.29
SHANA PLAIN PARATHA


$5.99 ea
NIRU STEAMED FLOUR(8LB)


$3.00 for 2
EXCELSIOR WATER CRACKERS(300G)

Mart WESTERN UNION MONEY TRANSFER & Lottery Center Now Available!


$1.89 ea
...T CHOCOLATE, ...55ML)


$1.79 ea
GRACE INSTANT OATS(1KG)


$4.99 ea
WAADIYA CEYLON TEA LOOSE(500G)


$2.29 ea
DETTOL ANTISEPTIC LIQUID(210ML)


$1.29 lb
CHICKEN LEG(LB)


$1.79 ea
HARICHANDRA NOODLES(400G)


$4.99 ea
...AME OIL(1L)


$2.99 ea
GOLDEN VALLEY MAZAFATI DATTES(600G)


$2.99 ea, $100 purchase only
NUPAK/MR.GOUDAS PARBOILED RICE(8KG)


$6.99 ea
NIRU CURRY POWDER HOT/MILD BOTTLE(800G)


$1.49 ea
DUNYA FENUGREEK(400G)


$3.99 ea
DUNYA BLACK PEPPER WHOLE (200G)


$8.99 ea
...RBATI ATTA(20LB)


$11.99 ea
LAXMI SONA MASOORI(20LB)


$2.99 ea
AMMA'S SNACKS(400G)


$1.99 ea
LAXMI FROZEN COCONUT(400G)


$4.99 ea
SHRIMP(LB)


$2.99 ea
WEST INDIAN PRIDE COCONUT OIL(500ML)


99¢ lb
...T(LB)


$4.99 ea
JHATPOT PLAIN PARATHA(30PC)


$5.99 ea
DUNYA URID GOTTA(8LB)


$1.49 ea
CAAVERI JACK FRUIT


$2.99 lb
DRUMSTICK(LB)


$2.99 lb
SMALL ONION(LB)

# கனடாவில் இலங்கைத் தமிழரின் வாழ்வும் வரலாறும் 08

ஈழவிடுதலைப் போராட்ட பல்வேறு குழுக்களைச் சேர்ந்த இளைஞர்கள் அங்கு எவ்வித பேதமுமின்றி ஒருவர்க்கொருவர் உதவியாகச் சமூகப் பணிகளில் செயற்பட்டுள்ளனர். அம்மண்டபத்தில் வளர்ந்தோருக்குப் பிரஞ்சுமொழி வகுப்புக்கள், பிள்ளைகளுக்குத் தமிழ்மொழி வகுப்புக்கள் என்பன மிகச் சிறந்த முறையில் நடத்தப்பட்டன. அனைத்து மதவழிபாடுகளும், விசேட வழிபாட்டு நிகழ்வுகளும் இடம்பெற்றன. இவர்கள் அனைவரும் சேர்ந்து **'கியூபெக் தமிழீழச் சங்கம்'** என்ற அமைப்பை உருவாக்கி, அதனூடாகப் பல்வேறு சேவைகளைப் புதிதாக வந்தோருக்கு வழங்கியுள்ளனர். இச்சங்கத்தை அமைப்பதில் நல்லூரைச் சேர்ந்த சுப்பிரமணிய ஐயர் பெரிதும் முன்னின்று செயற்பட்டதாகச் சேவியர் குறிப்பிடுவர். அச்சங்கத்தின் செயலாளராகவும் தலைவராகவும் சில ஆண்டுகள் திரு. சேவியரும் செயற்பட்டுள்ளார்.

இச்சங்கத்தின் ஊடாகக் குடிவரவுத் திணைக்கள அரச அலுவலர்களை அழைத்துத், தமிழ்ப் பண்பாடு, தமிழர் குடும்ப விழுமியங்கள், சமூக வழக்காறுகள் என்பனவற்றை அவர்கள் புரிந்து கொள்ளும் வகையிலான நிகழ்வுகள், உரையாடல்கள ஆகியவற்றை நடத்துவதிலும் சங்கத்தினர் ஈடுபட்டனர் என்றும், அச்செயற்பாடுகள் ஏதிலிமனு வழக்கு விசாரணைகளுக்கு உதவியாக அமையலாயின என்றும் அறியப்படுகிறது. ஒட்டாவாவில் வாழ்ந்த பேராசிரியர் இலகுப்பிள்ளை, அருள் எஸ் அருளையா முதலியோர் அப்வப்போது இச்சங்கத்தின் செயற்பாடுகளுக்கு ஆலோசனைகள் வழங்கி அவர்களுக்கு உதவிகளையும் வழங்கினர். இதுபோன்று **'தமிழர் ஒளி'** அமைப்பும் புதியவர்களுக்கான பல்வேறு பணிகளில் சிறப்பாகச் செயற்பட்ட தகவல்களையும் பிரான்சிஸ் சேவியர் மூலம் அறியக் கூடியதாயிற்று.

1984இல் ஏதிலியாகக் கனடாவுக்குப் புலம்பெயர்ந்து வந்த திரு.வே.விவேகானந்தன் எழுதிய, "கனடிய மண்ணில் ஆரம்பகால வாழ்க்கை ஓர் அனுபவம்" என்ற கட்டுரையில், அவர் தனது அனுபவத்தை வருமாறு குறிப்பிடுதலும் கருத்திற் கொள்ளத்தக்கதே:

"அகதிகளாகப் புலம்பெயர்ந்த தமிழர்களுக்கும், நிரந்தரக் குடியரிமை, பிரஜாவுரிமை பெற்ற தமிழர்களுக்குமிடையே பாரிய இடைவெளி இருந்ததை என்னால் உணர முடிந்தது. பெரும்பாலான நிரந்தரக் குடியுரிமை, பிரஜாவுரிமை பெற்ற தமிழர், அகதிகளாகப் புலம்பெயர்ந்த தமிழர்களை இரண்டாம் தரக் குடிமக்கள் போலவும், தீண்டத் தகாதவர்கள் போலவும் கருதினர்" (த.த.,2016 பக்.77).

கனடாவில் ஆரம்ப காலங்களில் ஐரோப்பியர், சீனர் ஆகியோர் மட்டுமே குடியேற அனுமதிக்கப் பட்டனர். லெஸ்ரர் பியர்ஸன் பிரதமராக இருந்தபோது (Hon. Lester B. Pearson: 1963-1968) அவரது அரசாங்கம் 1967இல் மேற்கொண்ட இனச்சார்பற்ற குடிவரவுக் கொள்கை காரணமாகவும், 09.09.1969இல் அறிமுகப்படுத்தப்பட்ட இருமொழி, பல்கலாசாரக் கொள்கையாலும் பல நாட்டினரும் கனடாவில் குடியேற வாய்ப்பளிக்கப்பட்டது. இதனைப் பயன்படுத்தி தம் நாடுகளில் நடைபெற்ற இன அடக்கு முறைகளாற் பாதிக்கப்பட்டோர் பல நாடுகளிலிருந்தும் ஏதிலிகளாகக் கடனடாவிலே தஞ்சம் அடைய ஆரம்பித்தனர். இலங்கையில் இடம்பெற்ற 1983 ஜுலை இனக்கலவரத்தைத் தொடர்ந்து பெருந்தொகையான ஈழத்தமிழர் ஏதிலிகளாகக் கனடாவில் புகலிடம் பெறத் தொடங்கினர். இவ்வாறாக ஆரம்ப காலங்களிற் கனடாவுக்கு வருகைதந்த ஈழத்தமிழர் பற்றி **1995**இல் அருள் எஸ். அருளையா வருமாறு குறிப்பிடுகிறார்:


பேராசிரியர் பாலசுந்தரம் இளையதம்பி

"பத்து வருடங்களுக்கு முன்னர் 400 தமிழ்க் குடும்பங்களே கனடாவில் இருந்தன. 1994இல் தமிழர் தொகை 73,000 ஆக அதிகரித்தது. தமிழரின் நிரந்தரவதிவு தொடர்பான பகுப்பாய்வுக் கண்ணோட்டம் பின்வருமாறு: இலங்கையர் 1960இன் முற்பகுதிகளிலே கனடாவுக்குக் குடியேறத் தொடங்கினர். இலங்கையில் 1960இல் கொண்டு வரப்பட்ட சிங்களம் மட்டும் சட்டத்தை அடுத்து ஆங்கிலக்கல்வி கற்ற பறங்கியர் (இலங்கை ஐரோப்பியக் கலப்பினத்தவர்) அவுஸ்திரேலியா, இங்கிலாந்து, கனடா முதலான நாடுகளுக்குப் புலம்பெயர்ந்தனர். 1967வரை சுமார் 500 இலங்கையர் கனடாவில் குடியேறினர். இந்தியாவுக்குப் படிக்கச் சென்ற இலங்கையர்களிற் பலர் படிப்பை முடித்துக்கொண்டு கனடாவுக்கு வந்தனர். இவர்களிற் பெரும்பான்மையோர் தொழில் தகைமையுள்ளவர்கள். 1973இல் 1,747 இலங்கையர் நிரந்தரவாசிகள் ஆகிவிட்டனர்" (அருள் எஸ். அருளையா 1995: பக்.19).

தொடக்கத்திற் கனடாவுக்குப் புலம்பெயர்ந்த தமிழரிற் பெரும்பாலானோர் இளையோராவர். அவர்கள் உணவு, குளிர் உடுப்பு, இருப்பிடம், தாம் பெற்றுவந்த கடன் சுமை எனப் பல சவால்களை எதிர்நோக்கினர். போதிய அனுபவமின்மை, புதிய சூழல், புதியமொழி, புதிய இடம், புதிய மனிதர்கள் எனப் பல்வேறு விடயங்களுக்கு அவர்கள் முகங்கொடுக்கவேண்டியிருந்தது. ஏதிலிகளாக வந்தோருக்கு இப்போது கனடா அரசு வழங்கும் சமூகநலப்படி வசதி அப்போது இருக்கவில்லை. ஒரு தனியார் நிறுவனம் மாதம் 150 டொலர்கள் வீதம் அவர்களுக்கு வழங்கி உதவி வந்தது. இந்தத் தொகையில் இவர்கள் தம் வாழ்க்கையைத் தக்கவைத்துக்கொள்ள வேண்டிய பரிதாப நிலையில் இருந்தனர். மொன்றியலுக்கே பெருந்தொகையினராகத் தமிழர் வந்து சேர்ந்தமையால் எல்லோரும் வேலை தேடிப்பெற்றுக் கொள்வதும் கஷ்டமாகவே இருந்தது. இந்நிலையிற் சிலர் மிகுந்த சிரமத்தின் மத்தியில் வேலை தேடிக்கொண்டனர். அப்போது தொழிற்சாலையில் வேலை தேடிக்கொண்டோருக்கு நான்கு டொலர் முப்பது சதம் சம்பளம் கிடைத்தது. இவ்வேளையில் அரசு சமூகநலக் கொடுப்பனவு மூலம் 30 வயதுக்கு உட்பட்டவர்களுக்கு 150 டொலர் உதவிப் பணம் வழங்கியது.

மொன்றியலில் புகலிடம்பெற்று, அகதிமனு, இருப்பிடம், தொழில் வாய்ப்பு எனப் பல்வேறு சிரமங்களுக்கு ஆளாகிய தமிழர் ஒன்று சேர்ந்து **"தமிழர் ஒளி"** என்ற பெயரில் இலாப நோக்கற்ற ஓர் அமைப்பை உருவாக்கி, மிகுந்த அர்ப்பணிப்புக்களுடன் அவ்வமைப்பை வளர்த்தனர். இதன் ஆரம்ப கர்த்தாக்களிற் செபஸ்டியான்தாசன், சின்னையா சிவானந்தன், லோகநாதன், ராஜேந்திரலிங்கம், ஆறுமுகம், அலன் ராஜரட்ணம், ரவி பரமானந்தன், அன்ரன் ரொசாரியோ ஆகியோர் முக்கியமானவர்களாவர் (தகவல்: திருமதி லீலா சிவனந்தன்). மொன்றியலுக்கு ஏதிலிகளாக வரும் தமிழர்களுக்கு உதவிசெய்ய வேண்டும் என்ற நோக்குடன் இவ்வமைப்புச் செயற்படுவதாயிற்று. இதன் பல செயல்திட்டங்கள் புதிதாக மொன்றியலுக்கு ஏதிலிகளாக வந்த யுவதிகள், இளைஞர்கள் ஆகியோருக்கு பேருதவியாக அமைந்தன.

சமூகசேவை செய்யும் 30 வயதுக்குட்பட்ட இளையோருக்கு அரச சமூகக் கொடுப்பனவு இருமடங்காகும் என்ற அரசின் திட்டத்தை அறிந்த இவ்வமைப்பினர், இத்திட்டத்தை தமிழர் ஒளி மூலம் அறிமுகப்படுத்தி, அத்தகையோருக்குச் சமூகக் கொடுப்பனவு இருமடங்காகக் கிடைக்க உதவி செய்தனர். இளையோர் வேலை பெறுவதற்குரிய பயிற்சிப் பட்டறைகளையும் நடத்தினர். அவ்வகையிற் பிரஞ்சுமொழிப் பயிற்சி. தையல் பயிற்சி, கணினிப் பயிற்சி என்பனவற்றுடன், சிறுவர்களுக்குத் தமிழ்மொழி வகுப்புக்களும் ஆரம்பிக்கப்பட்டன. தமிழ், ஆங்கிலம், பிரஞ்சுமொழிகளில் மொழிபெயர்ப்புச் சேவையும், குடிவரவு சம்பந்தமாக அனைத்து ஆலோசனைகளும் தேவைப்பட்டோருக்கு இவ்வமைப்பு வழங்கிற்று. தமிழ், ஆங்கில நூல்களைச் சேகரித்து நூலகம் ஒன்றையும் ஆரம்பித்தனர். இவ்வமைப்பிற் கணினி, பிரஞ்சுமொழி ஆகியவற்றில் பயிற்சி பெற்றவர்கள் எளிதில் வேலையும் பெற்றுக் கொள்ளலாயினர். **(தொடரும்.......)**

# அன்பின் தொனி—532

*பாஸ்டர் அல்பிரட் சொருபிம் (மீட்பர் கிறிஸ்து சபை- பிரம்டன்)*

## ஓரே தேவனை அறிந்து அவரையே வழிபடு

பரிசுத்தராய் இருங்கள் - பரிசுத்தமும் ஆவியும் - Holiness and the Spirit

### பாவம் மனிதனுடைய வாழ்க்கையைப் பாதிக்கிறது

<u>மனந்திரும்புதல்</u>

மனிதன் தேவனண்டை கிட்டிச்சேர பரிசுத்தம வேண்டும் என்பதையும், அந்த பரிசுத்தத்தை ஆண்டவராகிய இயேசு மூலமாகவே அடைய முடியும் என்பதையும், அதற்கான சகல நியமங்களையும் இயேசுதாமே கல்வாரி சிலுவையிலே நமக்காக இரத்தம் சிந்தி மரித்ததின் மூலம் செய்து முடித்துவிட்டார் என்பதையும், வேத வசனங்களுக்கூடாக மேலே வாசித்த பகுதிகளிலிருந்து அறிந்து கற்றுக்கொண்டவர்கள் அந்தப் பரிசுத்தத்தை பெறுவதற்கான நடை முறைகளை மேலும் பரிசுத்த வேதாகமத்திறகூடாக தெரிந்து கொள்ள வேண்டும். ஆண்டவராகிய இசேு கிறிஸ்துவுக்குள் தேவன் நமக்கு அருளும் இரட்சிப்பைப் பெற்றுக் கொள்வ தற்கான முதற்படி, <u>மனந்திரும்புதல்</u>.

ஆகையால், நீங்கள் சிலுவையில் அறைந்த இந்த இயேசுவையே தேவன் ஆண்டவரும் கிறிஸ்துவுமாக்கினாரென்று இஸ்ரவேல் குடும்பத்தார் யாவரும் நிச்சயமாய் அறியக்கடவர்கள் என்றான். இதை அவர்கள் கேட்டபொழுது, இருதயத்திலே குத்தப்பட்ட வர்களாகி, பேதுருவையும் மற்ற அப்போஸ்தலரையும் பார்த்து: சகோதரரே, நாங்கள் என்னசெய்யவேண்டும் என்றார்கள். பேதுரு அவர்களை நோக்கி: நீங்கள் மனந்திரும்பி, ஒவ்வொருவரும் பாவமன்னிப்புக்கென்று இயேசுகிறிஸ்துவின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளுங்கள், அப்பொழுது பரிசுத்தஆவியின் வரத்தைப் பெறுவீர்கள்.- **அப்போஸ்தலர் 2: 36-38**

அறியாமையுள்ள காலங்களைத் தேவன் காணாதவர்போலிருந்தார், இப்பொழுதோ மனந்திரும்பவேண்டுமென்று எங்குமுள்ள மனுஷரெல்லாருக்கும் கட்டளையிடுகிறார்.- **அப்போஸ்தலர் 17: 30**

நமது பாவத்தைக் குறித்த குற்ற உணர்வைப் பெறுவது, மனந்திரும்புதலுக்கு முன்னர் நிகழ்வதாகும், ஆனால் அது மனந் திரும்புதல் அல்ல. முதலில் தங்கள் பாவத்தைப் பற்றிய குற்ற உணர்வைப் பெறாமல் எவரும் மனந்திரும்ப முடியாது, அதேவேளை தற்ற உணர்வைப் பெறும் எல்லோருமே மனந்திரம்புவது கிடையாது. ஒரு சிலரே உண்மையில் மனந்திரும்பு கிறார்கள். சிலர் தங்கள் பாவத்தின் பின்விளைவுகளைக் குறித்து அல்லது பாவத்தில் பிடிபட்டுவிட்டதைக் குறித்து வருந்தப் படுகிறார்களேயன்றி தாங்கள் செய்தது தவறு என்பதற்காக அல்ல. மேலும் பிடிபட்டதினால் கிடைக்கப்போகும் தண்டனையைக் குறித்தே வருத்தப்படுகிறார்கள்.

தேவனுக்கேற்ற துக்கம் பின்பு மனஸ்தாபப்படுகிறதற்கு இடமில்லாமல் இரட்சிப்புக்கேதுவான மனந்திரும்புதலை உண்டாக்குகிறது, லௌகிக துக்கமோ மரணத்தை உண்டாக்குகிறது.- **2 கொரிந்தியர் 7: 10**

அநேகர் நல்ல மனிதராக மாறுவதற்கும், தங்கள் வாழ்க்கை முறையை மாற்றிக் கொள்வதற்கும் தங்கள் சொந்த பலத்திலும், சுய முயற்சியிலும் தங்கியிருக்கிறார்கள். இந்த சுய முயற்சிக்கு அடிப்படைக் காரணம் சுயநீதியே, இந்தச் சுயநீதி பாவத்திலிருந்து மனந்திரும்ப வேண்டியதின் அவசியத்தை ஏற்றுக்கொள்வதில்லை.

நாங்கள் அனைவரும் தீட்டானவர்கள்போல இருக்கிறோம், எங்களுடைய நீதிகளெல்லாம் அழுக்கான கந்தைபோல இருக்கிறது, நாங்கள் அனைவரும் இலைகளைப்போல் உதிருகிறோம், எங்கள் அக்கிரமங்கள் காற்றைப்போல் எங்களை அடித்துக் கொண்டுபோகிறது.- **ஏசாயா 64: 6**

பரிசுத்த வேதாகமத்தில் கூறப்பட்டுள்ள பரிசேயர்கள், தங்கள் நடத்தைகளிலும், செயற்பாடுகளிலும் சமய உணர்வுள்ளவர் களாக உபவாசம், ஜெபம், வழிபாட்டுச் சடங்குகள், பாரம்பரிய சம்பிரதாயங்கள் போன்றவற்றிற்கு முக்கியத்தவம் கொடுத்து நடந்தார்கள், ஆனால் மனந்திரும்பவில்லை. இன்றும் அநேகர் அப்படியே பாரம்பரிய பரம்பரை பளக்க வளக்கங்களுக்கு முதலிடம் கொடுத்து நடப்பதை நாம் காணலாம். சத்தியத்தை அறிந்தும் அதன்படி நடக்க அவர்களுடைய சம்பிரதாய வழிபாடு இடம் கொடுப்பதில்லை.

பரிசேயரிலும் சதுசேயரிலும் அநேகர் தன்னிடத்தில் ஞானஸ்நானம் பெறும்படி வருகிறதை அவன் கண்டு: விரியன் பாம்புக் குட்டிகளே! வருங்கோபத்துக்குத் தப்பித்துக்கொள்ள உங்களுக்கு வகைகாட்டினவன் யார்? மனந்திரும்புதலுக்கு ஏற்ற கனிகளைக் கொடுங்கள்.- **மத்தேயு 3: 7-8**

வேதபாரகர் பரிசேயர் என்பவர்களுடைய நீதியிலும் உங்கள் நீதி அதிகமாயிராவிட்டால், பரலோகராஜ்யத்தில் பிரவேசிக்க மாட்டீர் கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.- **மத்தேயு .5: 20**

### மெய்யான மனந்திரும்புதல்

மெய்யான மந்திரும்புதல் என்பது ஒருவர் தன் பாவத்தைக குறித்து தனக்குள்தானே மனம் வருந்துவதோ, அல்லது மற்ற வரிடம் அதைப் பகிர்ந்து வருத்தப்படுவதோ அல்ல, முதலாவதாகவும் முக்கியமாகவும் செய்யவேண்டியது, தேவனை நோக்கி ஆழமான இருதயத்திலிருந்து முழு மனஸ்தாபத்தோடு மெய்யான வருத்தத்தை தெரிவிப்பதாகும். அத்தோடு பாவத்தை வெறுத்து, பாவத்திலிருந்து திரும்பி, சத்தியத்தின்படி நடக்க தீர்மானம் எடுக்கவேண்டும்.

தேவனே, உமது கிருபையின்படி எனக்கு இரங்கும், உமது மிகுந்த இரக்கங்களின்படி என் மீறுதல்கள் நீங்க என்னைச் சுத்தி கரியும். என் அக்கிரமம் நீங்க என்னை முற்றிலும் கழுவி, என் பாவமற என்னைச் சுத்திகரியும். என் மீறுதல்களை நான் அறிந் திருக்கிறேன், என் பாவம் எப்பொழுதும் எனக்கு முன்பாக நிற்கிறது. தேவரீர் ஒருவருக்கே விரோதமாக நான் பாவஞ் செய்து, உமது கண்களுக்கு முன்பாகப் பொல்லாங்கானதை நடப்பித்தேன், நீர் பேசும்போது உம்முடைய நீதி விளங்கவும், நீர் நியாயந் தீர்க்கும்போது உம்முடைய பரிசுத்தம் விளங்கவும் இதை அறிக்கையிடுகிறேன்.- **சங்கீதம் 51: 1-4**

நான் என் அக்கிரமத்தை மறைக்காமல், என் பாவத்தை உமக்கு அறிவித்தேன், என் மீறுதல்களைக் கர்த்தருக்கு அறிக்கை யிடுவேன் என்றேன், தேவரீர் என் பாவத்தின் தோஷத்தை மன்னித்தீர்.- **சங்கீதம் 32: 5**

நமக்குப் பாவமில்லையென்போமானால், நம்மை நாமே வஞ்சிக்கிறவர்களாயிருப்போம், சத்தியம் நமக்குள் இராது. நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மைச் சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியும் உள்ளவராயிருக்கிறார்.- **1 யோவான் 1: 8-9**

### மனந்திரும்புதலுக்காகச் செய்ய வேண்டியவை

1. பாவத்திலிருந்து திரும்புதல்

உங்கள் பிதாக்களைப்போலிராதேயுங்கள்; முந்தின தீர்க்கதரிசிகள் அவர்களை நோக்கி: உங்கள் பொல்லாத வழிகளையும் உங்கள் பொல்லாத கிரியைகளையும் விட்டுத் திரும்புங்கள் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார் என்று கூப்பிட்டார்கள், ஆனாலும் எனக்குச் செவிகொடாமலும் என்னைக் கவனியாமலும் போனார்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்.- **சகரியா 1: 4**

**தொடரும் ..**

# எமக்கு நீதி கிடைக்கும் என்று எதிர்பார்க்கவில்லை

## ஜெனிவாவில் மனித உரிமை செயற்பாட்டாளர் சந்திர நிலா

அண்மையில் ஜனாதிபதி, தேர்தல் பிரசாரத்துக்காக யாழ்ப்பாணம் வந்திருந்த சமயம், காணாமல்போனோர் என்று யாரும் இல்லை என்று சொல்லியிருந்தார். இந்நிலையில் இந்த ஜனாதிபதி மூலம் எங்களுக்கு எப்படி நீதி கிடைக்கும் என்று மனித உரிமை செயற்பாட்டாளர் சந்திர நிலா ஜெனிவாவில் கேள்வியெழுப்பினார்.

ஜெனிவா சென்றுள்ள மனித உரிமை செயற்பாட்டாளர் சந்திர நிலா நடைபெற்று உபகுழுக் கூட்டம் ஒன்றில் கலந்துகொண்ட பின்னர் கருத்து வெளியிடுகையிலேயே மேற்கண்டவாறு குறிப்பிட்டார். அவர் மேலும் குறிப்பிடுகையில்:

**கேள்வி:** இலங்கையில் காணாமல் போனோர் தொடர்பாக ஆராய அமைக்கப்பட்டிருக்கும் அலுவலகத்தினால் நீதி கிடைக்கும் என நினைக்கின்றீர்களா?

**பதில்:** எங்கள் உறவுகளை நாங்கள் தொலைக்கவில்லை. இறுதி யுத்தத்தின்போது எங்கள் உறவுகளை ஒப்படைத்தோம். அதனால் இலங்கையில் காணாமல் போனோர் அலுவலகம் அல்ல, காணாமல் ஆக்கப்பட்டோர் அலுவலகமே திறக்கப்பட வேண்டும் என நாங்கள் தெரிவித்து வந்தோம். என்றாலும் எங்களது கோரிக்கை நிராகரிக்கப்பட்டிருக்கின்றது. அந்த அலுவலகத்தில் தற்போது காணாமல் ஆக்கப்பட்ட, அதாவது இராணுவத்திடம் கையளித்த பின்னர் காணாமல் ஆக்கப்பட்டவர்களின் உறவினர்கள் 15 பேர் வழக்கு தாக்கதல் செய்திருக்கின்றனர். ஆனால் இதுவரை எவருக்கும் அதன் மூலம் எந்த நீதியும் கிடைக்கவில்லை.

இந்நிலையில் காணாமல் போனோர் அலுவலகம் ஊடாக எவ்வாறு நீதி கிடைக்கும்? அத்துடன் அண்மையில் ஜனாதிபதி, தேர்தல் பிரசாரத்துக்காக யாழ்ப்பாணம் வந்திருந்த சமயம், காணாமல்போனோர் என்று யாரும் இல்லை என்று சொல்லியிருந்தார். இந்நிலையில் இந்த ஜனாதிபதி மூலம் எங்களுக்கு எப்படி நீதி கிடைக்கும்?

**கேள்வி:** உங்கள் பிரச்சினைக்கு ஐக்கிய நாடுகள் சபை தீர்வொன்றை பெற்றுத்தரும் என்று நினைக்கின்றீர்களா?

**பதில்:** இல்கை அரசாங்கத்தை நம்பி கடந்த 8 வருடங்களாக பல்வேறு போராட்டங்களை செய்திருந்தோம். ஐக்கிய நாடுகளின் பிரதிநிதிகள் அங்கு வந்தவேளையும் எங்களுக்கு நீதி கிடைக்கவேண்டும் என தெரிவித்திருந்தோம். காணாமல் போனோர் யாரும் இல்லை என்று தெரிவித்திருக்கும் இந்நிலையிலே ஐக்கிய நாடுகள் மனித உரிமை பேரவைக்கு நீதி கேட்க வந்திருக்கின்றோம். அத்துடன் எங்களைப்போன்று பலர் இங்குவந்து சாட்சியமளிக்க விசாவுக்கு விண்ணப்பித்திருந்தனர். என்றாலும் விசா நிராகரிக்கப்பட்ட நிலையில் நாங்கள் இரண்டு பேர் மாத்திரமே இங்கு வந்திருக்கின்றோம். ஐக்கிய நாடுகளிடம் இருந்து எங்களுக்கு நீதி கிடைக்கும் என்ற நம்பிக்கையிலேயே வந்திருக்கின்றோம்.

**கேள்வி:** காணி விடுவிப்புக்காக நீங்கள் முன்னின்று பல போராட்டங்களை மேற்கொண்டு வருகிறீர்கள். அதில் உங்களுக்கு ஏதாவது நீதி கிடைக்கும் என எதிர்பார்க்கின்றீர்களா?

**பதில்:** எமது பூர்விக நிலத்தை விடுவிக்கக்கோரி எங்களது போராட்டத்தில் ஒரு வருடத்தை பூர்த்தி செய்திருக்கின்றோம். போராட்டத்தின் பயனாக 2018ஜனாதிபதி 1ஆம் திகதி 38 குடும்பங்களுக்கு சொந்தமாக 111 ஏக்கர் காணி விடுவிக்கப்பட்டது. இன்னும் 100 குடும்பங்களுக்குச் சொந்தமாக 181 ஏக்கர் கணரி விடுவிக்கப்பட இருக்கின்றது. அத்துடன் விடுவிக்கப்பட்ட காணிகளில் எங்களுக்கு எந்தவித அடிப்படை வசதிகளும் செய்து கொடுக்கப்படவில்லை. இவ்வாறான நிலையிலே அந்த மக்கள் மீள்குடியேற்றம் செய்யப்பட்டிருக்கின்றனர்.

அதேபோன்று தற்போது மீள்குடியேற்றப்பட்டிருக்கும் 38 குடும்பங்களின் பிள்ளைகளின் பாடசாலைகள் மயானம், கோயில், கிறிஸ்தவ ஆலயம் என்பன விடுக்கப்படாத பிரதேசங்களிலே இன்னும் இருக்கின்றன. அதனால் முன்பள்ளி மாணவர்கள் 5 கிலோ மீற்றர் தூரத்தில் இருக்கும் முன்பள்ளிக்கே கல்வி கற்க செல்வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. இந்த மீள்குடியேற்றத்தை வெறும் கண்துடைப்பாகவே நாங்கள் காண்கின்றோம் என்றார்.

# யாழ்.போதனா வைத்தியசாலையில் இடம்பெற்ற குழந்தை கடத்தல் மகற்பேற்று நிபுணர்களும் உடந்தையா?

யாழ்.போதனா வைத்திய சாலையில் பிறந்த இரட்டைக் குழந்தைகளில் ஒரு குழந்தை கடத்தப்பட்ட குற்றச்சாட்டு வழக்கில் குற்றப் புலனாய்வு திணைக் களத்தின் பணிப்பாளரை நீதிமன்றில் முற்படுமாறு யாழ்ப்பாணம் நீதவான் நீதிமன்று நேற்று முன்தினம் புதன்கிழமை உத்தரவிட்டுள்ளது.

வல்வெட்டித்துறை கரணவாய் பகுதியை சேர்ந்த பெண்ணொருவர் கடந்த 2004 ஆம் ஆண்டு ஏப்ரல் மாத காலப்பகுதியில் பிரசவத்துக்காக யாழ்ப்பாணம் போதனா வைத்தியசாலையில் சேர்க்கப்பட்டார். அவருக்கு இரட்டைக் குழந்தைகள் பிறந்ததாகவும் மகப்பேற்று நிபுணர்களின் உதவியுடன் தன்னுடைய ஒரு குழந்தை கடத்தப்பட்டுள்ளதாகவும் தெரிவித்து அவரால் யாழ்ப்பாண பொலிஸ் நிலையத்தில் முறைப்பாடு செய்யப்பட்டது.

இந்த வழக்கு விசாரணைகள் நீண்ட காலம் இடம்பெற்று தற்போது யாழ்ப்பாணம் நீதவான் நீதிமன்றில் இடம்பெற்று வருகின்றது. கடந்த வழக்குத் தவணையின் போது, இந்த வழக்கை குற்றப்புலனாய்வுப் பிரிவின ருக்குப் பாரப்படுத்துமாறும் இது தொடர்பாக சட்டமா அதிபரின் ஆலோசனையை பெற்றுக் கொள்ளுமாறும் நீதவான் கட்டளை பிறப்பித்திருந்தார்.

எனினும் கடந்த புதன்கிழமையன்று இந்த வழக்கு விசாரணைக்கு எடுக்கப்பட்ட போது குற்றப்புலனாய்வுப் பிரிவினர் மன்றில் தோன்ற வில்லை. எனவே அடுத்த வழக்குத் தவணையின் போது குற்றப்புலனாய்வு பிரிவு பணிப்பாளரை நீதிமன்றில் தோன்றுமாறு நீதவான் எஸ்.சதீஸ்தரன் கட்டளை பிறப்பித்தார்.





785


மேலதிக தகவல்களுக்கு :
**திருமதி. வசந்தா நடராசன் B.A.,**
**416 – 332 - 0269**
**vasantha@rogers.com**


# ஈழத்துத் திருக்கோவில்கள்

## ஸ்ரீ கைலாசநாதர் கோயில்

### (நல்லூர் சிவன்கோயில்) நல்லூர், யாழ்ப்பாணம்

"வாயானை மனத்தானை மனத்துள் நின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் தன்னைத்
தூயானைத் தூவெள்ளை யேற்றான் தன்னைச்
சுடர்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றென்
தாயானைத் தவமாய தன்மை யானைத்
தலையாய தேவாதி தேவர்க் கென்றும்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே."

யாழ்ப்பாண இராச்சியத்தை ஆண்ட மன்னர்களால் நல்லையம்பதியில் பல கோயில்கள் அமைக்கப்பட்டன. ஆயினும் கோயில்நகரமாக விளங்கும் நல்லையம்பதியில், ஸ்ரீ கைலாசநாதர் கோயிலை சிவஸ்ரீ ந.வெ.கார்த்திகேயக் குருக்கள் அமைத்துள்ளார்கள். இதற்கு ஆதாரமாக, சிவஸ்ரீ நா. சிவசுப்ரமணிய சிவாச்சாரியார் அவர்கள் அருளிய, ஸ்ரீகைலாசபுராணமும், இவ்வாலயஸ் தாபகர் சிவஸ்ரீ.ந.வெ.கார்த்திகேயக் குருக்களால் எழுதப்பட்ட, தருமசாசனமும் சான்றாகக் காணப்படுகின்றன. ஆத்மார்த்தமதாக இறைவனை வழிபடும் பக்தர்களின் எண்ணத்தை நிறைவேற்ற, அந்த இறைவனே கனவில் வந்து, கட்டளை இட்ட சம்பவங்கள் பல, அடியார்கள் வரலாற்றிலே நடந்தேறியுள்ளது. இவ்வாறே, கார்த்திகேயக் குருக்கள் அவர்களின் கனவில் தோன்றிய இறைவன் இட்ட கட்டளையின் பயனாகவே, நல்லூர் சிவன்கோயில் தோற்றம் பெற்றுள்ளது.

நல்லூர் என்பது காரணப்பெயராகக் காணப்படுகின்றது. தமிழ்நாட்டை ஆட்சி செய்த மன்னர்கள் தாம் ஆட்சி செய்த பிரதேசங்களை, நீதி நெறிமுறை தவறாத நல்ல ஊராக மாற்றி ஆட்சிசெய்துள்ளனர். இக்காரணத்தினால் தமது ஆட்சிப்பிரதேசங்களை நல்லூர் என அழைத்துள்ளனர். இவ்வாறே யாழ்ப்பாணத்தை ஆட்சி செய்த தமிழரசர்களும், நீதிநெறி தவறாத ஆட்சியை அமைத்து நல்லூரை அதன் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்துள்ளனர். நல்லூர் என்றாலே நல்லூர் கந்தசுவாமி கோயிலும், இப்பகுதியில் அமைந்துள்ள ஏனைய கோயில்களும் நினைவில் வந்து செல்லும்.

ஈழத்திலே திராவிடர்களின் நிலப்பகுதியாக விளங்கிய பல பிரதேசங்களில், தற்காலத்திலும் நல்லூர் என்ற பெயர் நிலைத்து நிற்கின்றது. யாழ்ப்பாணத்து நல்லூர், பூநகரிப்பிரதேசத்திலுள்ள நல்லூர், குருநாகல், களுத்துறைப்பிரதேசங்களிலே தற்காலத்திலும் சிங்கள மக்களால் கூறப்படும் நல்லூருவ என்ற பிரதேசங்கள் ஆகியன, திராவிட கலாச்சாரத்தின் எச்சங்களாகக் கருதமுடியும். யாழ்ப்பாணஅரசர்கள் ஆட்சி செய்த காலத்தில் நல்லூரின் அமைப்பு எவ்வாறு காணப்பட்டதென்பதை, யாழ்ப்பாண வைபவமாலை மிக அழகாக எடுத்தியம்பியுள்ளது.

"நாலு மதிலும் எழுப்பிய வாசலும் ஒழுங்காய் விடுவித்து, மாடமாளிகைகளும், கூடகோபுரங்களும் பூங்காவும், பூங்காவன நடுவிலே ஸ்நானமண்டபமும், முப்புடைக் கூபமும் உண்டாக்கி, அக்கூபத்திலே யமுனாநதித்தீர்த்தமும் அழைப்பித்துக் கலந்துவிட்டு, நீதிமண்டபமும், யானைப்பந்தி, குதிரைப்பந்தி, சேனாவீரரிருப்பிடம், முதலிய அனைத்தும் கட்டுவித்து... வாழ்ந்திருந்தான்" எனக்குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வாறு தமிழரசர்கள் கோட்டை கொத்தளங்களுடன் ஆட்சி செய்த தமிழ்பிரதேசத்திலே, யாழ்ப்பாண வைபவமாலை குறிப்பிட்டுள்ள மன்னர்களால் அமைக்கப்பட்ட கோயில்களுடன், மக்களால் அமைக்கப்பட்ட பல்வேறு கோயில்களும் அமைந்து, நல்லூர் என்ற பெயரை மேலாங்க வைத்துள்ளது.

ஸ்ரீ கைலாசநாதர் கோயில் என வழங்கப்படும் நல்லூர் சிவன் கோயில், பழைய பருத்தித்துறை வீதியை முன்புறமாகக் கொண்டு காணப்படுகின்றது. இக்கோயில் அமைந்துள்ள நிலப்பகுதியை கல்வளவு என அழைப்பர். இதன் நடுவில் ஆலயம் அமைக்கப்பட்டுள்ளது. இக்கோயிலின் வாசல்கள் கிழக்கிலிருந்து மேற்காகவும், வடக்குநோக்கியதாகவும் அமைந்துள்ளன. ஆலயத்தின் கருவறையில் மூலலிங்க ஆவுடையார் வட்ட வடிவமாக நிறுவப்பட்டுள்ளதோடு, கருவறையின் விமானம் வட்டவடிவமாகக் காணப்படுகின்றது.

அர்த்தமண்டபம், மகாமண்டபம், தர்சன மண்டபம், ஸ்நபன மண்டபம் ஆகியவையும் அமைக்கப்பட்டுள்ளன. விநாயகர், ஸ்ரீகமலாம்பிகா, சிவகாமி சமேத நடராசர், ஸ்ரீகைலாசநாதசுவாமி, வள்ளி தெய்வயானை சமேத சுப்ரமணியர் ஆகியோருக்குரிய கோயில்களும் காணப்படுகின்றன. ஸ்ரீ கமலாம்பிகையின் விமானம், சதுர வடிவமாகக் காணப்படுகின்றது. இங்கு எழுந்தருளியுள்ள ஸ்ரீகமலாம்பிகை, இரு திருக்கரங்களைக் கொண்டவராக எழுந்தருளியுள்ளார். சிவன், சக்தி இருவருக்குமான கருவறைகளும், தனித்தனி அர்த்தமண்டபங்களைக் கொண்டனவாக விளங்குகின்றன

இவ்வாலயத்தின் முதலாம்பிரகாரத்திலே, நவக்கிரக கோயில் காணப்படுகின்றது. ஈஸ்வரனுடைய பெயரைப் பெற்ற சனீஸ்வரனுக்குரிய தினமான சனிக்கிழமைகளிலும், புரட்டாதி மாதத்தில் இடம்பெறும் புரட்டாதிச் சனிக்கிழமைகளிலும் மக்கள் திரண்டு, சனிபகவானை வழிபட்டுச் செல்வர். ஸ்ரீ கமலாம்பிகை மற்றும் ஸ்ரீ கைலாசநாதசுவாமி ஆகியோரின் கருவறைக்கு இடைப்படதாக, நடராஜர் சந்நிதி அமைந்துள்ளது. அம்பாள், சிவன் ஆகியோருக்கு தனித்தனியாக அமைந்துள்ள அர்த்த மண்டபங்களில், அம்பாள் எழுந்தருளியுள்ள கற்பக்கிரகத்தின் அர்த்தமண்டபத்தின் வலதுபக்கமாக, விநாயகர் கருவறையும், சிவனின் கருவறையின் அர்த்தமண்டபத்தின் இடது பக்கமாக, சுப்ரமணியரின் கருவறையும் காணப்படுகின்றன.

தொடரும்......

# கூட்டமைப்புக்கு எதிராக தேர்தல் காலங்களில் செயற்படும் நிலைமை துடைத்தெறியப்பட வேண்டும் என்கிறார் வியாழேந்திரன் எம்.பி.

தமிழ்த் தேசியக் கூட்டமைப்புக்குள் இருந்துகொண்டு அக்கட்சிக்கு எதிராக தேர்தல் காலங்களில் செயற்படும் நிலைமை எதிர்காலத்தில் முற்றாக துடைத்தெறியப்பட வேண்டும். இல்லாதுவிட்டால் எதிர்வரும் கிழக்கு மாகாண சபை தேர்தலில் பாரிய பின்னடைவை சந்திக்கும் நிலையேற்றப்படும் என மட்டக்களப்பு மாவட்ட தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு பாராளுமன்ற உறுப்பினர் எஸ்.வியாழேந்திரன் தெரிவித்தார்.

மட்டக்களப்பில் செவ்வாய்க்கிழமை நடைபெற்ற தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் உள்ளூராட்சி மன்ற உறுப்பினர்கள் சந்தியப்பிரமாணம் செய்யும் நிகழ்வில் கலந்துகொண்டு உரையாற்றும்போதே அவர் இவ்வாறு தெரிவித்தார். அவர் தொடர்ந்தும் குறிப்பிடுகையில்:

'எங்களை ஆக்கபூர்வமான விமர்சனங்கள் வளம்படுத்தினாலும் தேர்தல் காலங்களில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் வெற்றியை சிதைப்பதற்காக திட்டமிடப்பட்டு மேற்கொள்ளப்பட்ட சவால்களை விமர்சனங்களை விசமந்தனங்களை தாண்டி உள்ளூராட்சி மன்ற உறுப்பினர்கள் வெற்றிபெற்றுள்ளனர்.

தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு கடந்த காலத்தில் வடகிழக்கில் பல வெற்றிகளை பெற்றுவந்துள்ளது. அதன் ஒரு கட்டமாக இந்த உள்ளூராட்சி மன்றத் தேர்தலும் அமைத்துள்ளது. கடந்த கால தேர்தலுடன் ஒப்பிடும்போது இந்த உள்ளூராட்சி சபை தேர்தல் கூடுதலான சவால்களைக் கொண்டதாக இருந்தது. ஒரு புதிய தேர்தல் முறையை முதன்முறையாக எதிர்கொண்ட தேர்தலாகவும் அமைந்திருந்தது.

மட்டக்களப்பு மாவட்டத்தில் தமிழ்த் தேசிய கூட்டமைப்பில் ஐந்து பாராளுமன்ற உறுப்பினர்கள் இருந்த காலம் இருந்தது. தற்போது மூன்று பாராளுமன்ற உறுப்பினர்கள் இருக்கின்றோம். 2010ஆம் ஆண்டு 65610 வாக்குகளை தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு மட்டக்களப்பு மாவட்டத்தில் பெற்றிருந்தது.

2012ஆம் ஆண்டு மாகாண சபை தேர்தலில் 120000 வாக்குகளை தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு பெற்றிருந்தது. 2015ஆம் ஆண்டு நடைபெற்ற பாராளுமன்ற தேர்தலில் 128000 வாக்குகளை தமிழ் தேசிய கூட்டமைப்பு பெற்றிருந்தது. 2018ஆம் ஆண்டு நடைபெற்ற இந்த உள்ளூராட்சி மன்ற தேர்தலில் சுமார் 80 ஆயிரம் வாக்குகளை பெற்றுள்ளோம். 48 ஆயிரம் வாக்குகளை சிதைக்கப்பட்டுள்ளன.

இவ்வாறான சரிவினை சந்தித்ததற்கான சரியான காரணங்களை நாங்கள் கிராம மட்டத்தில் இருந்து ஆராய்ந்து அறியவேண்டும். அந்த காரணங்களை அறிந்து நாங்கள் பக்குவமாக செயற்படும்போதே கிழக்கில் தமிழர் ஒருவரை முதலமைச்சராக கொண்டு வரமுடியும். இல்லாதுவிட்டால் அனைத்தும் வெறும் பகற்கனவாகவே சென்றுவிடும் என்றார்.

# தெற்காசியாவின் சிறந்த நகரமாக கொழும்பை மாற்றுவேன்

### என்கிறார் புதிய மேயர் ரோஸி சேனநாயக்க

பழைய விடயங்களை மறந்து தெற்காசியாவின் சிறந்த நகரமாக கொழும்பு நகரை கட்டியெழுப்ப அனைவரும் ஒத்துழைக்க வேண்டும் என கொழும்பு மாநகர சபையின் முதலாவது பெண் மேயராக சபையின் முதலாவது பெண் மேயராக நேற்று கடமைகளைப் பொறுப்பேற்ற ரோஸி சேனநாயக்க தெரிவித்தார்.

கொழும்பு மாநகர சபை மேயராக அண்மையில் பதவிப்பிரமாணம் செய்துகொண்ட ரோஸி சேனநாயக்க மாநகர சபையில் தனது கடமைகளை பொறுப்பேற்றுக் கொண்டார். அதனைத் தொடர்ந்து அங்கு இடம்பெற்ற நிகழ்வில் கலந்துகொண்டு உரையாற்றுகையிலேயே அவர் இவ்வாறு தெரிவித்தார். அவர் தொடர்ந்தும் உரையாற்றுகையில்:

பாரிய போராட்டத்திற்கு மத்தியில் தேர்தலில் வெற்றிபெற்ற என்னை இம் மாநகரசைபயின் முதலாவது பெண் மேயராக நியமித்தமைக்கு எனது கட்சியின் தலைவர் பிரதமர் ரணில் விக்கிரமசிங்கவுக்கு நன்றி தெரிவிப்பதுடன் அதற்காக அர்ப்பணிப்புடன் செயற்பட்ட மாநகர மக்களுக்கும் நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன். அத்துடன் மாநகரசபையில் கடந்த காலங்களில் இருந்துவந்த குறைபாடுகளை தேடிக்கொண்டு இருக்காமல் இந்நகரை புதிய வேலைத்திட்டத்தின் கீழ் முன்னேற்றுவதற்கு நடவடிக்கை எடுப்பதுடன் மக்கள் அன்னியோன்யமாக வாழக்கூடிய சூழலை ஏற்படுத்தவும் முயற்சிக்க வேண்டும்.

மாநகரசபையில் மேற்கொள்ளப்படும் மக்கள் பணிகளின் போது மக்கள் விரக்தியடையாத வகையில் சேவைசெய்ய நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும். மக்கள் மாநகர சபைக்கு வந்து தங்கள் தேவைக்காக காத்துக் கொண்டிருக்காத வகையில் பணிகள் மேற்கொள்ளப்பட வேண்டும். அதற்கான அனைத்து வசதிகளையும் செய்து தர நான் அர்ப்பணிப்புடன் செயற்படுவேன். ஏனெனில் மக்களின் வரிப்பணத்தில் இயங்கும் மாநகர சபையின் பணிகள் மக்களுக்கு பூரணமாக கிடைக்கவேண்டும். அதேபோன்று மூவின மக்களும் தங்கள் மதக் கலாசாரத்தை சுதந்திரமாகவும் எவ்வித தடையுமின்றி பின்பற்றி நடக்கும் சூழலை ஏற்படுத்துவேன். மாநகர சபையில் ஊழல் மோசடிகளுக்கு நான் ஒருபோதும் இடமளிக்கமாட்டேன். அதுதொடர்பில் கடுமையான நடவடிக்கை எடுப்பேன். என்றாலும் மாநகர சபை அதிகாரிகள் மிகவும் அர்ப்பணிப்புடன் சேவை செய்பவர்கள் என்பதை நான் அறிவேன். கொழும்பு மாநகர சபை எல்லைக்குள் வசிக்கும் மக்களில் மூன்றில் இரண்டு பேர் குறைந்த வருமானம் பெறுபவர்கள்.

அவர்களின் வாழ்வாதாரத்தை மேம்படுத்தும் வேலைத் திட்டங்களை மேற்கொள்வோம். அதேபோன்று எதிர்வரும் 10 வருடங்களில் 50 ஆயிரம் வீட்டுத்திட்டத்தை மேற்கொள்ளவுள்ளோம். எனவே எதிர்வரும் 2020 ஆம் ஆண்டு கொழும்பு துறைமுக நகரம் தெற்காசியாவின் நவீன நகரமாக காணப்படுவதுடன் அதற்கு நிகராக கொழும்பு மாநகரையும் நவீன தொழில் நுட்ப வசதிகளடங்கிய நகரமாக மாற்றுவதுடன் தெற்காசியாவின் சிறந்த நகரமாக மாற்றவேண்டும். அதற்காக அனைவரும் ஒத்துழைப்புடன் செயற்பட வேண்டும் என்றார்.

# தமிழக அரசு கேபிள் டிவி.க்கான உரிமம் ரத்து?: மத்திய செய்தி ஒலிபரப்பு அமைச்சகம் திட்டம்



தமிழக அரசு கேபிள் டிவிக்கான உரிமத்தை ரத்து செய்ய மத்திய செய்தி ஒலிபரப்புத்துறை அமைச்சகம் திட்டமிட்டுள்ளதாக தகவல் வெளியாகி உள்ளது. இதற்கு அனுமதி கேட்டு பிரதமர் அலுவலகத்துக்கு கடிதம் எழுத உள்ளதாகக் கூறப்படுகிறது.

தமிழகத்தில் 'டேக் டிவி' அல்லது 'அரசு கேபிள்' என்றழைக்கப்படும் தமிழக அரசு கேபிள் டிவி கார்ப்பரேஷன் லிமிடெட் நிறுவனம் சார்பில், கேபிள் மூலம் 300 சேனல்கள் வழங்கப்படுகின்றன. இதன்மூலம், பொதுமக்களுக்கு குறைந்த கட்டணத்தில் தொலைக்காட்சி சேனல்களை வழங்கும் நோக்கம் நிறைவேறி வருகிறது. இதற்கு ஐக்கிய முற்போக்கு கூட்டணி ஆட்சியின்போது ஜூலை 5, 2012ல் கோரப்பட்ட டிஜிட்டல் உரிமம் கிடைக்காமல் இருந்தது. பிறகு பிரதமராக பொறுப்பேற்ற மோடியுடன் அப்போது தமிழக முதல்வராக இருந்த ஜெயலலிதாவுக்கு இருந்த நட்பு காரணமாக டிஜிட்டல் உரிமம் வழங்கப்பட்டது. அதற்கு முன்பு ஆகஸ்ட் 2014ல் தொலைத்தொடர்பு ஒழுங்குமுறை ஆணையம் (டிராய்) மத்திய அரசுக்கு அளித்த பரிந்துரை கணக்கில் கொள்ளப்படவில்லை. இதற்கு காரணமாக அப்போது இரு அரசுகளுக்கு இடையே நிலவிய நட்பு ரீதியான அரசியல் சூழல் தற்போது மாறி வருகிறது.

இதுபோல இந்தியாவில் வேறு எந்த மாநில அரசுகளும் கேபிள் டிவி நிறுவனத்தை நடத்தவில்லை. எனினும், தமிழகத்தின் கேபிள் டிவி செயல்பாடுகளை கண்டு வியந்த ஆந்திரா, ஒடிஸா உள்ளிட்ட மற்ற மாநிலங்களும் அதை தொடங்க அனுமதி கேட்டு வந்தன. ஆனால் யாருக்கும் இதுவரை அனுமதி வழங்கப்படவில்லை. கடைசியாக இப்போது கேபிள் டிவி நடத்த மத்திய அரசிடம் தெலங்கானா மாநில அரசு உரிமம் கோரி உள்ளது. இந்நிலையில், தெலங்கானா அரசுக்கு அனுமதி வழங்காமல், தமிழக அரசின் கேபிள் டிவியின் உரிமத்தையும் ரத்து செய்ய மத்திய செய்தி ஒலிபரப்புத்துறை அமைச்சகம் திட்டமிட்டுள்ளதாக தகவல் வெளியாகி உள்ளது.

இதுகுறித்து மத்திய செய்தி ஒலிபரப்புத் துறை அமைச்சக வட்டாரம் கூறும்போது, "தமிழகத்தைப் போல கேபிள் டிவி உரிமம் வழங்கப்படவில்லை என்றால் மற்ற மாநிலங்கள் நீதிமன்றத்தை நாட வாய்ப்பு உள்ளது. இப்போது தமிழகத்தின் அரசியல் சூழலும் மாறி வருவதால், டிராய் பரிந்துரையை காரணம் காட்டி உரிமத்தை ரத்து செய்ய திட்டமிட்டுள்ளோம். இது அரசியல் ரீதியான முக்கிய முடிவு என்பதால், அதற்கான அனுமதி கேட்டு பிரதமர் அலுவலகத்துக்கு கடிதம் எழுத உள்ளோம்" என்றனர். கடந்த மார்ச் 26ல் தமிழக அரசு கேபிள் பற்றி பிரதமர் அலுவலகத்துக்கு விளக்கம் அளிக்க நேரம் ஒதுக்கப்பட்டிருந்தது. இது கடைசி நேரத்தில் ரத்து செய்யப்பட்டது. இதையடுத்து வேறொரு நாளில் நேரம் கேட்டு செய்தி ஒலிபரப்புத் துறை அதிகாரிகள் காத்திருக்கின்றனர். இத்துடன், தமிழக அரசு கேபிள், அதை அரசியல் ஆயுதமாக பயன்படுத்துவதாக தனக்கு வந்த புகாரையும் செய்தி ஒலிபரப்புத்துறை அமைச்சகம் முன்வைக்க உள்ளது. சமீபத்தில் தந்தி டிவியில் தமிழக அரசு விரும்பாத செய்தி ஒளிபரப்பப்பட்டதாக சர்ச்சை கிளம்பியது. இதன் காரணமாக தந்தி டிவியின் ஒளிபரப்பு, அரசு கேபிளில் நிறுத்தப்பட்டது.

இதுகுறித்து மத்திய செய்தி ஒலிபரப்புத் துறைக்கு புகார் அளிக்கப்பட்டுள்ளது. எனினும், அரசு கேபிளை ரத்து செய்வது தொடர்பான இறுதி முடிவை பிரதமர் அலுவலகமே எடுக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. கடந்த ஆகஸ்ட் 12, 2014ல் டிராய் அளித்த பரிந்துரையில் "அரசியல் அமைப்புகள், மதம் சார்ந்த அமைப்புகள், உள்ளாட்சி அமைப்புகள், பஞ்சாயத்து ராஜ் மற்றும் பொது நிதியில் செயல்படும் அமைப்புகள், மத்திய மற்றும் மாநில அரசுகளின் அமைச்சகங்கள், நிறுவனங்கள் ஆகியவற்றுக்கு கேபிள் டிவி நடத்தும் உரிமம் வழங்கக் கூடாது. ஒருவேளை ஏற்கெனவே உரிமம் வழங்கப்பட்டிருந்தால் அதை ரத்து செய்ய வேண்டும்" எனக் கூறப்பட்டிருந்தது குறிப்பிடத்தக்கது.

# காவிரி மேலாண்மை வாரியத்தை உடனடியாக அமைக்க வேண்டும் : நிதின் கட்கரியிடம் தமிழக பாஜக குழு மனு



உச்ச நீதிமன்ற தீர்ப்பின் அடிப்படையில் காவிரி மேலாண்மை வாரியத்தை உடனடியாக அமைக்க வேண்டும் என மத்திய நீர்வளத் துறை அமைச்சர் நிதின் கட்கரியிடம் பாஜக மூத்த தலைவர் இல.கணேசன் தலைமையிலான குழுவினர் வலியுறுத்தியுள்ளனர். காவிரி மேலாண்மை வாரியம், காவிரி நீர் முறைப்படுத்தும் குழு ஆகியவற்றை 6 வாரங்களுக்குள் அமைக்க வேண்டும் என மத்திய அரசுக்கு உச்ச நீதிமன்றம் உத்தரவிட்டது. இந்த 6 வார கெடு, இன்றுடன் முடிவடைகிறது. இந்நிலையில் பாஜக மூத்த தலைவரும், மாநிலங்களவை உறுப்பினருமான இல.கணேசன், மத்திய இணை அமைச்சர் பொன். ராதாகிருஷ்ணன், மாநிலப் பொதுச்செயலாளர் கருப்பு முருகானந்தம், மாநில விவசாய அணித் தலைவர் பொன்.விஜயராகவன் ஆகியோரைக் கொண்ட குழுவினர் டெல்லியில் மத்திய நீர்வளத் துறை அமைச்சர் நிதின் கட்கரியை சந்தித்து மனு அளித்தனர்.

இது தொடர்பாக இல.கணேசனிடம் கேட்டபோது, "உச்ச நீதிமன்ற தீர்ப்பின் அடிப்படையில் உடனடியாக காவிரி மேலாண்மை வாரியம் அமைக்க வேண்டும். தமிழக விவசாயத்துக்கு தேவையான நீர் முறைப்படி கிடைக்க நடவடிக்கை எடுக்க வேண்டும். காவிரி நதி நீர் பிரச்சினைகள் எதிர்காலத்தில் வராதவாறு நிரந்தர ஒப்பந்தம் ஏற்பட அரசு கவனம் செலுத்த வேண்டும். காவிரியில் தமிழகத்துக்கு பாதிப்பை ஏற்படுத்தும் கர்நாடகத்தின் நடவடிக்கைகளை முறைப்படுத்த வேண்டும், கோதாவரி நதியில் வீணாகும் நீரை தாமிரபரணி நதிக்கு கொண்டுவர வேண்டும் என்பன உள்ளிட்ட கோரிக்கைகளை நிதின் கட்கரியிடம் முன்வைத்தோம். நடவடிக்கை எடுப்பதாக அவர் உறுதி அளித்தார்" என்றார்.

# 'என் மேல் தவறு இருந்தால் தாராளமாக கைது செய்யுங்கள் அமைச்சர் அவர்களே': விவேக் ஜெயராமன் சவால்

என்.ஆர்.ஐ கோட்டாவை தவறாக பயன்படுத்தவில்லை, என் மீது தவறு இருந்தால் தாராளமாக அமைச்சர் ஜெயக்குமார் கைது செய்யலாம் என விவேக் ஜெயராமன் தெரிவித்துள்ளார். சட்டப்பல்கலை கழக முறைகேட்டில் லஞ்ச ஒழிப்புத்துறை வழக்குப்பதிவு செய்துள்ளது. இதில் வெளிநாடுவாழ் இந்தியர் கோட்டாவில் படித்ததாக விவேக் ஜெயராமன் மீதும் வழக்குப்பதிவு செய்யப்பட்டுள்ளது. என் மீது தவறு இருந்தால் தாராளமாக நடவடிக்கை எடுக்கலாம் என விவேக் ஜெயராமன் தெரிவித்துள்ளார். இது குறித்து விவேக் அறிக்கையில் கூறியிருப்பதாவது:நான் இளநிலை படிப்பை ஆஸ்திரேலியாவிலும், முதுகலை படிப்பை புனேவிலும் முடித்தவன். ஐடிசி நிறுவனத்தில் பணியாற்றி எந்த சிபாரிசும் இல்லாமல் என்னை நம்பியே வளர்ந்தவன். சட்டப்படிப்பை படிக்க எத்தனையோ கல்லூரிகள் இருந்தாலும், முறையாகவும், நியாயமாகவும் படிக்கவே அம்பேத்கர் சட்டப்பல்கலை கழகத்தில் சேர்ந்தேன். சிங்கப்பூரில் வசிக்கும் என் உடன் பிறந்த சகோதரி மூலமாக வெளிநாடுவாழ் இந்தியர் என்கிற பிரிவில் முறையான சான்றிதழ்களை சமர்பித்த பிறகே கல்லூரியில் சேர்ந்தேன்.இப்போதும் அது சம்பந்தமான சான்றிதழ்களை சம்ர்பிக்கத்தயாராக இருக்கிறேன்.

உரிய சான்றிதழ்களை சமர்பிக்க தவறி இருந்தால் அப்போதே எனக்கு இடம் மறுக்கப்பட்டிருக்கும். சட்டப்படிப்பில் சேர்ந்த சில நாட்களிலேயே டெங்கு காய்ச்சல் பாதிப்பினால் வேறு சில வேலைகளாலும் படிப்பை தொடர் முடியாத நிலையில் நான் சட்டப்படிப்பிலிருந்து விலகி விட்டேன். அப்படி இருக்க நான் முறைகேடாக சீட் வாங்கியதாக சிலர் வேண்டுமென்றே தவறாக , விஷமத்தனமான தகவல்களை, உண்மைக்கு மாறான அவதூறுகளை உள் நோக்கத்தோடு பரப்புவது கொஞ்சமும் நியாயமற்றது. அடிப்படை அற்றது. மூத்த அமைச்சராக இருக்கும் அமைச்சர் ஜெயக்குமார் இது குறித்த ஆதாரங்களையோ அடிப்படை உண்மைகளையோ அறிந்துக்கொள்ளாமல், கொஞ்சமும் விசாரிக்காமல் என்னையும் என் குடும்பத்தையும் நாகரீகமற்ற முறையில் விமர்சித்துள்ளார்.

என்னை கைது செய்யப்போவதாகவும் கூறியுள்ளார். என் மீது தவறு இருந்தால் தாராளமாக கைது செய்யட்டும். எத்தகைய நடவடிக்கைகளையும் சட்டப்பூர்வமாக சந்திக்க நான் தயாராக இருக்கிறேன். ஆட்சியும் அதிகாரமும் இருப்பதால் எந்த நேரமும் யாரையும் கைது செய்யலாம் என்று அமைச்சர் நினைக்கிறார்.இது போன்ற மிரட்டல்களுக்கு ஒருபோதும் பயப்படுகிற நபர் அல்ல நான். எத்தகைய மிரட்டல்களையும் சட்டபூர்வமாக சந்திக்க தயராக இருக்கிறேன். அதே நேரம் ஒரு பிரச்சினையின் உண்மைத்தன்மை தெரியாமல் தான் வகிக்கின்ற பொறுப்பை மறந்து தான் தோன்றித்தனமாக அவர் பேசுவது வருத்தத்தை தருகிறது. இந்த விவகராத்தில் என் மீது எள் அளவு குற்றம் சாட்ட வாய்ப்பில்லாத நிலையில் அவர் நான் சமர்பித்த சான்றிதழ்களை மறைத்து வைத்து இவ்வாறு குற்றம் சாட்டுகிறாரோ என்று எண்ணத்தோன்றுகிறது. என் பெயரைச்சொல்லி என் குடும்பம் அவதூறுக்கு ஆளாகும் நிலையை இனி எவர் ஏற்படுத்தினாலும் அதற்கான சட்ட விளைவுகளை சந்திக்க வேண்டி வரும் என எச்சரிக்கிறேன்." இவ்வாறு விவேக் ஜெய்ராமன் தெரிவித்துள்ளார்.

# உலகத் தமிழ் பண்பாட்டு இயக்கத்தின் சின்னத்தை சட்ட விரோதமாக பயன்படுத்தும் எவருக்கு எதிராகவும் அதன் தலைமையகம் சட்ட நடவடிக்கை எடுக்கும்.




உலகத் தமிழ் பண்பாட்டு இயக்கத்தின் அகிலத் தலைவர் கனடா வாழ் திரு வினாசித்தம்பி துரைராஜா, மற்றும் செயலாளர் நாயகம் , ஜேர்மனி வாழ் திரு துரை கணேசலிங்கம் ஆகியோர் கூட்டாக வெளியிட்டுள்ள அறிக்கையில் தெரிவிப்பு

எமது உலகத் தமிழ் பண்பாட்டு இயக்கத்தின் சின்னத்தை சில விசமிகள் இலங்கை இந்தியா ஆகிய நாடுகளில் முறைகேடாக பயன்படுத்தி அதனைத் துஸ்ப்பிரயோகம் செய்கின்றனர். அத்துடன் சட்டவிரோதமாக நடத்தும் சிறு சிறு கூட்டங்களுக்கு நிதி சேகரிக்கும் முயற்சியிலும் ஈடுபட்டு வருகின்றனர்.

இதை எமது கவனத்திற்கு கொண்டு வந்த பலர் இந்த விசமிகளின் குழுவிற்கு எதிராக நடவடிக்கை எடுக்கும் படியும் கனடாவில் தலைமையகத்தைக் கொண்ட உலகத் தமிழ்ப் பண்பாட்டு இயக்கத்தின் சின்னத்தை கனடாவிலேயே மத்திய அரசாங்கத்தின் கீழ் இயங்கும் Canadian Intellectual Property Office, என்னும் அலுவலகத்தில் பதிவு செய்யுமாறும் எமக்கு ஆலோசனைகளை வழங்கினார்கள். எனவே நாம் கனடாவில் ரொரென்ரோ மாநகரில இயங்கிவரும் M/S Macdomald Sager Manis LLP, Lawyers & Trade Mark Agents, அலுவலகத்தோடு தொடர்பு கொண்டு அவர்கள் மூலமாக விண்ணப்பத்தைச் சமர்பபித்தோம்.

தற்போது எமது விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப்பட்டு எமது சின்னம் (லோகோ) கனடாவில் தலைமையகத்தைக் கொண்ட உல்கத் தமிழ் பண்பாட்டு இயக்கத்திற்குரிய சின்னமாகவே இனி கருதபபடும் என்றும் வேறு யாறும் இந்த லோகோவைப் பாவிக்க இயலாது என்றும் அறிவித்துளளார்கள்.

உலகத் தமிழ் பண்பாட்டு இயக்கத்தின் சின்னத்தை இனிமேல் சட்ட விரோதமாக பயன்படுத்தும் எவருக்கு எதிராகவும் கனடாவில் உள்ள அதன் தலைமையகம் சட்ட நடவடிக்கை எடுக்கும். இவவாறு உலகத் தமிழ் பண்பாட்டு இயக்கத்தின் அகிலத் தலைவர் கனடா வாழ் திரு வினாசித்தம்பி துரைராஜா, மற்றும் செயலாளர் நாயகம் , ஜேர்மனி வாழ் திரு துரை கணேசலிங்கம் ஆகியோர் கூட்டாக வெளியிட்டுள்ள அறிக்கையில் தெரிவித்துள்ளார்கள்.

# எளிதில் கிடைத்த ஜனாதிபதிப் பதவி மூலம், எளிமையானவரான மைத்திரி எதுவும் செய்யாமல் இருப்பது ஏன்?

*கொழும்பிலிருந்து ராஜபுத்ரன்*



"தமிழ் மக்களின் பிரச்சினைகளை தீர்க்க வேண்டும் என்ற விருப்பம் ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேனவுக்கு இருப்பதாக நாங்கள் அறிகிறோம். இந்த விடயத்தில் அவருக்கு இருக்கின்ற சவால்களை சமாளித்து தமிழ் மக்களுக்கான பிரச்சினைகளை தீர்க்க நடவடிக்கை எடுக்கவேண்டும். அவ்வாறு செய்வாராக இருந்தால் சர்வதேச சமூகம் அவரை உள்நாட்டில் பிரச்சினைகளை தீர்த்த தலைவர் என்று அங்கீகரிக்கும்"

யாழ்ப்பாணம் சென்.பற்றிக்ஸ் கல்லூரியில் நடந்த நிகழ்வில் ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேனவுக்கு முன்பாக வடக்கு மாகாண முதலமைச்சர் சி.வி.விக்னேஸ்வரனும் மேடையில் அமர்ந்திருக்கையில்:

இவ்வாறு கூறியிருந்தார் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் தலைவர் இரா.சம்பந்தன். இரா.சம்பந்தனின் இந்தக் கருத்து பல்வேறு விடயங்களை வெளிப்படுத்துவதாகத் தோன்றுகின்றது.

தமிழ் மக்களின் பிரச்சினைகளைத் தீர்க்கின்ற விருப்பம் கொண்டவராக இருக்கிறார் ஜனாதிபதி என்பது முதலாவது. ஆனால் அவருக்கு அதனை நிறைவேற்றுவதற்கு சவால்கள் இருக்கின்ற என்பது இரண்டாவது.

அந்த சவால்களைக் கடந்து பிரச்சினைகளுக்குத் தீர்வு கண்டால், சர்வதேச அளவில் மதிக்கப்படும் ஒருவராக திகழ்வார் என்பது மூன்றாவது.

இந்த மூன்று விடயங்களையும் இனி ஒவ்வொன்றாக பார்க்கலாம்.

தாம் இப்போது வகிக்கின்ற பதவிக்கு வருவேன் என்று 2015ஆம் ஆண்டுக்கு முன்பாக, ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேன ஒருபோதும் கனவு கூடக் கண்டிருக்க மாட்டார்.

மஹிந்த ராஜபக்ஷவுக்கு எதிராக தோன்றிய எதிர்ப்பு அலை அதனை ஒருங்கிணைப்பத்தில் பெறப்பட்ட வெற்றி என்பனவே அவரை ஜனாதிபதி ஆசனத்தில் அமர வைத்தது.

மஹிந்த ராஜபக்ஷவின் அமைச்சரவையில் அதிகம் பிரபலம் இல்லாத ஒரு அமைச்சராக இருந்த மைத்திரிபால சிறிசேன, ஜனாதிபதியானதும், அவரது எளிமையான தோற்றம் மற்றும் நடவடிக்கைகளும், ஆரம்பகாலத்தில் உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் மிகவும் மதிக்கப்படும் ஒரு தலைவராக நோக்க வைத்தது. ஊடகங்கள் அவரை வியப்புடன் பார்த்தன. 2015இற்கு முன்னும் பின்னுமான காலகட்டத்தின் வேறுபாட்டை, மக்களுக்கு அனுபவபூர்வமாக உணர்ந்தனர். திடீரென சர்வதேச அளவில் மைத்திரிபால சிறிசேனவுக்கு புகழ் உச்சத்தை அடைந்தது.

அவருக்கு நோபல் பரிசு கிடைக்கப் போவதாகவும், எதிர்பார்ப்புகள் கிளப்பி விடப்பட்டன.

ஆனால், இப்போது அவரால் அந்த நிலையை தக்கவைத்துக் கொள்ள முடியுமா என்பதே இன்றுள்ள சிக்கல். அதனைத் தான், இரா.சம்பந்தன் யாழ்ப்பாணத்தில் சுட்டிக்காட்டியிருக்கிறார்.

ஒரு நாட்டின் ஜனாதிபதியாகவோ, பிரதமராகவோ இருப்பதால் மாத்திரம், ஒரு தலைவரின் புகழ் சர்வதேசத்தினால் உறுதிப்படுத்தப்படுவதில்லை. அவர் ஆட்சிக் காலத்தில் எதனைச் செய்து முடித்தாரோ அதன் மூலம் தான் வரலாற்றில் அவருக்கான இடம் தீர்மானிக்கப்படுகிறது.

இலங்கையின் வரலாற்றிலும், சில தலைவர்கள் செய்த நற்செயல்களுக்காக போற்றப்படுகிறார்கள். இன்னும் சில தலைவர்கள் அவர்களின் மோசமான செயல்களாலும் நினைவு கூரப்படுகின்றார்கள்.

இவ்வாறான சூழலில் ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேன தனக்கான இடம் எது என்பதை உறுதிப்படுத்திக் கொள்வதற்கான தருணத்தில் இருக்கிறார் என்றே கூறவேண்டும்.

அடுத்த ஜனாதிபதித் தேர்தலில் அவர் போட்டியிடுவாரா இல்லையா என்பது தெளிவில்லை. அவ்வாறு போட்டியிட்டாலும், அவரால் வெற்றிபெற முடியுமா என்பதும் கேள்விக்குரிய விடயம் தான்.

இந்நிலையில் இப்போதுள்ள பதவிக்காலம் மாத்திரமே, தனக்கான இடத்தை அவர் உறுதிப்படுத்திக் கொள்வதற்கான உச்சமான காலகட்டமாக இருக்கும். அதிலும் கூட மூன்று ஆண்டுகள் கழிந்துவிட்டன. இந்தப் பதவிக்காலத்தை அவர் அனுபவிப்பதற்கு இன்னும் எஞ்சியிருப்பது, முழுமையாக 20 மாதங்கள் மட்டும்தான். அதற்குள் முடிந்ததைச் செய்யவேண்டும். சவால்களைச் சமாளித்து, பிரச்சினைக்குத் தீர்வு காணவேண்டும் என்பதே சம்பந்தனின் கோரிக்கை.

'தமிழ் மக்களின் பிரச்சினை தீர்க்கப்படாமல் இழுபறிக்குள்ளாவதற்கு இரண்டு பிரதான காரணங்கள் தடையாக இருந்து வந்திருக்கின்றன.

முதலாவது பிரச்சினையைத் தீர்க்கும் விருப்பம் இல்லாமை.

இரண்டாவது பிரச்சினையைத் தீர்க்கும் விருப்பம் கொண்ட தலைவர்களால்,அதனைத் தீர்க்கின்ற அரசியல் அதிகாரமும், ஆற்றலும் இல்லாமை.

கல்லைக் கண்டால் நாயைக் காணோம். நாயைக் கண்டால் கல்லைக் காணோம் என்று சொல்வதைப் போலத் தான் இது.

தமிழ் மக்களின் பிரச்சினைகளைப் புரிந்து கொண்டு அதனைத் தீர்த்து வைக்கின்ற விருப்பத்தைக் கொண்டிராத தலைவர்கள் தான் பெரும்பாலும் ஆட்சியில் இருந்திருக்கிறார்கள்.

அவர்கள், தம்மைச் சிங்கள மக்களின் தலைவர்களாக வரிந்து கொள்வதற்கே விரும்பினர். அவர்கள் சிங்கள

அவர்கள், தம்மைச் சிங்கள மக்களின் தலைவர்களாக வரிந்து கொள்வதற்கே விரும்பினர். அவர்கள் சிங்கள மக்களின் ஆதரவை தாம் அல்லது தமது கட்சி இழந்து விடக்கூடாது என்பதற்காகவே அவர்கள் செயற்பட்டார்கள். அந்த இலக்கை அடைவதற்காக, தமிழ் மக்களின் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதில் அக்கறை கொள்ளவில்லை.

தமிழர்களுடன் உரிமைகள் விடயத்தில் சமரசம் செய்து கொள்ள விரும்பாத சிங்களத் தலைவர்களாகவே பெரும்பாலானவர்கள் இருந்திருக்கிறார்கள். சிங்கள பௌத்த பேரினவாதத்தின் பிரதிநிதிகளாக இயங்கிய அவர்கள், தமிழர்கள் மீது போரையும், வன்முறைகளையும் கட்டவிழ்த்து விட்டு வேடிக்கை பார்த்தனர். இவர்கள் பிரச்சினையைத் தீர்க்க முனையவில்லை என்பதை விட, தீர்க்கின்ற அக்கறை கொண்டவர்களாக இருக்கவில்லை

( 43.ம் பக்கத் தொடர்ச்சி)

# தமிழ் மக்களின் உரிமைக்காகப் போராடும் கட்சிகள் ஒன்றாக செயற்பட வேண்டும் என யாழ். வணிகர் கழகம் வேண்டுகோள்

தமிழ் மக்களின் உரிமைக்காக போராடும் கட்சிகள் ஒன்றாக செயற்படுவதே எமக்குரிய தீர்வு கிடைப்பதற்கு வழிவகுக்கும். தமிழ்க்கட்சிகள் தமிழ் மக்களுக்கு அரசியல் தீர்வு கிடைக்கும் வரையாவது ஒன்றாக செயற்பட வேண்டும் எனத் தெரிவித்துள்ள யாழ்.வணிகர் கழகம் உள்ளூராட்சி சபையில் மக்கள் நலனைக் கருத்திற் கொண்டு ஒன்றாக செயற்பட வேண்டும் என வேண்டுகோள் விடுத்துள்ளது.

இது தொடர்பில் வணிகர் கழகம் விடுத்துள்ள அறிக்கையில்:

கடந்த உள்ளூராட்சி சபைத் தேர்தலிலே ஓரிரு சபைகளைவிட மற்றைய எந்தச் சபையிலும் எந்தக் கட்சியும் அறுதிப் பெரும்பான்மையைப் பெறமுடியாத நிலையில் கூடிய உறுப்பினர்களை பெற்ற கட்சி ஆட்சியமைக்க ஏனைய கட்சிகள் தங்கள் ஆதரவை நல்க வேண்டும் என்று எதிர்பார்க்கின்றோம். நாம் இது குறித்து தமிழ் மக்களின் உரிமைக்காகப் போராடும் தமிழ் கட்சிகளுடன் பேச்சுவார்த்தைகளை நடத்தியிருந்தோம். அந்த அடிப்படையில் செயற்படுவார்கள் என நாம் எதிர்பார்க்கின்றோம்.

எந்தக் கட்சி ஆட்சியமைத்தாலும் நாம் அதை வரவேற்கின்றோம். ஆனால் ஆட்சி அமைக்கும்போது இன்னோர் கட்சியின் முழு ஆதரவையும் பெற்று ஆட்சி அமைப்பதையே தமிழ் மக்கள் எதிர்பார்க்கின்றார்கள். அதை விடுத்து ஒரு கட்சியை உடைத்து அதில் சில உறுப்பினர்களின் ஆதரவைப் பெற்று ஆட்சியமைப்பது ஒரு ஆரோக்கியமான விடயம் அல்ல. அவ்வாறு அமைக்கப்படும் ஆட்சி ஒருபோதும் பலமான நிலையான ஆட்சியாக அமையப்பெறுவதும் இல்லை. இதனால் பாதிக்கப்பட்டபோவது சம்பந்தப்பட்ட கட்சிகளை விட தமிழ் மக்களே. எனவே எந்தவொரு கட்சியும் ஆட்சி அமைக்கும் விடயத்தில் தமிழ் மக்களின் நலனையே கவனத்தில் கொள்ளவேண்டும்.

உள்ளூராட்சி சபைகள் ஒழுங்கமைக்கப்பட்ட முறையிலும் நீதியான, நேர்மையான, ஆட்சியை நடத்துவதற்கு எல்லா உறுப்பினர்களும் ஒத்துழைப்பு வழங்கவேண்டும். கடந்த தேர்தலில் வடமாகாணத்தில் தமிழ் மக்களின் உரிமைக்காக போராடும் கட்சிகளுக்கு அப்பால் தேசிய கட்சிகள் இங்கே கணிசமான வாக்குகளைப் பெற்றிருப்பது எதிர்காலத்தில் எமது தமிழ் மக்களின் உரிமைகளை வென்றெடுப்பதில் சில பாதிப்புக்களை ஏற்படுத்தும். தேசிய கட்சிகளின் வளர்ச்சி தமிழ் மக்களின் 70 ஆண்டுகால உரிமை போராட்டத்திற்கு பாரிய பின்னடைவை ஏற்படுத்தும். தமிழ் மக்களுக்கு நல்லதோர் தீர்வு கிடைக்க வேண்டும் என்னும் ஒரே நோக்கத்திற்காக தமிழ் மக்களின் உரிமைக்காக போராடும் கட்சிகள் ஒன்றாக செயற்படுவதே எமக்குரிய தீர்வு கிடைப்பதற்கு வழிவகுக்கும்.

தமிழ் மக்களைப் பொறுத்தவரை ஒருபுறம் தமக்குரிய உரிமைக்காக போராடுவதற்கு ஆதரவு வழங்குவதுடன் மறுபுறம் தங்களுடைய வாழ்வாதாரம் வேலை வாய்ப்பு போன்றவற்றையும் எதிர்பார்த்து நிற்கிறார்கள். இதை கடந்த காலங்களில் பல தமிழ் கட்சிகள் செய்யத் தவறியுள்ளன. வேலை வாய்ப்பிற்காகவும் வாழ்வாதாரத்திற்காகவும் தமிழ் மக்கள் தேசிய கட்சிகளை ஆதரிப்பதை கடந்த தேர்தலின் முடிவுகள் வெளிப்படுத்தியுள்ளன.

ஆகையால் எதிர்காலத்தில் தமிழ் கட்சிகள் தமிழ் மக்களுடைய உரிமைக்காக போராடுவதுடன் அவர்களுடைய வாழ்வாதாரம் வேலைவாய்பு பொருளாதார அபிவிருத்தி இவைகளிலும் கவனம் செலுத்த வேண்டும் என நாம் எதிர்பார்க்கின்றோம். உள்ளூராட்சி சபைகளில் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளும் கட்சிகள் இந்த விடயங்களை கவனத்தில் எடுத்து ஒற்றுமையாகவும் தமிழ் மக்கள் நன்மை அளிக்கும் விதத்திலும் செயற்பட வேண்டும் என தெரிவிக்கப்பட்டுள்ளது.

(42.........ம் பக்கத் தொடர்ச்சி)

## எளிதில் கிடைத்த ஜனாதிபதிப் பதவி மூலம், எளிமையானவரான மைத்திரி எதுவும் செய்யாமல் இருப்பது ஏன்?

என்று கூறுவதே பொருத்தம். இவர்களுடன் ஒப்பீடு செய்கின்ற போது ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேன, எந்த வகைக்குள் அடக்கப்படக் கூடியவர் என்பதை அவர் ஆட்சியில் இருக்கப் போகும், எஞ்சிய 20 மாதங்கள் தான் உறுதி செய்யப் போகிறது.

தமிழ் மக்களின் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் விருப்பம் அவருக்கு இருப்பதாக தாம் அறிகிறோம் என்று இரா.சம்பந்தன் கூறியிருக்கிறார். ஜனாதிபதியுடனான உரையாடல்களில், அவரது நடத்தைகளின் மூலம், அவர் அதனை உணர்ந்து கொண்டிருக்கலாம்.

எனினும், அவருக்குள் இருக்கின்ற விருப்பம் மாத்திரம், தீர்வாக அமையாது. அதுமாத்திரமே தமிழ் மக்களின் பிரச்சினைகளுக்குத் தீர்வைத் தராது. தீர்வை அடைவதற்கான முழுமையான அர்ப்பணிப்பும், ஈடுபாடும் முக்கியம்.

அவையிரண்டும் எந்தளவுக்கு ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேனவிடம் இருக்கிறது என்பது தான் கேள்வி.

இந்த ஈடுபாடும் அர்ப்பணிப்பும் இருந்தால் மாத்திரம் தீர்வு கண்டுவிட முடியாது என்பதையும் ஒப்புக் கொள்ளத் தான் வேண்டும்.

ஏனென்றால், பேரினவாத சக்திகள், போட்டி அரசியல் தலைமைகள், கட்சி அரசியல் நலன்கள் என்று ஏகப்பட்ட சவால்களும், தடைகளும் அதற்கு முன்னால் இருக்கும். அதனைக் கடப்பது அடுத்துள்ள மிகப்பெரிய சவாலாக இருக்கும்.

ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேனவைப் பொறுத்தவரையில் பிரச்சினையைத் தீர்க்கும் விருப்பத்தைக் கொண்டவராக மாத்திரம் இருப்பதால் பயனில்லை.

அதற்கும் அப்பால், தன்முன்பாக உள்ள சவால்களை எதிர்கொள்ளும் துணிச்சலும், தைரியமும் அவருக்குத் தேவைப்படுகிறது. எது நடந்தாலும், அதனை எதிர்கொள்வேன் என்ற உளவுரண் அவருக்கும் முக்கியம் என்பதே தற்போதைய தேவை.

## கடலில் மிதந்து வந்த போத்தலில் உள்ளது மதுபானம் என நினைத்து அதை அருந்திய மீனவர் உயிரிழப்பு

கடலில் மிதந்து வந்த போத்தலில் இருந்த நஞ்சு திரவத்தை மதுபானம் என நினைத்து அருந்தியதால், தென்பகுதி மீனவர் ஒருவர் பரிதாபமாக உயிரிழந்துள்ளார். நீர்கொழும்பை சேர்ந்த வீரசிறிகே அன்ரனி பிலிப்குமார் நிமால் ஸ்ரீபெர்னான்டோ (வயது63) என்ற மீனவரே மேற் படி உயிரிழந்தவராவார் நீர்கொழும்பில் இருந்து முல்லைத்தீவு கொக்கிளாய் பகுதிக்கு கடந்த 21 ஆம் திகதி 10க்கும் மேற்பட்ட மீனவர்கள் சென்றுள்ளார்கள். அவர்களில் சிலர் கடலில் மீன்பிடிப்பதற்கு சென்றுள்ளனர். சிலர் வாடியை சுத்தம் செய்து கொண்டிருந்துள்ளனர்.

கடலுக்கு மீன்பிடிக்க சென்றவர்கள் திரும்பி வரும்போது கடலில் மிதந்து வந்த போத்தல் ஒன்றை கொண்டுவந்துள்ளனர். அதற்குள் இருந்த திரவத்தை மதுபானம் என நினைத்து 7 பேர் அருந்தியுள்ளனர். சற்று நேரத்தில் அவர்கள் மயக்க நிலையை உணர்ந்ததுடன் அதில் இருவர் மயங்கிய நிலையில் கொக்குளாய் வைத்திய சாலைக்கு கொண்டு செல்லப்பட்டனர். மேற்குறித்த நபர் மேலதிக சிகிச்சைக் காக மாஞ்சோலை வைத்தியசாலைக்கு கொண்டு செல்லப்பட்டு கடந்த 23 ஆம் திகதி யாழ் போதனா வைத்தியசாலைக்கு கொண்டு செல்லப்பட்டார். ஆனால் குறித்த நபர் சிகிச்சை பலனின்றி நேற்று முன்தினம் புதன்கிழமை உயிரிழந்துள்ளார்.

## இங்கிலாந்தின் லண்டனில் 12 நாட்களில் 10 பேர் கொலை செய்யப்பட்டமை தொடர்பாக மெற்றோபொலிடன் பொலிசார் அதிர்ச்சி

இங்கிலாந்தின் லண்டனில் பெரும் 12 நாட்களில் 10 பேர் கொலை செய்யப்பட்டமை தொடர்பாக மெற்றோ பொலிடன் பொலிசார் அதிர்ச்சியடைந்துள்ளதாக ஊடகங்களுக்குத் தெரிவித்துள்ளனர்.

இவற்றில் 90 சதவிகிதமானவை கத்திக் குத்து சம்பங்களே ஆகும். லண்டன் வீதிகளில் பல குண்டர்கள் உலவி வருகிறார்கள். அவர்கள் கைகளில் இருக்கும் ஒரே ஆயுதம் கத்தி தான். இவர்கள் தனி நபர்களாக இல்லையேல் குழுக்களாக உலவி வருகிறார்கள் என்றும். கஞ்சா முதல் கொண்டு சகல போதைப் பொருட்களை இவர்கள் விற்று வருகிறார்கள். இதனால் இவர்களுக்கு இடையே கொடுக்கல் வாங்கல் தொடர்பாக அடிக்கடி சண்டை நடக்கிறது. இதில் ஒருவர் பலியாவது சகஜமாகி விட்டது என்கிறார்கள் பொலிசார். தமிழர்கள் அதிகமாக வாழும் சவுத்ஹால் பகுதி முதல் கொண்டு பல நகரங்களில் வீதிகள் பாதுகாப்பு அற்ற இடமாக மாறி வருகிறது. காலை நேரம் இரவு நேரம் என்று எந்த நேரம் வேண்டுமானாலும் எதுவும் நடக்கலாம் என்ற நிலை தோன்றியுள்ளது. பெருகிவரும் இக் கொலைச் சம்பவங்களால் பல பெற்றோர் தமது இள வயது பிள்ளைகளை வெளியே அனுப்ப, மிகுந்த அச்சமடைந்து வருகிறார்கள் என்று அங்கிருந்து கிடைக்கும் தகவல்கள் தெரிவிக்கின்றன.

## சாவகச்சேரி வீதியில் கிடந்த தென்னோலை சறுக்கி மோட்டார் சைக்கிளில் சென்ற குடும்பபெண் உயிரிழப்பு

வீதியில் போடப்பட்டிருந்த தென்னை ஓலை சறுக்கி விபத்துக்குள்ளான குடும்ப பெண் ஒருவர் மூன்று மணி நேரத்தின் பின் சிகிச்சை பலனின்றி யாழ் போதனா வைத்தியசாலையில் உயிரிழந்துள்ளார். சாவகச்சேரி, மட்டுவில் தெற்கை சேர்ந்த இரண்டு பிள்ளைகளின் தாயான விஜயானந்தன் சசிகலா (வயது 53) என்பவரே மேற்படி உயிரிழந்தவராவார். மட்டுவில் பன்றித்தலைச்சி அம்மன் ஆலயத்தில் திருவிழா நிகழ்வுக்காக நேற்று முன்தினம் புதன்கிழமை அதிகாலை 5 மணியளவில் மேற்குறித்த பெண் தனது கணவனுடன் மோட்டார் சைக்கிளில் சென்றுள்ளார். ஆலயத்துக்கு செல்லும் வழியில் தண்ணீர் பந்தலை அலங்கரிக்கும் வேலையில் சிலர் ஈடுபட்டிருந்துள்ளனர். அப்போது வீதிக்கு குறுக்கே தென்னை ஓலையும் போடப்பட்டிருந்தது.

இவர்கள் தண்ணீர்ப்பந்தல் அருகே வரும் போது எதிரே அதிக வெளிச்சத்துடன் கார் ஒன்று வந்துள்ளது. அப்போது குறித்த பெண்ணின் கணவர் சற்று நிலை தடுமாறியதும் வீதியில் இருந்த தென்னை ஓலையில் சறுக்கி இரு வரும் மோட்டார் சைக்கிளில் இருந்து கீழே விழுந்துள்ளனர். இந்த விபத்தில் மேற்குறித்த பெண்ணின் தலையில் பாரிய காயம் ஏற்பட்டதுடன் கணவனுக்கும் சிறிது காயம் ஏற்பட்டது. உடனடியாக அங்கு நின்ற இளைஞர்கள், இருவரையும் சாவகச்சேரி வைத்தியசாலைக்கு கொண்டு சென்று அனுமதித்தனர். மேலதிக சிகிச்சைக்காக குறித்த பெண் யாழ் போதனா வைத்தியசாலைக்கு அனுப்பப்பட்டார். ஆனால் காலை 8.00 மணியளவில் குறித்த பெண் சிகிச்சை பலனின்றி உயிரிழந்துள்ளார்.

## வடக்கில் விசேட தேவையுடையவர்களுக்கு மலசல கூடங்களை அமைப்பதற்கு நிதியுதவி

வடமாகாணத்திலுள்ள விசேட தேவையுடையவர்களுக்கான 70 மலசல கூடங்களை அமைப்பதற்கான நிதி கிடைக்கப் பெற்றுள்ளதாக வடமாகாண மகளிர் விவகார அமைச்சு தெரிவித்துள்ளது. இது தொடர்பில் மேலும் தெரிவிக்கப்பட்டுள்ளதாவது:

வடக்கு மாகாணத்தில் இவ்வாண்டு 70 மலசல கூடங்கள் அமைப்பதற்கான நிதி கிடைக்கப் பெற்றுள்ளது. வடக்கு மாகாணத்தில் சிறப்புத் தேவைக்குரியவர்களுக்கான மலசலகூடங்கள் அமைக்கும் பணிகள் கடந்த 2015ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டன. இதற்காக குறைந்தளவு நிதியே வருடாந்தம் அமைச்சுக்கு கிடைத்திருக்கின்றது.

இந்த நிதியில் வேலைகள் ஆரம்பிக்கப்பட்டாலும் முழுமையான நிதி கிடைப்பதற்கு காலதாமதம் ஆவதால் ஒரு ஆண்டில் ஆரம்பிக்கப்படும் வேலைகள் அந்த ஆண்டிலேயே முழுமை பெறும் நிலை ஏற்படுகின்றது. இதுவரை 570 மலசல கூடங்கள் அமைத்துக் கொடுக்கப்பட்டுள்ளன.








# காவிரி பிரச்சினையில் மத்திய அரசின் துரோகத்தை தமிழக மக்கள் மன்னிக்க மாட்டார்கள் : ராமதாஸ்



காவிரிப் பிரச்சினையில் மத்திய, மாநில அரசுகள் கூட்டணி அமைத்துக் கொண்டு இழைத்த துரோகத்தை தமிழக மக்கள் மறக்கவோ, மன்னிக்கவோ மாட்டார்கள். எனவே, மக்களை ஏமாற்றுவதை விடுத்து உச்ச நீதிமன்றம் விதித்த கெடு இன்று இரவுடன் முடிவடைவதற்குள் காவிரி மேலாண்மை வாரியத்தை அமைக்க மத்திய அரசு முன்வர வேண்டும் என பாமக நிறுவனர் ராமதாஸ் வலியுறுத்தியுள்ளார். இது தொடர்பாக அவர் வெளியிட்டுள்ள அறிக்கையில், “காவிரி நடுவர் மன்றத் தீர்ப்பை செயல்படுத்துவதற்கான காவிரி மேலாண்மை வாரியத்தை அமைக்க உச்ச நீதிமன்றம் அளித்த கெடு இன்றுடன் முடிவடையும் நிலையில், உச்ச நீதிமன்றத்தின் தீர்ப்பு குறித்து விளக்கம் கேட்டு புதிய மனு தாக்கல் செய்யப்போவதாக மத்திய அரசு அறிவித்திருக்கிறது. கடைந்தெடுத்த மோசடி என்பதற்கு மத்திய அரசின் இந்த நடவடிக்கையை விட சிறந்த உதாரணம் வேறு எதுவுமில்லை.

காவிரிப் பிரச்சினை தொடர்பான வழக்கில் உச்ச நீதிமன்றம் கடந்த பிப்ரவரி மாதம் 16ஆம் தேதி தீர்ப்பளித்தது. அதில் காவிரி நடுவர் மன்ற இறுதித்தீர்ப்பை செயல்படுத்துவதற்கான அமைப்பை (ஸ்கீம்) உருவாக்க அடுத்த ஆறு வாரங்களில் அமைக்க வேண்டும் என்று மத்திய அரசுக்கு உச்ச நீதிமன்றம் ஆணையிட்டிருந்தது. காவிரி நடுவர் மன்ற இறுதித் தீர்ப்பின் பல இடங்களில் ஸ்கீம் என்று தான் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஸ்கீம் என்பதே காவிரி மேலாண்மை வாரியம் தான் என்பதை நடுவர் மன்ற இறுதித் தீர்ப்பின் 216 முதல் 236 வரை நீளும் எட்டாவது அத்தியாயத்தை முழுமையாகப் படித்தால் உணர்ந்து கொள்ள முடியும். இதற்கெல்லாம் மேலாக பிப்ரவரி 16ஆம் தேதி உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்த வழக்கில் தமிழகத்தின் கோரிக்கையே காவிரி மேலாண்மை வாரியம் அமைக்க வேண்டும் என்பது தான். அவ்வாறு இருக்கும் போது உச்ச நீதிமன்றம் குறிப்பிட்டுள்ள ஸ்கீம் என்பது மேலாண்மை வாரியம் என்பதைத் தவிர வேறு என்னவாக இருக்க முடியும்? ஒருவேளை இதில் மத்திய அரசுக்கு ஏதேனும் ஐயம் இருந்தாலும் கூட தீர்ப்பு வெளியான சில நாட்களிலேயே உச்ச நீதிமன்றத்திடம் மத்திய அரசு விளக்கம் கேட்டிருக்க முடியும். ஆனால், ஆறு வாரங்கள் அமைதியாக இருந்து விட்டு, இப்போது உச்ச நீதிமன்றத்தை அணுகுவது நம்பவைத்து கழுத்தை அறுக்கும் செயலாகத்தானே இருக்க முடியும்.

கர்நாடகத்தில் சட்டப்பேரவைத் தேர்தல் அறிவிக்கப்பட்டுவிட்ட நிலையில், அங்கு அரசியல் லாபம் தேடும் நோக்குடன்தான் காவிரி மேலாண்மை வாரியத்தை அமைக்க மத்திய பாரதிய ஜனதா அரசு மறுக்கிறது. அதேநேரத்தில் இந்த விஷயத்தில் உச்ச நீதிமன்றத்தின் கண்டனத்திற்கு ஆளாகிவிடக் கூடாது என்பதற்காகத் தான் இப்போது விளக்கம் கேட்கும் மனுவை தாக்கல் செய்ய மத்திய அரசு தீர்மானித்துள்ளது. உச்ச நீதிமன்றத் தீர்ப்பின்படி அமைக்கப்பட வேண்டியது காவிரி மேலாண்மை வாரியமா? ஸ்கீமா? என்பது தொடர்பாக மத்திய அரசுக்கு எந்தக் குழப்பமும் இல்லை; இவ்விஷயத்தில் மத்திய அரசு கடைபிடிப்பது காலம் கடத்தும் அணுகுமுறை தான் என்பதற்கு ஆயிரம் உதாரணங்களைக் கூற முடியும்.

காவிரி மேலாண்மை வாரியம் குறித்த விஷயத்தில் மத்திய அரசு முதன் முதலில் கருத்துக் கூறியது பிப்ரவரி 27ஆம் தேதி தான். தி இந்து ஆங்கில நாளிதழில் வெளியாகியிருந்த மத்திய நீர்வளத்துறை அமைச்சர் நிதின் கட்கரியின் சிறப்பு நேர்காணலில் ஒரு இடத்தில் கூட ஸ்கீம் என்று குறிப்பிடவில்லை; காவிரி மேலாண்மை வாரியம் என்று தான் குறிப்பிட்டிருந்தார். அதன்பின் மார்ச் 9ஆம் தேதி தில்லியில் நடைபெற்ற மாநில தலைமைச் செயலாளர்கள் கூட்டத்தில் காவிரி மேலாண்மை வாரியம் அமைக்கும்படி உச்ச நீதிமன்றத் தீர்ப்பில் எந்த இடத்திலும் குறிப்பிடப்படவில்லை என்று கர்நாடகம் எதிர்ப்பு தெரிவித்த போதிலும் கூட, ''இந்தப் பிரச்சினைக்கு மற்ற 3 மாநிலங்களின் கருத்துக்களைக் கேட்டு முடிவெடுக்கப் படும். இதற்காக உச்சநீதிமன்றத்தை அணுகும் எண்ணம் மத்திய அரசுக்கு இல்லை'' என்று தான் மத்திய நீர்வளத்துறை செயலாளர் உபேந்திர பிரசாத் சிங் விளக்கமளித்திருந்தார். கடைசியாக நேற்று முன்நாள் நியூஸ்18 தமிழ்நாடு தொலைக்காட்சிக்கு சிறப்பு நேர்காணல் அளித்த அவர்,'' காவிரி ஸ்கீம் என்பதும், காவிரி மேலாண்மை வாரியம் என்பதும் வேறு வேறல்ல. இரண்டும் ஒன்று தான்'' என்று தெளிவாக குறிப்பிட்டிருந்தார். ஆனால், அடுத்த 2 நாட்களுக்குள் எல்லா தெளிவும் விலகி, குழப்பம் சூழ்ந்து விட்டதைப் போல உச்ச நீதிமன்றத்திடம் விளக்கம் கேட்கப் போவதாக மத்திய அரசு கூறுவதைப் பார்க்கும் போது, '' நல்ல நாடகம் நடக்குது'' என்பதை உணர்ந்து நொந்து கொள்வதைத் தவிர வேறு வழியில்லை.

காவிரிப் பிரச்சினையில் மத்திய அரசின் துரோகத்திற்கு சற்றும் குறையாதது மாநில அரசின் துரோகம். காவிரி மேலாண்மை வாரியம் அமைக்க வேண்டும் என்ற உச்சநீதிமன்றத் தீர்ப்பை வரவேற்று பிப்ரவரி 16ஆம் தேதி வெளியிட்ட அறிக்கையிலேயே, காவிரி மேலாண்மை வாரியத்தை அமைக்காமல் இருக்க மத்திய ஆட்சியாளர்கள் முயலக்கூடும் என்பதால், மத்திய அரசுக்கு கடுமையான அழுத்தம் கொடுக்க வேண்டும் என்று வலியுறுத்தியிருந்தேன். ஆனால், தமிழகத்தை மத்திய அரசு ஏமாற்றுகிறது என்பதும், துரோகம் செய்கிறது என்பதும் நன்றாகத் தெரிந்தும் அதற்கு எதிராக வாயைத் திறப்பதற்குக்கூட தமிழக ஆட்சியாளர்கள் தயாராக இல்லை. மாறாக சொல்லிக் கொடுக்கப்பட்ட கிளிப்பிள்ளையைப் போல, ''உச்சநீதிமன்றம் கொடுத்த அவகாசம் முடியும் வரை காத்திருப்போம்'' என்பதையே மீண்டும், மீண்டும் கூறி வந்தனர். உச்சநீதிமன்றத்தின் தீர்ப்பை செயல்படுத்த வலியுறுத்தி நாடாளுமன்ற, சட்டமன்ற உறுப்பினர்கள் பதவி விலகி மத்திய அரசுக்கு அழுத்தம் தரலாம் என்ற யோசனை அவர்களின் காதுகளில் விழவில்லை. உச்சநீதிமன்றம் விதித்தக் கெடு இன்றுடன் முடிவடைந்து விட்ட நிலையில் நாளைக்கு ஆட்சியாளர்கள் என்ன செய்யப்போகிறார்கள்? நீதிமன்ற அவமதிப்பு வழக்கு தொடர்ந்து விட்டு அமைதியாக ஊழல் செய்வதைத் தவிர வேறு எதுவும் செய்ய மாட்டார்கள். இவர்கள் தான் தமிழகத்தின் சாபம். காவிரிப் பிரச்சினையில் மத்திய, மாநில அரசுகள் கூட்டணி அமைத்துக் கொண்டு இழைத்த துரோகத்தை தமிழக மக்கள் மறக்கவோ, மன்னிக்கவோ மாட்டார்கள். எனவே, உச் சநீதிமன்றத்தில் விளக்க மனு தாக்கல் செய்து மக்களை ஏமாற்றுவதை விடுத்து உச்ச நீதிமன்றம் விதித்த கெடு இன்று இரவுடன் முடிவடைவதற்குள் காவிரி மேலாண்மை வாரியத்தை அமைக்க மத்திய அரசு முன்வர வேண்டும்“. இவ்வாறு அவர் கூறியுள்ளார்.

## நவபாஷாண சிலையை கடத்த முயற்சி நடந்ததா?: சிலை கடத்தல் தடுப்பு போலீஸார் பழநியில் விசாரணை



திண்டுக்கல் மாவட்டம் பழநியில் புதிய சிலை பிரதிஷ்டை செய்ததில் நடந்த முறைகேடு குறித்து விசாரணை நடத்த சிலை கடத்தல் தடுப்புப் பிரிவு போலீஸார் நேற்று பழநி வந்தனர். மேலும், பல ஆயிரம் ஆண்டுகள் பழமையான நவபாஷாண சிலையைக் கடத்த முயற்சி நடந்ததா என்ற கோணத்திலும் விசாரணை நடத்தினர். முருகப் பெருமானின் மூன்றாம் படை வீடான பழநி தண்டாயுதபாணி சுவாமி மலைக் கோயிலில் 2004ல் கருவறையில் உள்ள நவபாஷாண சிலையை மறைத்து புதிய சிலை பிரதிஷ்டை செய்யப்பட்டது. நவபாஷாண சிலையை மறைத்து வைத்ததற்கு பக்தர்களிடம் கடும் எதிர்ப்பு கிளம்பியதாலும் இந்த சிலை அகற்றப்பட்டது.

இந்நிலையில் சிலையை செய்வதற்கு வழங்கப்பட்ட தங்கம் முழுமையாக பயன்படுத்தப்படாமல் முறைகேடு நடந்தது தெரியவந்துள்ளது. இதையடுத்து ஸ்தபதி முத்தையா, கோயிலின் முன்னாள் இணை ஆணையர் கே.கே.ராஜா ஆகியோரை போலீஸார் கைது செய்தனர். இந்நிலையில் சிலை கடத்தல் தடுப்புப் பிரிவு டிஎஸ்பி கருணாகரன், இன்ஸ்பெக்டர் கார்த்திகேயன், ஒரு எஸ்ஐ, தலைமைக்காவலர் ஆகியோர் நேற்று பழநி வந்தனர். கோயில் இணை ஆணையர் செல்வராஜ், போலீஸார் தங்கியிருந்த பொதுப்பணித்துறை விடுதிக்குச் சென்றுபேசினார். பங்குனி உத்திரத் திருவிழா நிறைவடைந்த பிறகு போலீஸ் விசாரணை தீவிரம் அடையும் எனத் தெரிகிறது. ஐந்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு போகர் எனும் சித்தரால் 9 மூலிகைகளை கொண்டு வடிவமைக்கப்பட்ட நவபாஷாண சிலைக்கு வெளிநாடுகளில் பல ஆயிரம் கோடி ரூபாய் மதிப்புள்ளது என்று போலீஸார் கூறுகின்றனர். புதிய சிலை செய்ததில் நடந்த முறைகேடு மட்டுமின்றி, நவபாஷாண சிலையை கடத்த முயற்சி நடந்ததா என்ற கோணத்திலும் போலீஸார் விசாரணை நடத்த முடிவு செய்துள்ளனர்.

# தமிழ்த் தேசியத்தை அழித்துவிட முடியாது என்கிறார் இவர்

தமிழ்த் தேசியத்தை ஒரு போதும் அழித்து விடமுடியாது. பொய் பிரச்சாரங்களை முறியடித்து தமிழ்த் தேசிய கூட்டமைப்பு உள்ளூராட்சி மன்றத் தேர்தலில் வட கிழக்கு மாகாணங்களில் வெற்றிபெற்றது என்று தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் மட்டக்களப்பு மாவட்ட பாராளுமன்ற உறுப்பினர் ஞா.ஸ்ரீநேசன் தெரிவித்தார். மட்டக்களப்பு, அம்பாறை மாவட்டங்களில் இருந்து உள்ளூராட்சி மன்றங்களுக்கு தெரிவு செய்யப்பட்ட தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் உறுப்பினர்கள் சத்தியப்பிரமாணம் செய்யும் வைபத்தில் தலைமையுரை நிகழ்த்தும் போதே அவர் மேற்கண்டவாறு கூறினார்.

மட்டக்களப்பு, தேவநாயகம் மண்டபத்தில் செவ்வாய்க்கிழமை நடைபெற்ற இந்த வைபவத்தில் தொடர்ந்து உரையாற்றிய அவர்:

தமிழ்த் தேசியத்தை உடைத்தெறிய வேண்டும். தமிழ் தேசிய வாக்குகளை இல்லாமல் செய்யவேண்டும். தமிழ் தேசியத்துக்கு குழிதோண்ட வேண்டும் தமிழ்த் தேசிய உணர்வாளர்களை புண்படுத்த வேண்டும் என்று பொய்ப்பிரசாரங்களின் பீரங்கிகளாக செயற்பட்டவர்கள் மக்களால் நிராகரிக்கப்பட்டார்கள். மக்கள் அவர்களுக்கு சரியான பாடத்தினை புகட்டியுள்ளார்கள்.

பொய் பிரசாரங்களை முறியடித்து தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு உள்ளூராட்சி மன்ற தேர்தலில் வடக்கு, கிழக்கு மாகாணங்களில் வெற்றிபெற்றது. சொந்த செல்வாக்கின்ற மூலமும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் செல்வாக்கிலும் இந்த தேர்தலில் வெற்றி பெற்றுள்ளீர்கள்.

கட்சிக் கொள்கை சமூகத்தோடு நீங்கள் கொண்டிருந்த அக்கறை இவையனைத்தும் உங்களை வெற்றிபெறச் செய்துள்ளது. எத்தனையோ தந்திரோபாங்கள் சதிகள் இவைகளுக்கு மத்தியில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பில் போட்டியிட்டு வெற்றி பெற்றீர்கள்.

மக்கள் மத்தியில் எந்தளவு செல்வாக்கு செலுத்தியுள்ளீர்கள். இரண்டறக் கலந்திருக்கிறீர்கள் என்பதை நீங்கள் பெற்ற வாக்குகள். வெற்றிகள் அதற்கான சாட்சிமாக அமைந்திருக்கின்றது. அதேவேளை நடந்து முடிந்த உள்ளூராட்சி தேர்தலை பொறுத்த வரைக்கும் பல பொய்ப்பிரச்சாரங்கள், கட்டுக்கதைகள் பரப்பிவிடப்பட்டு உபாயங்களை எல்லாம் வகுக்கப்பட்டிருந்தன.

சில வேட்பாளர்களுக்கு அளவுக்கதிகமான விளம்பரங்கள் கொடுக்கப்பட்டிருந்தன. அதேவேளை பொய்களுக்கு கொடுக்கப்பட்ட முக்கியத்துவங்கள் உண்மைகளுக்கு கொடுக்கப்படவில்லை. மட்டக்களப்பில் ஒரு வேட்பாளருக்கு கொடுக்கப்பட்ட விளம்பரம் மாத்திரம் ஒரு கோடி ரூபாவுக்கு மேல் அதிகமான பணத்தினை கொட்டி அந்த விளம்பரம் கொடுக்கப்பட்டிந்தது.

அந்த வேட்பாளருக்கு எத்தனை வாக்குகள் கிடைத்தன என்று நான் விசாரித்த போது ஆக 15 வாக்குகளைத்தான் அந்த அதீதமான பிரசாரங்கள் செய்தவருக்கு கிடைத்தது என்பதை பார்க்கின்ற போது மக்கள் எந்தளவு இந்தப் பொய் பிரசாரங்களுக்கு சாட்டை அடி கொடுத்துள்ளார்கள் என்பதை விளங்கிக் கொள்ளமுடியும். சிலருக்கு சில பொய்கள், தற்காலிக வெற்றியினை கொடுத்திருக்கலாம்.

பொய்கள் ஒருபோதும் நிரந்தரமான வெற்றியைப் பெற்றுத்தராது. பொய்யர்களுக்கும் பொய்களுக்கும் முக்கியத்துவம் கொடுப்பவர்களுக்கு மக்கள் பிரதிநிதிகளான நீங்கள் செய்யும் பணிகள் சேவைகள் ஒரு பாடமாக அமைய வேண்டும் என்றார்.

# "ஆட்சி செய்யும் அரசாங்கங்கள் காலத்தை இழுத்தடிப்பு செய்கின்றன"

## ஜெனிவாவில் சட்டத்தரணி சுகாஷ்

இலங்கையை மாறி மாறி ஆட்சி செய்து வருகின்ற அரசாங்கங்கள் தமிழ் மக்களது நீண்ட கால இனப்பிரச்சினை தொடர்பில் காலத்தைக் கடத்தும் செயற்பாட்டில் ஈடுபடுகின்றதே தவிர பாதிக்கப்பட்ட மக்களுக்கு நீதியை பெற்றுக்கொடுக்க முன்வரவில்லை என சட்டத்தரணியும் தமிழ்த் தேசிய மக்கள் முன்னணியின் அமைப்பாளருமான க.சுகாஷ் தெரிவித்துள்ளார். ஜெனீவாவில் இடம்பெற்று வரும் ஐக்கிய நாடுகள் மனிதவுரிமை பேரவையின் 37ஆவது கூட்டத்தொடரில் பங்குபற்றி பிரதான அமர்வில் உரையாற்றும்போதே அவர் இதனைத் தெரிவித்துள்ளார். மேலும் அங்கு அவர் உரையாற்றுகையில்:

இலங்கையை மாறி மாறி ஆட்சி செய்த ஆளும் அரசாங்கங்கள் காலத்தைக் கடத்தும் உத்தியை கையாளுகின்றனரே தவிர பாதிக்கப்பட்ட மக்களுக்கு நீதியை வழங்க முன்வரவில்லை. இலங்கையில் உருவாக்கப்பட்ட காணாமலாக்கப்பட்டோருக்கான அலுவலகம் ஒரு கண்துடைப்பே தவிர அது பாதிக்கப்பட்டோருக்கு ஒருபோதும் நீதியை வழங்கப்போவதில்லை.

கடத்தப்பட்டவர்கள் மற்றும் வலுக்கட்டாயமாக காணாமலாக்கப்பட்டோரின் உறவுகள் கையறு நிலையில் அனைவரிலும் நம்பிக்கை இழந்து கடைசிக்கட்டமாக தமக்கான நீதியைத் தாமே தேடி கடந்த ஒரு வருடத்திற்கும் மேலாக வீதிகளிலே இறங்கி சொல்லொணாத்துன்பங்களுக்கு மத்தியில் போராடிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவர்களின் ஜனநாயகக் கோரிக்கைக்கு இற்றைவரை இலங்கை அரசிடமிருந்து சாதகமான பதிலெதுவும் கிடைக்கவில்லை. வலுக்கட்டாயமாக காணமலாக்கப்படுதலைக் குற்றமாக்கும் வகையில் உருவாக்கப்படும் சட்டங்கள் கூட கடந்த காலத்தில் இடம்பெற்ற காணாமலாக்கப்பட்ட சம்பவங்களை உள்ளடக்காது எதிர்காலத்தில் இடம்பெறப்போகும் சம்பவங்களை மட்டுமே ஆராயக் கூடிய வகையில் சர்வதேசத்தையும் பாதிக்கப்பட்டோரையும் ஏமாற்றும் வகையில் கொண்டுவரப்படுகின்றது. இலங்கை அரசாங்கம் ஐக்கிய நாடுகள் மனித உரிமைகள் பேரவைக்கும் சர்வதேச சமூகத்திற்கும் வழங்கிய வாக்குறுதிகளை நிறைவேற்ற எவ்வித ஆக்கபூர்வமான நடவடிக்கைகளையும் எடுக்காததுடன் தொடர்ச்சியாக மனித உரிமைகளை மீறி வருவதனால் தமிழ் மக்களின் சுயநிர்ணய உரிமையை சர்வதேசமும் ஐக்கிய நாடுகள் மனித உரிமைகள் பேரவையும் அங்கீகரிக்கின்ற அதேவேளை பாதிக்கப்பட்ட ஈழத்தமிழர்களுக்கு நீதி கிடைக்கும் முகமாக சர்வதேச விசாரணைக்கான கதவுகளைத் திறக்க வேண்டும் என்றார்.

# புருட்ஸ் கபி FRUITS HABY

## மாபெரும் 9ஆவது மலிவு விற்பனை
## தொடக்கம் 01-04-2018 - 30-04-2018 வரை

| Qty | Item | Price |
|---|---|---|
| 8 Lbs | குத்தரிசி | $ 4.99 |
| 8 Lbs | குத்தரிசி .. ‹‹Uruthira/ Vaaniy›› | $ 5.99 |
| 8 Lbs | இட்லி அரிசி / சம்பா அரிசி | $ 5.99 |
| 8 Lbs | சிவப்பு பச்சை அரிசி | $ 5.99 |
| 8 Lbs | பசுமதி அரிசி ...‹‹Ajantha›› | $ 5.99 |
| 8 Lbs | பசுமதி அரிசி ...‹‹Wah›› | $ 4.99 |
| 40 Lbs | பசுமதி அரிசி ...‹‹Bano›› | $ ??? |
| 750 ml | நல்லெண்ணை | $ 4.99 |
| 1 L | நல்லெண்ணை .‹‹Niru /இதயம்›› | $ 5.99 |
| 300 g | தேங்காய் பால் பவுடர் .‹‹Maggi›› | $ 4.49 |
| 900 g | மிளகாய்த்தூள் .....‹‹Vaaniy›› | $ 5.99 |

| Qty | Item | Price |
|---|---|---|
| Eh | தேங்காய் | $ 1.49 |
| Lbs | கஜு | $ 7.99 |
| Lbs | பிளம்ஸ் ......‹black› | $ 1.49 |
| 800 ml | Mango Pulp (6) .‹‹Noori›› | $ 3.99 |
| 200 g | நெத்தலி | $ 1.99 |
| 400 g | Noodles ....‹‹Ceylon›› | $ 1.79 |
| 1 Kg | கடல் உப்பு / Sea Salt | $ 1.00 |
| 20 lb | Golden Temble | $ 8.99 |
| 354 ml | Carnation Milk ..‹‹4 For›› | $ 5.00 |
| 810 g | நண்டு.‹‹Vaaniy / small-Box›› | $ 6.99 |
| 1 Kg | கணவாய் .......‹‹Box›› | $ 7.99 |

| Qty | Item | Price |
|---|---|---|
| 8 Lbs | மைசூர் பருப்பு | $ 3.99 |
| 8 Lbs | துவரம் பருப்பு | $ 7.99 |
| 8 Lbs | கடலைப் பருப்பு | $ 7.99 |
| 8 Lbs | பயத்தம் பருப்பு ...‹‹Whole›› | $ 6.99 |
| 8 Lbs | உளுத்தம் பருப்பு.....‹‹Half›› | $ 5.99 |
| 8 Lbs | உளுத்தம் பருப்பு..‹‹Whole›› | $ 5.99 |
| 8 Lbs | வெள்ளைக் கடலை | $ 7.99 |
| 5 Kg | கறுப்புக் கடலை | $ 8.99 |
| 8 Lbs | அரிசிமா ...‹‹Niru/Vaaniy/Jey›› | $ 6.99 |
| 8 Lbs | அவித்தமா ..........‹‹URB›› | $ 3.99 |
| 10 Lbs | அவித்தமா .......‹‹Uruthira›› | $ 5.99 |



**2 FOR .99¢**
- வெந்தயம்
- கடுகு • பப்படம்
- செ.மிளகாய்
- மோர்மிளகாய்

**.99¢**
- மல்லி • மல்லிப் பவுடர்
- சோயாமீற் ‹‹Delmedge››
- கற்கண்டு ‹‹200g - Uruthira››
- சக்கரை ‹‹400g - Uruthira››

**.99¢**
- சின்ன சீரகம் / பவுடர் ‹‹200g››
- பெரிய சீரகம் / பவுடர் ‹‹200g››
- மஞ்சள் • மிளகாய் பவுடர்
- Can Item ‹‹Nupak- 540ml››

கத்தரிக்காய் **Eggplant** Lb **.99¢**

அப்பிள் **Apple** Lb **.79¢**

பயற்றங்காய் **Long Bean** Lb **$1.99**

தக்காளி **Tometes** Lb **.79¢**

எலுமிச்சம்பழம் **Lemon** 7 pcs **$1.0**

மரவள்ளி கிழங்கு **Casava** Lb **.69¢**

வாழைப்பழம் **Bananes** Lb **.39¢**

முருங்கைக்காய் **Drumstick** Lb **$2.9**

கீரை **Spinach** « Cello » 6 onz **$1.49**

உருளைக்கிழங்கு **Potatoes** 10 Lb **$1.49**

இஞ்சி **Ginger** Lb **.99¢**

பாகற்காய் **Bitter Melon** Lb **$1.99**

மிளகாய்த்தூள் **Chilli Powder** ‹‹Niru›› 800 g **$5.99**

தேயிலை **Ceylon Tea** ‹‹Red Lebel›› 216 bags **$4.99**

வெங்காயம் **Onions boilor** « Small » Limit 1 10 Lb **$1.00**

உப்பு **Salt** ‹‹Sunbec›› 1 Kg **.69¢**

**Veg OIL** ‹‹La Perla›› 3 Li **$4.99**

**Veg OIL** ‹‹Dubon›› 16 Li **$21.99**

மீன்ரின் **Tin Fish** ‹‹Araliya›› 425 g **$1.99**

ரவை **Sooji** 8 Lb **$4.99**

9வது ஆண்டு நிறைவை முன்னிட்டு
எதிர்வரும் 10ஆம் திகதி (10.04.2018)
எமது ஸ்தாபனத்தில்
கொள்வனவு செய்யும் (Minmum 10$)
முதல் 200 வாடிக்கையாளர்களுக்கு
10 Lb உருளைக்கிழங்கு
***இலவசம்**

***FREE**
$100க்கு மேல்
கொள்வனவுசெய்து
8 Lbs ‹‹Wah››
பசுமதி அரிசியினை
இலவசமாக
பெற்றுக்கொள்ளுங்கள்

தயிர் **Yogurt** ‹Halali›› 750 ml **$1.49**

வாடிக்கையாளர்கள், நண்பர்கள் அனைவருக்கும் எமது சித்திரைப் புதுவருட நல் வாழ்த்துகள்

**5925, VICTORIA AVE. MONTREAL, 514-342-4229**

# சர்வதேசம் சம்பந்தனுக்கு சாதகமாக நிற்கின்றதா?



சர்வதேசத்தையும் உலக நாடுகளையும் சம்பந்தன் அதிகளவில் நம்புகின்றார். எனினும் சர்வதேசமும் அவருக்கு சாதகமாக செயற்படுகின்றதா என்பதே அவசியமானது. சம்பந்தன் அவர்களின் வழிநடத்தல் படியே செயற்படுகின்றார்.

குறிப்பாக, அமெரிக்காவும், இந்தியாவும் கூறுகிறபடி நடந்து கொள்கிறார்கள் என்ற விமர்சனம், சம்பந்தன், மீதும் சுமந்திரன் மீதும் அதிகமாக முன்வைக்கப்பட்டு வந்திருக்கிறது.

இந்த விமர்சனங்கள் தனியே கூட்டமைப்பின் அரசியல் போட்டியாளர்களால் முன்வைக்கப்படுபவை மாத்திரமல்ல, வடக்கு மாகாண முதலமைச்சர் சி.வி. விக்கினேஸ்வரனும் கூட அண்மையில் இதனை நாசூக்காக குறிப்பிட்டிருந்தார்.

இந்த நிலையில், சர்வதேச நிகழ்ச்சி நிரலுக்கு அமையவே கூட்டமைப்புத் தலைமை செயற்படுகிறதா என்பதே இப்போதுள்ள கேள்வியும் விவாதமும் ஆக இருக்கிறது.

இந்தச் சூழலில் தான், கடந்த வாரம் அமிர்தலிங்கம் சிலை திறப்பு விழாவில் இரா.சம்பந்தன், கனமான அரசியல் உரை ஒன்றை நிகழ்த்தியிருந்தார்.

தமிழ் மக்களின் அரசியல் உரித்துகள், சுயநிர்ணய உரிமை, சர்வதேச நகர்வுகள் பற்றியெல்லாம் இந்த நிகழ்வின் போது அதிகம் பேசியிருந்தார் சம்பந்தன்.

இரா.சம்பந்தன், உள்ளூராட்சித் தேர்தலில் தனது உடல் நலனைப் பற்றிக் கூட கவலைப்படாமல், ஒவ்வொரு இடமாகச் சென்று பிரசாரம் செய்திருந்தார்.

தேர்தல் பிரசாரங்களின் போது அவர் முன்வைத்த கருத்துக்களை விட, இப்போது மிகத் தீவிரமான கருத்துக்களை வெளியிட்டிருக்கிறார்.

தேர்தலில் ஏற்பட்ட பின்னடைவு அதற்கு ஒரு காரணமாக இருக்கலாம்.

இரா.சம்பந்தன் அண்மைக் காலத்தில் தமிழ் மக்களின் உரித்துகள், உரிமைகள் தொடர்பாக மிகவும் கனதியான விடயங்களுடன், ஆற்றிய உரையாக இதனைக் குறிப்பிடலாம்.

இந்த உரையில் அவர், 'சர்வதேச சமூகம் முழுமையாக எங்களுடன் நிற்கிறது. பிராந்திய வல்லரசு எங்களுக்கு நியாயம் வழங்க வேண்டும் என்று உறுதியாக நிற்கின்றது. பல நாடுகள் பல பிராந்தியங்களும் எங்களுக்கு ஆதரவு வழங்குகின்றன' என்றும் குறிப்பிட்டிருந்தார்.

சுருங்கச் சொன்னால், சர்வதேச் ஆதரவை பெற்றுக் கொண்டிருக்கின்றோம் என்று அவர் கூறியிருக்கிறார். பிரதான நாடுகளின் ஆதரவு தமக்கு இருக்கிறது என்பதை சம்பந்தன் வெளிப்படுத்தியிருக்கிறார்.

இது தமிழ்த் தேசியக் கூட்டமைப்பை சுட்டுவதாக இருக்கவில்லை. தமிழ் மக்களைக் சுட்டுவதாகவே இருக்கிறது.

சர்வதேச சமூகத்தின் எதிர்பார்ப்புகள் என்ன, தேவைகள் என்ன என்பதை, தமிழர் தரப்பில் உள்ள ஏனைய கட்சிகள், ஊடகவியலாளர்கள், தமிழ் மக்களை விட அதிகம் அறிந்தவர் என்று சம்பந்தனைக் குறிப்பிடலாம்.

அவர் சர்வதேச ஆதரவை தமிழர் தரப்பு முழுமையாகப் பெற்றிருக்கிறது என்ற கருத்தை முன்வைத்திருந்தாலும், அடுத்த கட்டம் பற்றிய சர்வதேச சமூகத்தின் நிலைப்பாடு என்ன என்பதை அறியவில்லை என்பதை அவரது உரை உணர்த்தியிருந்தது.

"சர்வதேசம் எம்மைக் கைவிட்டு விட முடியாது. அடுத்து என்ன செய்யப் போகிறார்கள் என்பதை எமக்குக் கூற வேண்டும்' என்று சம்பந்தன் உரையாற்றியிருக்கிறார்.

எனவே, பொறுப்புக்கூறல், நீதி, மற்றும், அரசியல் தீர்வு தொடர்பான தற்போதைய நகர்வுகள் தோல்வியுற்றால், சர்வதேச சமூகம் அடுத்து என்ன செய்யும் என்ற தெளிவான பதில் சம்பந்தனிடம் இல்லை.

சர்வதேச ஆதரவைப் பெற்றிருக்கக்கூடிய ஒரு தரப்பாக இருந்தாலும், ஐ.நா.சாசனங்களின்படி, சுயநிர்ணய உரிமையைக் கொண்டவர்களாக இருந்தாலும், தமிழர் தரப்பினால், தமக்கான நீதியையோ, உரிமையையோ பெறக்கூடிய நிலை இன்று வரை இல்லை.

அப்படியானால், இரா.சம்பந்தன் கூறுவது போல, சர்வதேச ஆதரவு எமக்கு இருப்பது என்பது சரியானதா?

சர்வதேச ஆதரவு தமிழர்களுக்கு சாதகமாக இருந்தால், உரிய நேரத்தில், சரியான நீதி தமிழர்களுக்கு கிடைத்திருக்க வேண்டுமல்லவா?

சரியான நேரத்தில், தமிழர்களுக்கு கிடைக்க வேண்டிய உரிமைகள் கிடைக்காத போது, சர்வதேச ஆதரவு இருக்கிறது என்ற கருத்து எந்தளவுக்கு சரியானது? என்ற பல்வேறு வினாக்கள் இத்தருணத்தில் எழுகின்றன.

இந்த நிலையில் சர்வதேச ஆதரவு என்பது என்ன? என்று முதலில் பார்க்க வேண்டியிருக்கின்றது.

ஏனென்றால், இலங்கை அரசாங்கமும் கூட தனக்கு சர்வதேச ஆதரவு இருப்பதாககத் தான் கூறிக் கொண்டிருக்கிறது. மஹிந்த ராஜபக்ஷ ஆட்சிக் காலத்தில் சர்வதேச அளவில் இலங்கை தனிமைப்படுத்தப்பட்டு வந்தது.

ஆனால் தற்போதைய அரசாங்கம் அவ்வாறு இல்லை. எல்லா நாடுகளுடனும் நெருங்கிய நட்புறவை ஏற்படுத்தியிருக்கிறது. எமக்கு உலகில் எதிரி நாடுகளே இல்லை. எல்லாமே நட்பு நாடுகள் தான். வெளிநாடுகளுடன் உறவுகளைப் பலப்படுத்தி வைத்திருக்கிறோம் என்று அரசாங்கம் சொல்கிறது.

அரசாங்கமும் சொல்கிறது. சர்வதேச ஆதரவு இருக்கிறது என்று, இரா.சம்பந்தனும் சொல்கிறார். சர்வதேச ஆதரவு இருக்கிறது என்று, அப்படியானால் சர்வதேசம் இரட்டை வேடம் போடுகிறதா?

சர்வதேசத்தின் ஆதரவு என்பது வேறு, அனுதாபம் என்பது வேறு. சர்வதேச அனுதாபத்தைப் பெறுவது கடினமான காரியமல்ல. ஆனால் ஆதரவைப் பெறுவது சுலபமான விடயமில்லை.

இரா.சம்பந்தன் சொல்வது போல, தமிழ் மக்களின் மீது சர்வதேசம் கொண்டிருப்பது ஆதரவா அனுதாபமா என்று பார்க்கவேண்டும். இதனை முதலில் பகுத்தறிந்து கொள்ள வேண்டியுள்ளது.

தமிழர்களின் பக்கத் நீதி உள்ளது. நியாயம் உள்ளது. உரிமைகள் உள்ளன என்பதற்கு அப்பால், தமிழர்கள் நீண்ட துயரங்களைச் சந்தித்திருக்கிறார்கள். அழிவுகளை எதிர் கொண்டிருக்கிறார்கள் என்ற கவலையையும், அனுதாபத்தையும் தான் சர்வதேசம் கொண்டிருக்கிறது.

இப்போது, இலங்கைப் பிரச்சினை தொடர்பாக கருத்து வெளியிடும் நாடுகள் எல்லாமே, கடந்தகால மீறல்களுக்கு நியாயம் வழங்கப்பட வேண்டும் என்று தான் கூறுகின்றனவே தவிர, தமிழர்களுக்கு இன்ன இன்ன உரிமைகள் வழங்கப்பட வேண்டும். இன்ன இன்ன நியாயங்களைப் பெற அவர்கள் உரித்துடையவர்கள் என்று கூறுவதில்லை.

(..50..ம் பக்கம் பார்க்க)

# வல்வெட்டித்துறை நகர சபை முதல்வர் பதவியும் கூட்டமைப்பு வசமாகியது

வல்வெட்டித்துறை நகர சபை முதல்வர் பதவியையும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு கைப்பற்றியுள்ளது. புதன்கிழமையன்று நடந்த, சபையின் முதலாவது அமர்வில், நகர சபையின் புதிய முதல்வராக கோணலிங்கம் கருணானந்தராசா தெரிவு செய்யப்பட்டார். நகர முதல்வர் பதவிக்கு தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு சார்பில் கோணலிங்கம் கருணானந்தராசாவின் பெயர் முன்மொழியப்பட்டது. சுயேட்சைக் குழுவின் சார்பில், சபாரத்தினம் செல்வேந்திராவின் பெயர் முன்மொழியப் பட்டது.எ இதையடுத்து நடத்தப்பட்ட வாக்கெடுப்பில், கோணலிங்கம் கருணானந்தராசா 9 வாக்குகளைப் பெற்று, முதல்வராகத் தெரிவு செய்யப்பட்டார். சபாரத்தினம் செல்வேந்திராவுக்கு, 4 வாக்குகள் கிடைத்தன. அதேவேளை, ஆறுமுகம் ஞானேந்திரன் பிரதி முதல்வராகத் தெரிவு செய்யப்பட்டுள்ளார்.

# ஆனந்தசுதாகரனுக்கு மன்னிப்பு வழங்கி விடுதலை செய்யுங்கள்

## வடமாகாண முதலமைச்சர் ஜனாதிபதிக்கு கடிதம்

அரசியல் கைதியாக கைதுசெய்யப்பட்டு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்ட கிளிநொச்சியைச் சேர்ந்த சச்சிதானந்தம் ஆனந்தசுதாகரனுக்கு மன்னிப்பு வழங்கி விடுதலை செய்யுமாறு வடக்கு மாகாண முதலமைச்சர் சி.வி.விக்கினேஸ்வரன் ஜனாதிபதியிடம் வேண்டுகோள் விடுத்தள்ளார். இவ்விடயம் குறித்த அவர் ஜனாதிபதிக்கு அனுப்பியுள்ள கடிதத்தில் மேலும் தெரிவிக்கப்பட்டுள்ளதாவது:

கிளிநொச்சியைச் சேர்ந்த அரசியல் கைதியான சச்சிதானந்தம் ஆனந்தசுதாகரனின் மனைவி யோகராணி அண்மையில் நோயுற்றிருந்த நிலையில் காலமானார். யோகராணியின் இறுதிக் கிரியைகள் கடந்த 18ஆம் திகதி இடம்பெற்றபோது மனைவியின் இறுதிக் கிரியைகளில் கலந்துகொள்வதற்கு ஆனந்தசுதாகரனுக்கு 3 மணி நேரம் சிறைவிடுப்பு வழங்கப்பட்டு அழைத்து வரப்பட்டார்.

தாயின் பூதவுடலுக்கு மகன் தீமூட்டி அழைத்துச் செல்லப்பட்டதும் அரசியல் கைதி, சிறை அதிகாரிகளால் சிறைச்சாலை வாகனத்தில் ஏற்றப்பட்டார். அவரது சிறு வயது மகளும் செல்வதற்கு வேறு இடம் தெரியாமல் தந்தையுடன் சிறைச்சாலை வாகனத்தில் ஏறியுள்ளார். இதைக் கண்ணுற்ற பொலிஸ் அதிகாரிகள் கண்ணீர் வடித்தனர். இந்தத் தகவல் ஊடகங்களில் வெளியானது.

ஆனந்தசுதாகரனின் இரண்டு பிள்ளைகளினதும் உதவியற்ற நிலையைக் கவனத்தில் கொண்டு உங்கள் மேலான அலுவலகத்தின் மூலம் இந்த ஆயுள் கைதிக்கு மன்னிப்பு வழங்க வேண்டும். பல ஊடகங்களும் இந்த வேண்டுகோளையே விடுத்துள்ளன. கைதியான ஆனந்தசுதாகரனை மனிதாபிமான அடிப்படையில் விடுதலை செய்யுமாறு கேட்டுக்கொள்கின்றேன். இதனை நீங்கள் மறுக்கமாட்டீர்கள் என நம்புகிறேன் என்றும் தெரிவித்துள்ளார்.

(49ம் பக்கத் தொடர்ச்சி)

# சர்வதேசம் சம்பந்தனுக்கு சாதகமாக நிற்கின்றதா?

இதனை, தமிழ் மக்களின் பிரச்சினைகளின் மீது சர்வதேசம் கொண்டிருக்கின்ற அனுதாபமாகத் தான் பார்க்க முடிகிறது. அவ்வாறான நிலையில் அவர்கள் இருப்பதால் தான், பொறுப்புக் கூறலுக்கு அப்பாற்பட்ட தமிழர்களின் நீதியின் மீது, உரிமைகளின் மீது அவ்ர்கள் அதிகம் கவனம் செலுத்தவில்லை.

ஆதரவு என்றால், எல்லாவற்றிலும், எல்லா விதத்திலும் உறுதுணையாக இருப்பதுதான் ஆதரவு. ஒருவருக்குக் கிடைக்க வேண்டிய உரிமையைத் தட்டிக் கேட்பது, உறுதியாகப் பேசுவது, எல்லாமே அதற்குள் அடங்கும்.

அனுதாபத்தை யார் மீதும், யாரும் செலுத்தலாம். ஆனால் ஆதரவை எல்லோராலும் எல்லா வேளைகளிலும் வழங்கமுடியாது.

தமிழ் மக்களின் மீது சர்வதேசம் கொண்டிருப்பது வெறுமனே அனுதாபமாக இருக்குமானால், அவர்கள் இந்தப் பிரச்சினையை, ஒருபோதும், அடுத்த கட்ட கடமையோ அவர்களுக்கு இருக்காது.

ஏதோ பெயருக்காக, அறிக்கைகளை வெளியிடுவார்கள். தீர்மானங்களை முன்வைப்பார்கள். அவ்வப்போது நிதி உதவிகளை வழங்குவார்கள். அதற்கு அப்பால், தாமாக களம் இறங்கி பாதிக்கப்பட்ட தரப்புக்கு நீதியைப் பெற்றுக் கொடுக்கவோ, உரிமைகளைப் பெற்றுக் கொடுக்கவோ களம் இறங்க மாட்டார்கள்.

ஆதரவு நிலையில் உள்ளவர்கள் நிச்சயம் அதற்கு எதிர்மாறான நிலையில் இருப்பார்கள். தாம் ஆதரிப்பவர்களுக்காக தம்மையும் தியாகம் செய்து ஈடுபாடுகளை வெளிப்படுத்துவார்கள்.

இந்தக் கோணத்தில் சிந்திக்கும் போது, சர்வதேசம் தமிழ் மக்களின் பக்கம் நிற்கிறது என்ற கருத்து. அனுதாபத்தின் பாற்பட்டதா, ஆதரவின் பாற்பட்டதா என்ற கேள்விக்கு பதில் ஒன்றைத் தேட முடியும்.

தமிழ் மக்களின் பக்கம் உள்ள நியாயங்களையும், கிடைக்க வேண்டிய நீதி மற்றும் உரித்துக்களையும், சர்வதேச சமூகம் புரிந்து கொண்டிருந்தாலும், அதனை அனுதாப நிலையைக் கடந்து ஆதரவு நிலைக்கு மாற்றுவது தான் முக்கியமானது.

அவ்வாறான நிலை மாற்றம் ஒன்று அடைந்தால் தான், சர்வதேச ஈடுபாடு என்பது, வலுவானதாக இருக்கும். அவ்வாறான நிலை மாற்றம் அடைவதில், பூகோள அரசியலுக்கு முக்கியமான பங்கு உள்ளது.

பூகோள அரசியலில் தமிழர்கள் எந்த நிலையில் இருக்கிறார்கள். இலங்கை அரசு எந்த நிலையில் இருக்கிறது என்ற மதிப்பீடுகளை செய்து, யாருடனான உறவாடல் தமக்குச் சாதகமாகும் என்பதைக் கணித்தே, சர்வதேச சமூகத்தின் நிலை மாற்றம் நிகழும்.

இப்போதுள்ள நிலையில், பூகோள அரசியல் என்பது, இலங்கை அரசுக்கு சாதகமாகவே இருக்கிறது. இது நிலை மாற்றத்துக்கு ஒரு தடையாக இருக்கும்.

ஆனாலும், சர்வதேச சமூகத்தின் அனுதாபத்தை ஆதரவாக மாற்றிக் கொள்ளும் வரையில், சர்வதேசத்தின் ஊடாக, தமிழர் தரப்புக்கு எந்தத் தீர்வும் வரப்போவதில்லை.

உலக நாடுகள் எமது பக்கம் இருக்கின்ற என்று கூறினாலும், இரா.சம்பந்தனிடம் ஒரு வெறும் இருக்கிறது. அடுத்து அவர்கள் என்ன செய்வார்கள் என்ற் கேள்வி இருக்கிறது. அதுதான், தமிழர்களை சர்வதேசம் எந்த இடத்தில் வைத்திருக்கிறது என்பதற்கான அடையாளம்.

சர்வதேசம் ஆதரவு நிலையில் இருக்கிறது என்பது உறுதியானால், இரா.சம்பந்தன், அடுத்து என்ன செய்வர்கள் என்பதை, தமிழ் மக்களுக்கு கூறக்கூடிய நிலையில் இருந்திருப்பார்.

# சினிமா செய்திகள்

## காதலர் விக்னேஷ் சிவனை மணக்கிறார் திருமணத்துக்கு தயாராகும் நயன்தாரா



நயன்தாரா விக்னேஷ் சிவன் காதல் விவகாரம் பட உலகில் பரபரப்பாக பேசப்படுகிறது. சமூக வலைத்தளங்களிலும் ரசிகர்கள் இதையே பதிவிட்டவண்ணம் இருக்கிறார்கள். நானும் ரவுடிதான் படப்பிடிப்பில் இருவரும் காதல் வயப்பட்டதும் பொது நிகழ்ச்சிகளில் ஜோடியாக கலந்துகொண்டதும் பழைய கதை. இருவருக்கும் ரகசியமாக திருமணம் முடிந்துவிட்டது என்றும் கிசுகிசுத்தனர். இந்த நிலையில் சமீபத்தில் நடந்த நிகழ்ச்சியொன்றில் நயன்தாரா பேசும்போது, "எனது வருங்கால கணவருக்கு நன்றி" என்று சொன்ன வார்த்தை சமூக வலைத்தளங்களில் வைரலானது. இதன்மூலம் விக்னேஷ் சிவனுடன் நிச்சயதார்த்தம் முடிந்துள்ளதை அவர் உறுதிப்படுத்தி இருப்பதாக கூறப்பட்டது.

கேரளாவில் உள்ள அவரது வீட்டில் குடும்பத்தினர் மட்டும் பங்கேற்க ரகசியமாக நிச்சயதார்த்தம் நடத்தியதாக தகவல் கசிந்துள்ளது. நிச்சயதார்த்தம் முடிந்த பிறகே இருவரும் அமெரிக்காவுக்கு பறந்து ஜாலியாக சுற்றிவிட்டு கேரளா திரும்பி உள்ளனர். அமெரிக்காவில் நெருக்கமாக எடுத்துக்கொண்ட புகைப்படங்களையும் டுவிட்டரில் வெளியிட்டனர். இந்த படங்கள் குறித்த கேள்விக்கு, "நான் ஆசீர்வதிக்கப்பட்டு இருக்கிறேன்" என்று விக்னேஷ் சிவன் பதில் அளித்தார். நயன்தாராவுக்கு இப்போது இமைக்கா நொடிகள், கொலையுதிர் காலம், கோலமாவு கோகிலா, தெலுங்கில் 'சை நரசிம்ம ரெட்டி' என்று கைநிறைய படங்கள். அஜித்குமாரின் விசுவாசம் படத்துக்கும் ஒப்பந்தமாகி உள்ளார்.

மறைந்த ஆந்திர முதல்மந்திரி ராஜசேகர ரெட்டி வாழ்க்கை வரலாறு படத்திலும் அவரது மனைவி கதாபாத்திரத்தில் நடிக்க பேசி வருகின்றனர். அடுத்த சில மாதங்கள் சினிமாவில் ஓய்வில்லாமல் நடித்துக்கொண்டு இருப்பார் என்றும், இந்த வருடம் இறுதியில் நயன்தாராவுக்கும், விக்னேஷ் சிவனுக்கும் திருமணம் நடக்கும் என்றும் இருவருக்கும் நெருக்கமானவர்கள் சொல்கிறார்கள். திருமணத்துக்கு பிறகு சினிமாவை விட்டு ஒதுங்கும் முடிவில் இருக்கிறார் என்றும் கூறப்படுகிறது.

## மீண்டும் 'பிக் பாஸ்' நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்குகிறார் கமல்ஹாசன்!




'பிக் பாஸ்' நிகழ்ச்சியின் இரண்டாவது சீஸனையும் கமல்ஹாசனே தொகுத்து வழங்குவதாக கூறப்படுகிறது. விஜய் தொலைக்காட்சியில் ஒளிபரப்பாகி சூப்பர் ஹிட்டான நிகழ்ச்சி 'பிக் பாஸ்'. கடந்த வருடம் ஒளிபரப்பான இந்த நிகழ்ச்சியை, நடிகரும், மக்கள் நீதி மய்யத்தின் தலைவருமான கமல்ஹாசன் தொகுத்து வழங்கினார். மொத்தம் 100 நாட்களுக்கு இந்த நிகழ்ச்சி ஒளிபரப்பானது.

நமிதா, காயத்ரி ரகுராம், சக்தி பி.வாசு, ஆரவ், ஓவியா, பிந்து மாதவி, கணேஷ் வெங்கட்ராம், வையாபுரி, கஞ்சா கருப்பு, ஜூலி, சினேகன், ரைஸா வில்சன், ஆர்த்தி, சுஜா வருணி, பரணி என மொத்தம் 19 பேர் போட்டியாளர்களாகக் கலந்துகொண்டனர். இதில், ஆரவ் வெற்றி பெற்றார். ட்விட்டரில் மட்டுமே தன்னுடைய கருத்துகளையும், மத்திய மற்றும் மாநில அரசுகளின் மீதான விமர்சனத்தையும் வைத்துவந்த கமல்ஹாசன், இந்த நிகழ்ச்சியில் தான் வெளிப்படையாகப் பேச ஆரம்பித்தார். குறிப்பாக, அரசியல் குறித்து அவர் பேசிய முதல் மேடை இதுதான். அதன்பிறகுதான் தீவிர அரசியலில் இறங்கி, தற்போது கட்சியையும் தொடங்கியுள்ளார். இந்நிலையில், 'பிக் பாஸ்' சீஸன் 2 வருகிற ஜூன் மாதம் தொடங்க இருக்கிறது. அதையும் கமல்ஹாசனே தொகுத்து வழங்கப் போகிறார் என்கிறார்கள். கட்சிப் பணிகளுக்கு இடையில் 'இந்தியன் 2' படத்தில் நடிக்க இருக்கும் கமல், நிகழ்ச்சியையும் தொகுத்து வழங்க இருக்கிறார்.

## சினேகனுக்கு ஜோடியாகிறார் ஓவியா?



சினேகன் நடிக்கும் 'பனங்காட்டு நரி' படத்தில், அவருக்கு ஜோடியாக ஓவியா நடிக்கப் போகிறார் என்கிறார்கள். சினேகன் நடிப்பில் உருவாக இருக்கும் படம் 'பனங்காட்டு நரி'. 'யமுனா' படத்தை இயக்கிய கணேஷ் பாபு இந்தப் படத்தை இயக்குகிறார். ஸ்ரீ விஷ்ணு கிரியேஷன்ஸ் படத்தைத் தயாரிக்கிறது.

இந்தப் படத்தில், சினேகனுக்கு ஜோடியாக நடிக்க ஓவியாவிடம் பேச்சுவார்த்தை நடைபெற்று வருகிறது. ஒன்லைன் கேட்டு ஓகே சொல்லிவிட்ட ஓவியா, முழுக்கதையையும் கேட்டிருக்கிறாராம். மலேசியாவில் கடந்த பிப்ரவரி மாதம் இந்தப் படத்தின் ஃபர்ஸ்ட் லுக்கையும் ஓவியா தான் வெளியிட்டார்.

## கல்லூரிக்கு சர்ப்ரைஸ் விசிட் அடித்த அஜித்



சென்னையிலுள்ள மெட்ராஸ் இன்ஸ்டிடியூட் ஆஃப் டெக்னாலஜிக்கு சர்ப்ரைஸ் விசிட் அடித்துள்ளார் அஜித். நடிக்க வருவதற்கு முன்பு மெக்கானிக்காக இருந்தவர் அஜித். பைக் மற்றும் கார் தொடர்பான அத்தனை விஷயங்களும் அவருக்கு அத்துப்படி. பைக், கார் பற்றிய லேட்டஸ்ட் விஷயங்களைக் கூட அப்டேட்டாக வைத்துக் கொள்வார். பைக், கார் மட்டுமின்றி, விமானம் பற்றியும் தெரிந்து கொள்ளும் ஆர்வம் அஜித்துக்கு ஏற்பட்டிருக்கிறது. 'குவாட்காப்டர்' பற்றித் தெரிந்து கொள்வதற்காக, குரோம்பேட்டையில் உள்ள மெட்ராஸ் இன்ஸ்டிடியூட் ஆஃப் டெக்னாலஜிக்கு சமீபத்தில் விசிட் அடித்துள்ளார். அஜித் வரும் தகவல் மிக ரகசியமாக வைக்கப்பட்டிருந்தும், எப்படியோ சில மாணவர்களுக்கு மட்டும் விஷயம் தெரிந்துவிட்டது. எனவே, 6 மணி நேரம் காத்திருந்து அஜித்துடன் புகைப்படம் எடுத்துள்ளனர். அந்தப் புகைப்படம் சமூக வலைதளங்களில் வைரலாகி வருகிறது.

# மூன்றாம் ஆண்டு நினைவஞ்சலி

## செல்வி. திலேஷா வரதன் (Concordia University Montreal)

திதி: சதுர்த்ததி
29-03-2018

ஆண்டு மூன்று கடந்தால் என்ன
காற்றில் கரைந்து போகுமா
சுவாசத்தில் கலந்திட்ட நினைவுகள்

வானத்தில் மிதக்கின்ற மேகமாய்
எப்பொழுதும் மனதுக்குள் நீங்காமல்
நிலைத்து நிற்கும் உன் நினைவுகள்

பாசத்திற்கும் பரிவுக்கும் பிரிவுக்கும் பின்னால்
தனிமையின் கண்ணீரின் ஆழத்தை
கண்கள் மட்டுமே அறிந்திருக்கும் மகளே!




உன் பிரிவால் துயருறும்
அப்பா, அம்மா, தங்கை, அம்மம்மா,
உற்றார், உறவினர், நண்பர்கள்

தொடர்புகளுக்கு 514 745 5926

# பத்தாம் ஆண்டு நினைவஞ்சலி

தோற்றம்
14-05-1935







மறைவு
16-03-2008

# திரு. முத்தையா ஆனந்தா

நெருநல் உளனொருவன் இன்றில்லை எனும்
பெருமை உடைத்து இவ் உலகு
- திருக்குறள் -

ஈழத்தில் கற்கோவளத்தைப் பிறப்பிடமாகக் கொண்டவரும், பருத்தித்துறை ஹாட்லிக் கல்லூரியில் கல்வி கற்றவரும், அரசாங்கத்தில் பிரதம லிகிதராகவும், பின் கனடாவில் மொழிபெயர்ப்பாளராகவும் கடமையாற்றிய அமரர் முத்தையா ஆனந்தா அவர்களின் 10ம் ஆண்டு நினைவஞ்சலி

எங்கள் அனைவர் உள்ளங்களிலும் வசந்தம் வீசும் தென்றலாய்
பாசத்தின் உறைவிடமாய் அன்பு உருவாய்
அகல் விளக்காய், ஒளி வீசிக் கொண்டிருக்கும்
எங்கள் பாசமிகு அப்பாவே!
கடமை, கண்ணியம், கட்டுப்பாடு என்று
நீங்கள் வாழ்ந்து காட்டிய வாழ்க்கை நெறி
இன்று இப் பாரினில் நாமும் சான்றோராய் வாழ வழி காட்டியதே
உங்கள் அன்பு அலைகளில் மிதந்த அந்த நாட்கள்
உங்கள் இனிய கரத்தினால் ஆற்றிய அனைத்தையும்
நினைத்து கண்ணீருடன் கை கூப்புகின்றோம்.
அப்பா ஆண்டு பத்து கடந்தாலும் தெய்வமாகிவிட்ட
உங்கள் நினைவுகள் நீங்காது நிலைத்து நிற்கும்.

**என்றென்றும் நினைவு கூறும்**
**மனைவி, மக்கள், மருமக்கள், பேரப்பிள்ளைகள்.**

**தொடர்புகளுக்கு:**

**905-794 6392**

# மீட்பர் கிறிஸ்து சபை

## Redeemer Christ Assembly
## Brampton

### பெரிய வெள்ளி - உயிர்த்தெழுந்த ஞாயிறு
### Good Friday & Easter

**மரித்தேன், ஆனாலும், இதோ, சதாகாலங்களிலும் உயிரோடிருக்கிறேன், ஆமென்' நான் மரணத்திற்கும் பாதாளத்திற்குமுரிய திறவுகோல்களை உடையவராயிருக்கிறேன்.- வெளிப்படுத்தின விசேஷம் 1: 18**

அன்பான வாசகப் பெருமக்களே!
தேவன், தம்முடைய ஒரேபேறான குமாரனை (இயேசுவை) விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்தியஜீவனை அடையும்படிக்கு, அவரைத் தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்புகூர்ந்தார். உலகத்தை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கும்படி தேவன் தம்முடைய குமாரனை (இயேசுவை) உலகத்தில் அனுப்பாமல், அவராலே உலகம் இரட்சிக்கப்படுவதற்காகவே அவரை அனுப்பினார். - யோவான் 3: 16

பிதாவாகிய தேவனால் அனுப்பப்பட்டவரான இயேசு, இவ்வுலகிற்கு மானிடனாய் மனுவுரெடுத்து வந்து, சகல மனுக்குலத்தின் பாவங்களுக்காக ஒரே பலியாக கல்வாரிச் சிலுவையிலே தமது ஜீவனை ஒப்புக்கொடுத்தார். மரித்த இயேசு மூன்றாம் நாம் உயிர்த்தெழுந்து மனித சமுதாயத்திற்கு, இலவசானதும், இலகுவானதுமான இரட்சிப்பை பெறும் வழியை ஏற்படுத்தினார்.

நாம் பாவிகளாயிருக்கையில் கிறிஸ்து (இயேசு) நமக்காக மரித்ததினாலே, தேவன் நம்மேல்வைத்த தமது அன்பை விளங்கப்பண்ணுகிறார். இப்படி நாம் அவருடைய இரத்தத்தினாலே நீதிமான்களாக்கப்பட்டிருக்க, கோபாக்கினைக்கு நீங்கலாக அவராலே நாம் இரட்சிக்கப்படுவது அதிக நிச்சயமாமே. நாம் தேவனுக்குச் சத்துருக்களாயிருக்கையில், அவருடைய குமாரனின் மரணத்தினாலே அவருடனே ஒப்புரவாக்கப்பட்டோமானால், ஒப்புரவாக்கப்பட்டபின் நாம் அவருடைய ஜீவனாலே இரட்சிக்கப்படுவது அதிக நிச்சயமாமே.- ரோமர் 5: 8-10

அன்பானவர்களே!!
இயேசுவின் பிறப்பு, உலக சரித்திரத்தையே இரண்டாகப் பிரித்து -கிறிஸ்துவிற்கு முன் - கிறிஸ்துவிற்குப் பின் என்று முழு உலகமே வருடங்களை கணக்கிடுவதை எவரும் மறுக்கவோ, மறைக்கவோ, மறுதலிக்கவோ, புறக்கணிக்கவோ, எந்த வித எதிர்ப்பும் இல்லாமல் உபயோகத்தில் இருப்பது மிகவும் குறிப்பிடத்தக்கது. இது தேவனால் உண்டானதென்பதும், இயேசுதாமே இவ்வுலகிற்கு மனுவுருவெடுத்து வந்த தெய்வம் என்பதையும் உறுதிப்படுத்துகிறது.

மேலும் அன்பானவர்களே!!
எங்கள் ஒவ்வொருவருடைய பாவங்களுக்காக பரலோகதிதிலருந்து இறங்கி மனு'னாக அவதரித்து தன் இரத்தம் முழுவதையும் விரயமாகக் கொடுத்து, பலியாகி மரித்து, தெய்வீக வல்லமையோடு மூன்றாம்நாள் உயிரோடு எழுந்த அந்த ஒரே பரிசுத்த தெய்வமாகிய இயேசு கிறிஸ்துவை உங்கள் தெய்வமாக ஏற்றுக்கொண்டு பாவம் நீங்கி, சமாதானத்தோடும், சந்தோ'த்தோடும் வாழ உங்கள் ஒவ்வொருவருக்காகவும் இறை ஆசி வேண்டி நிற்கிறோம். இயேசு மட்டுமே எமது பாவங்களை மன்னிக்க அதிகாரம் உள்ளவர். இயேசு நல்லவர். இயேசு ஒவ்வொருவரையும் நேசிக்கிறார். நாம் உங்களுக்காக ஊக்கமாக ஜெபிக்கிறோம்.
கர்த்தர் (கடவுள்) உருக்கமும், இரக்கமும், நீடிய சாந்தமும், மிகுந்த கிருபையுமுள்ளவர். அவர் எப்பொழுதும் கடிந்துகொள்ளார், என்றைக்கும் கோபங்கொண்டிரார். அவர் நம்முடைய பாவங்களுக்குத்தக்கதாக நமக்குச் செய்யாமலும், நம்முடைய அக்கிரமங்களுக்குத் தக்கதாக நமக்குச் சரிக்கட்டாமலும் இருக்கிறார். பூமிக்கு வானம் எவ்வளவு உயரமாயிருக்கிறதோ, அவருக்குப் பயப்படுகிறவர்கள்மேல் அவருடைய கிருபையும் அவ்வளவு பெரிதாயிருக்கிறது. மேற்குக்கும் கிழக்குக்கும் எவ்வளவு தூரமோ, அவ்வளவு தூரமாய் அவர் நம்முடைய பாவங்களை நம்மை விட்டு விலக்கினார். தகப்பன் தன் பிள்ளைகளுக்கு இரங்குகிறதுபோல, கர்த்தர் தமக்குப் பயந்தவர்களுக்கு இரங்குகிறார். நம்முடைய உருவம் இன்னதென்று அவர் அறிவார், நாம் மண்ணென்று நினைவுகூருகிறார். மனு'னுடைய நாட்கள் புல்லுக்கு ஒப்பாயிருக்கிறது, வெளியின் பு'பத்தைப்போல் பூக்கிறான். காற்று அதின் மேல் வீசினவுடனே அது இல்லாமற்போயிற்று, அது இருந்த இடமும் இனி அதை அறியாது. கர்த்தருடைய கிருபையோ அவருக்குப் பயந்தவர்கள்மேலும், அவருடைய நீதி அவர்கள் பிள்ளைகளுடைய பிள்ளைகள்மேலும்
அநாதியாய் என்றென்றைக்கும் உள்ளது. அவருடைய உடன்படிக்கையைக்கைக்கொண்டு, அவருடைய கட்டளைகளின்படி செய்ய நினைக்கிறவர்கள் மேலேயே உள்ளது. கர்த்தர் வானங்களில் தமது சிங்காசனத்தை ஸ்தாபித்திருக்கிறார், அவருடைய ராஜரிகம் சர்வத்தையும் ஆளுகிறது.- சங்கீதம் 103: 8-19

“கடைசியாக, சகோதரரே, உண்மையுள்ளவைகளெவைகளோ, ஒழுக்கமுள்ளவைகளெவைகளோ, நீதியுள்ளவைகளெவைகளோ, கற்புள்ளவைகளெவைகளோ, அன்புள்ளவைகளெவைகளோ, நற்கீர்த்தியுள்ளவைகளெவைகளோ, புண்ணியம் எதுவோ, புகழ் எதுவோ அவைகளையே சிந்தித்துக்கொண்டிருங்கள்.” பிலிப்பியா 4: 8

**இயேசுவின் உயிர்தெழுந்த நன்நாள் வாழ்த்துக்கள் உங்கள் அனைவருக்கும் உரித்தாகுக.**

**பாஸ்டர் அல்பிரட் செருபிம்**
**மீட்பர் கிறிஸ்து சபை**
**Redeemer Christ Assembly**
**Brampton**
**647 - 271 7645**

# மரண அறிவித்தல்

தோற்றம்
01
08
1966

மறைவு
25
03
2018







## திருமதி யோகலட்சுமி பாலச்சந்திரன்

வல்வெட்டித்துறையை பிறப்பிடமாகவும், கனடா ரொறொண்டோவை
வசிப்பிடமாகவும் கொண்ட யோகலட்சுமி பாலச்சந்திரன்
அவர்கள் 25.03.2018 அன்று சிவபதம் அடைந்தார்.

அன்னார் பாலச்சந்திரனின் அன்பு மனைவியும்,
காலஞ்சென்றவர்களான சோதிநாராயணசாமி ~ சற்குணபூபதி
அம்மாளின் அன்பு மகளும், காலஞ்சென்ற பாலகுருசாமி ~
அன்னராணி அம்மாளின் அன்பு மருமகளும்,
காலஞ்சென்ற அமரராசா, விஜயராசா, ஜெயராசா, யோகராசா
ஆகியோரின் அன்புத் தங்கையும், பிருந்தா, பாலகுமரன்
ஆகியோரின் அன்புத் தாயாரும் ஆவார்.

அன்னாரின் பூதவுடல் ஏப்ரல் 01ம் திகதி ஞாயிற்றுக்கிழமை காலை 9.00 தொடக்கம் மதியம்
10.30 வரை Glendale Funeral Home & Cemetery *located at* 1810 Albion Road,
Etobicoke, Ontario, M9W 5T1 இல் பார்வைக்காக வைக்கப்பட்டு முற்பகல் 10.30
தொடக்கம் அதே இடத்தில் கிரியைகள் நடைபெற்ற பின்னர் பிற்பகல் 2.00 மணியளவில்
அதே இடத்தில் தகனம் செய்யப்படும்.

இவ் அறிவித்தலை உற்றார், உறவினர்கள், நண்பர்கள் அனைவரும் ஏற்றுக்
கொள்ளும்படி கேட்டுக் கொள்கின்றோம்

தகவல் குடும்பத்தினர்

தொடர்புகளுக்கு
பாலச்சந்திரன் (கணவர்) 647 980 8134
தியாகு (பெறாமகன்) 416 845 8946

# மரண அறிவித்தல்

தோற்றம்
25 - 07 - 1925

மறைவு
29 - 03 - 2018



## திருவாளர். வேலாயுதம் பாலச்சந்திரன்

யாழ் நல்லூரைப் பிறப்பிடமாகவும், ஸ்காபரோவை வசிப்பிடமாகவும் கொண்ட திருவாளர். வேலாயுதம் பாலச்சந்திரன் (Sri Lanka Railways) அவர்கள் 29-03-2018 வியாழக்கிழமை அன்று இறைபதம் எய்தினார்.

அன்னார் காலஞ்சென்ற வேலாயுதம் பொன்னம்மா தம்பதியினரின் சிரேஸ்ட புத்திரனும் காலஞ்சென்ற கந்தையா-விசாலாட்சி அவர்களின் அன்பு மருமகனும், திருமதி. சிவயோகம் அவர்களின் ஆருயிர்க் கணவரும், ராஜபவானி, ராஜகுலேந்திரன், ரோகினி, ஜேயேந்திரன் அகியோரின் பாசமிகு தந்தையும், சிவகுமார், சுசீலா, கிருஸ்ணதேவன், வாசுகி ஆகியோரின் அருமை மாமனாரும், நவீன் - கேற் (Kate), வனஜா - கிறிஸ் (chris), சிந்துஜா – ரமணா, லக்ஸன் தர்ஸன், ராம் (Josh), ஹரி (Kevin) ஆகியோரின் அன்புப் பாட்டனாரும், ஆரியாவின் ஆசைப் பூட்டனாரும், ரவீந்திரன் (இலங்கை), பூவதி (கனடா), Dr. மகேந்திரன் (இலங்கை), மனோன்மணி (இலங்கை) ஆகியோரின் அன்புச் சகோதரனுமாவார்.

அன்னாரின் பூதவுடல் Chapel Ridge Funeral Home & Cremation Centre located at 8911 Woodbine Ave Markham Ont L3R 5G1 என்ற முகவரியில் 31-3-2018 சனிக்கழமை மாலை 5.00 மணிமுதல் 9.00 மணிவரை பார்வைக்காக வைக்கப்பட்டு மறுநாள் 01-04- 2018 காலை 6.00 மணிமுதல் 8.00 மணிவரை கிரியைகள் நடைபெற்று பின்னர் தகனம் செய்யப்படும்.

இவ் அறிவித்தலை உற்றார், உறவினர், நண்பர்கள் அனைவரும் ஏற்றுக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கின்றோம்.

தகவல்
சுசீலா இராஜகுலேந்திரன்



தொடர்புகளுக்கு
குலம்: 416 854 3169
ஜெயம்: 416 574 7370



# 1ம் ஆண்டு நினைவஞ்சலி

அன்னை மடியில்:
06.12.1927

ஆண்டவன் அடியில்:
11.04.2017



## திருமதி. தனபாக்கியலெட்சுமி துரைச்சாமி



அழகிய உங்கள் முகம் பார்த்து
ஓராண்டு ஆனால் என்ன
உங்கள் பாச நினைவுகள்
எங்களின் உயிர் மூச்சாய்
எம் செஞ்சமதில் வாழ்ந்து
கொண்டே இருக்கும்
எங்கள் ஆருயிர் ஆருயிர்த் தாயே
எங்கள் இதயத்தில் வாழும் தெய்வமே..

காலங்கள் பல கடந்தாலும் கண்மணிகள்
நாம் கலங்கி நிற்கின்றோம்
வாராயோ ஒருமுறை
வரம் ஏதும் தாரோயோ அம்மா

கண்ணுக்குள் மணிபோல் இமை
போல் காத்தோயே அம்மா...
உங்களை காலன் எனும் பெயரில் வந்த
கயவன் களவாடி சென்றதேனோ..
நீங்கள் விண்ணில் கலந்த நாள் முதல்
எங்கள் விழிகள் உங்களையே தேடுகின்றது..

மனிதருள் மாணிக்கமாய் மலர்ந்து மணம் வீசினீரே
கூடி வாழ்ந்து விட்டு அப்படி ஏன்
தவிக்க விட்டு சென்றீர்கள் அம்மா
உங்களைப் போல் ஓர் அன்னையை
இனி நாம் எப்பிறவியில் காண்போம் அம்மா ..

உங்கள் வழி நடத்தல் இன்றி
உங்கள் குரல் கேட்காது.
ஓவ்வொரு நொடிப் பொழுதும்
நாங்கள் ஏங்குகிறோம் அம்மா ..
உங்கள் அன்பும் பாசமும்
எங்களுக்கு வேண்டும் அம்மா..
எங்கள் உள்ளம் ஏங்குகின்றது
வழிமேல் விழி வைத்து காத்திருக்கின்றோம்
வந்து விடுங்கள் மீண்டும் எங்களிடம்
தாயே! தாயே!! தாயே!!!

உங்கள் ஆத்மா சாந்தியடைய எல்லாம் வல்ல
இறைவனைப் பிரார்த்திக்கும்
மக்கள், மருமக்கள்,
பேரப்பிள்ளைகள் மற்றும் பூட்டப்பிள்ளைகள்



தகவல் குடும்பத்தினர்

# BUTCHER
## BY CHARLIE'S WORLD OF MEAT

7075 Markham Rd, Markham, ON L3S 3J9
(Markha Road and Steeles Avenue)

# THE BIG SALE

இந்தியா, இலங்கை மீன் வகைகள் மற்றும் இறைச்சி இங்கு பெற்றுக் கொள்ளலாம்.

**Indian, Srilankan Fishes and Meats available here**



Mutton Meat
ஆட்டு இறைச்சி
பங்கு

SAVE $2 lb
4.97 lb

FRESH Mutton and Goat Meat
ஆட்டு இறைச்சி

Limit for 2 portion
(2 பங்கு)



Goat Meat
ஊர் ஆட்டு இறைச்சி
பங்கு







Glorious Prints : 905 471 2500

**PRICES EFFECTIVE FROM WEDNESDAY MARCH 28TH TO SUNDAY APRIL 15TH, 2018**

